# சிரவைத்தண்டபாணிக் கடவுள் பிள்ளைத்தமிழ்

நூலாசிரியர்
சிரவையாதீனம்
தவத்திரு கந்தசாமி சுவாமிகள்

உரையும் பதிப்பும்
சிரவையாதீனக் கவிஞர்
பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்



வெளியீடு
சிரவைக் கௌமார சபை
கௌமார மடாலயம், சின்னவேடம்பட்டி
கோவை - 641 049
2014

வெளியீட்டு எண் : 342

நூற் பெயர் : **சிரவைத்தண்டபாணிக்கடவுள் பிள்ளைத்தமிழ்**

நூலாசிரியர் : சிரவையாதீனம்
**தவத்திரு கந்தசாமி சுவாமிகள்**

உரையும் பதிப்பும் : பெரும்புலவர்
**ப.வெ. நாகராஜன்**

வெளியீட்டு நாள் : 30.10.2014, கந்தசட்டித் திருவிழா

படிகள் : 500

விலை : ரூ. 70.00

அச்சிட்டோர் : **சௌமி அச்சகம்**
1E, துடியலூர் சாலை,
சரவணம்பட்டி,
கோவை - 641 035.
அலைபேசி : 98422 52779

நூல் கிடைக்குமிடம் : தலைவர்
கௌமார மடாலயம்,
சின்னவேடம்பட்டி,
கோவை - 641 049.
தொலைபேசி : 0422-2666370

# ஆசியுரை



*தவத்திரு குமரகுருபர சுவாமிகள்,*
சிரவையாதீனம்

கொங்கு மண்டலம் பலகாலும் செய்த பற்பல புண்ணியங்களின் பயனாகத் தோன்றியருளியவர் சீர்வளர்சீர் இராமானந்த சுவாமிகள் அவர்கள். அவர்களால் தோற்றுவிக்கப்பட்ட கௌமார மடாலயத்தின் இரண்டாவது குருமகாசந்நிதானமாகப் பெரும்புகழ் பெற்று விளங்கியவர் தவத்திரு கந்தசாமி சுவாமிகள். கொங்கு நாட்டுப் புலவர்களிலேயே எண்ணிக்கையில் மிக அதிகமாகப் பாடியுள்ளவர் என ஆய்வாளர்களால் சுட்டப்படும் இச்சுவாமிகள் கற்றோர்களால் கொங்கு நாட்டுக் கச்சியப்பமுனிவர் எனப் போற்றப்படுகிறார்.

தவத்திரு கந்தசாமி சுவாமிகள் திருமால் அடியார்களின் வரலாறுகளைக் கூறும் பக்தமான்மியப் பெருங்காப்பியம் (7373 செய்யுள்கள்), மூன்று தலபுராணங்கள், ஆறு பிள்ளைத்தமிழ்கள், கோவை, கலம்பகம், சிலேடை வெண்பா, அலங்காரம் ஒவ்வொன்று, மாலை வகைகள் பல, அந்தாதி வகைகள் பல என ஏறக்குறைய 15000 பாடல்களை இயற்றியுள்ளார். இவர் இராமானந்த விஜயம் என்னும் உரைநடை நூலையும், சில செய்யுள் நூல்களுக்கு உரையும் படைத்துள்ளார். இத்தகைய மாபெரும் தமிழ்ச் சாதனை புரிந்துள்ள பெரும்புலவராகிய தவத்திரு கந்தசாமி சுவாமிகளுக்கு, இலக்கிய வரலாற்றில் இன்றுவரை உரிய இடம் கிடைக்கவில்லை.

இந்த நிலையை மாற்ற வேண்டும் என்னும் பேரவா எம்குருநாதர் போற்றுதலுக்குரிய கஜபூசைச் சுந்தர சுவாமிகளின் திருவுள்ளத்தில் ஆழப்பதிந்து இருந்தது. அந்தக் குருநாதரின் திருவருளால்

தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் படைப்புக்களை இலக்கிய முறையில் தமிழ் கூறும் நல்லுலகில் பரப்பும் பணியில் சிரவையாதீனம் இப்போது ஈடுபட்டுள்ளது.

தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் இலக்கியங்கள் தலவாரியாகத் தனித்தனி நூல்களாகத் தெளிவான உரையுடன் பதிப்பிக்கப்பட்டு வருகின்றன. இவற்றோடு சுவாமிகளின் 32 மாலைகள் (2000 செய்யுள்) தொகுக்கப்பட்டு உரையுடன் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பனுவல் திரட்டு என்னும் பெயரில் வெளியிடப்பட்டுள்ளது. இப்பனுவல் திரட்டின் இரண்டாம் தொகுதி பிள்ளைத்தமிழ்க் கொத்தாக அமைகிறது.

இந்த வகையில் இரண்டு பிள்ளைத் தமிழ்கள் ஏற்கெனவே பதிப்பிக்கப்பட்டுள்ளன. மூன்றாவதாக இப்போது இந்தச் சிரவைத் தண்டபாணிக்கடவுள் பிள்ளைத்தமிழ் வெளிவருகிறது.

சிரவையாதீனமாகிய கௌமார மடாலயத்தின் தலைமைக் கடவுள் அருள்மிகு தண்டபாணிக்கடவுள். தவத்திரு சந்நிதானங்கள், தவத்திரு கந்தசாமி சுவாமிகள், தவத்திரு கஜபூசைச் சுந்தரசுவாமிகள், இன்றைய ஆதீனகர்த்தர் தவத்திரு குமரகுருபர சுவாமிகள் ஆகிய நான்கு குருமகாசந்நிதானங்களாலும் வழிபடப்பட்ட மூர்த்தி இந்தத் தண்டபாணிக்கடவுள். இந்த ஆலயத்தில் எழுந்தருளும் திருமேனியின் (உற்சவர்) பெயர் குமரகுருபரர். இந்த முருகப் பெருமானைப் போற்றிப் பல சிற்றிலக்கியங்கள் எழுந்துள்ளன.

தவத்திரு சுவாமிகளின் நடை சற்றுக் கடினமாக இருந்தபோதிலும் இலக்கியச் சுவை தேனில் தோய்த்த பலாச்சுளை அனையது. சுவாமிகளின் படைப்புக்கள் அனைத்துமே இலக்கண வரம்பிற்குட்பட்ட செம்மையான பனுவல்கள் ஆகும். ஆறு பிள்ளைத்தமிழ்களும் அத்தகையனவே. மூன்றாவது பதிப்பாக உரையுடன் தனி நூலாக வெளிவரும் இந்தச் சிரவைப் பிள்ளைத்தமிழ் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பனுவல் திரட்டின் இரண்டாம் தொகுதியிலும் இடம்பெறும்.

இப்பதிப்பில் படிப்பவர்களின் நலம் கருதிச் செய்யுள்கள் பதம்பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன. தேவையான அளவு

உரையும் இடம் பெற்றுள்ளது. தோத்திரமாக மட்டும் அல்லாமல் இலக்கிய ரசனைக்காகவும் நல்ல சிற்றிலக்கியங்களை அன்பர்கள் கற்றுப் பயன் பெற வேண்டும்.

இந்தச் சிரவைத் தண்டபாணிக்கடவுள் பிள்ளைத்தமிழுக்கு உரைகண்டு நன்கு பதிப்பித்துள்ள நம் ஆதீனக் கவிஞர் பெரும்புலவர் திரு. ப.வெ.நா. அவர்களுக்கு எம் பாராட்டுக்கள். சிரவையாதீனத்தின் தமிழ் வளர்ச்சிப் பணிகளில் ஈடுபடும் அனைவரும் திருவருளாலும் குருவருளாலும் அனைத்து நற்பேறுகளையும் குறைவறப் பெற்று நீடினிது வாழ வாழ்த்துகின்றோம்.

**அண்டர்புகழ் ஆசானாய் ஆர்த்தபுகழ்ச் சீர்ச்சிரவைத்**
**தண்டணிசேய் பிள்ளைத் தமிழ்ப்பனுவல் - கொண்டன்பாய்க்**
**கற்றிடுவோர் என்றும் கனத்தபொருள் கல்வி**
**பெற்றிகத்தும் ஈட்டுவர்நற் பேறு.**





# பதிப்புரை

பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்
கௌமார மடாலயம்

தமிழ்ச் சிற்றிலக்கிய வகைகளுள் மிகுதியாகப் பாடப்பட்டுள்ள வகைகளுள் ஒன்று பிள்ளைத்தமிழ் ஆகும். இதுவரை முந்நூற்றுக்கு மேற்பட்ட பிள்ளைத்தமிழ் நூல்கள் தோன்றியுள்ளதாக அறிகிறோம்.

சிரவையாதீனம் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் மொத்தம் ஆறு பிள்ளைத்தமிழ்களை இயற்றியுள்ளார். அவற்றுள் ஒன்று சத்தி பரமானது; ஒன்று ஆந்திரநாட்டுப் பத்திராசல இராமனைப் போற்றுவது; இரண்டு முருகப் பெருமான் பற்றியது; இரண்டு குருபரமானவை.

கௌமாரப் பிள்ளைத்தமிழ்களுள் ஒன்றாகிய இது சிரவைஆதீனமாகிய கௌமார மடாலயத்தில் தலைமைக் கடவுளாக எழுந்தருளியுள்ள ஞானதேசிகனாகிய தண்டபாணிக்கடவுளைப் போற்றுவது. இச்சிற்றிலக்கியம் பாயிரமாக மூன்று செய்யுள்கள், நூலாக நூறு விருத்தங்கள்; நூற்பயன், வாழி என இரண்டு பாக்கள் ஆக மொத்தம் நூற்றைந்து கவிகளால் யாக்கப்பட்டுள்ளது. நூல், பிள்ளைத்தமிழ் மரபிற்கேற்ப இரட்டை ஆசிரிய வகைகள், பெரிய வண்ண விருத்தங்கள் ஆகிய யாப்பில் புனையப் பெற்றுள்ளது.

சிரவையாதீனம் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் அவர்கள் இருபதாம் நூற்றாண்டின் மிகப்பெரும் கவிஞர்களுள் ஒருவராக இருந்தும் அவருக்குத் தமிழ் இலக்கிய வரலாற்றில் உரிய இடம் தரப்படவில்லை. இது போற்றுதலுக்குரிய தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகளின் திருவுள்ளத்தில் ஒரு பெரும் வருத்தத்தை நிலைப்படுத்தியிருந்தது. அப்பெருங்குறை நீங்குவதற்காகக் கொங்கு நாட்டுக் கச்சியப்பமுனிவரின் குளிர்தமிழ்ப் பனுவல்கள் அனைத்தையும் சந்தி பிரித்து, தெளிவான உரையுடன், நல்ல

பதிப்பாகத் தமிழ் அறிஞருலகத்திற்கு அறிமுகப்படுத்தும் நற்பணியில் இன்றைய சந்நிதானம் தவத்திரு குமரகுருபர சுவாமிகள் அவர்கள் ஈடுபட்டுள்ளார்.

அம்முறையில் 32 சிற்றிலக்கியங்கள் அடங்கிய (மொத்தம் 2000 செய்யுள்) தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பனுவல் திரட்டு முதல் தொகுதி வெளியாகியுள்ளது. இதன் இரண்டாவது தொகுதி ஆறு பிள்ளைத்தமிழ்களை உரையுடன் கொண்டதாக அமைகிறது. அவற்றுள் இரண்டு நூல்கள் தனித்தனியே ஏற்கெனவே வெளியாகியுள்ளன. மூன்றாவதாகிய சிரவைத் தண்டபாணிக்கடவுள் பிள்ளைத்தமிழ் இப்போது வெளிவருகிறது. குருந்தமலை குழந்தை வேலாயுத சுவாமி பிள்ளைத்தமிழ் அடுத்து வர உள்ளது.

சிரவைப் பிள்ளைத்தமிழுக்கு இது மூன்றாவது பதிப்பு. இதில் பாடல்கள் சந்திபிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன. தேவையான அளவு உரை எழுதப்பட்டுள்ளது. இன்றியமையாத கதைக் குறிப்புகளும் இலக்கணக்குறிப்புகளும் தரப்பட்டுள்ளன. திட்டமிட்டே மிக விரிவான உரையும் விளக்கங்களும் தவிர்க்கப்பட்டுள்ளன. நூலைப் படித்துப் பொருளறிவுடன் சுவைப்பதற்கு இந்த விளக்கங்கள் போதுமானவை எனக் கருதுகின்றேன்.

தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் செறிவான புலமையின் பிரமாண்டத்திற்கு எதிரே எளியேனின் புல்லறிவு அணுவினைச் சத கூறிட்ட கோளினும் மாணச்சிறிது என நன்றாக உணர்ந்துள்ளேன். என்றாலும் வாழையடி வாழையாக இறைவனால் தமிழுக்கு அருளப்பட்டுள்ள உரையாசிரிய, பதிப்பாசிரிய வள்ளல்களின் திருவடித் தாமரைகளின் துகளைத் தலையில் சூடியுள்ள துணிவால் செயல்படுகின்றேன்.

இந்தச் சிறந்த தெய்வத்தமிழ்ப்பணியில் இடையறாது என்னை ஈடுபடுத்திவரும் போற்றுதலுக்குரிய சிரவையாதீனகர்த்தர் தவத்திரு குமரகுருபர சுவாமிகள் அவர்கள் திருமுன்புக்கு என் பணிவான நன்றியையும் வணக்கங்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தப் பிள்ளைத் தமிழைப் பேரார்வத்துடன் செம்மையாக

வடிவமைத்துக் கொடுத்துள்ள அன்பிற்குரிய சௌமி அச்சக உரிமையாளர்கள் திரு. தே. திருஞானசம்பந்தன், திருமதி. ந. லோகநாயகி இணையருக்கு என் நன்றியையும் நல்வாழ்த்துக்களையும் தெரிவிப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

வண்ணச் சரபகுரு வார்த்தெடுத்த மாமரபைத்
திண்ணமெனக் கொண்டு திகழ்சிரவை ஆதீனப்
பண்ணவனாம் தண்டணிசேய் பாலத் தமிழ்ப்பனுவல்
எண்ணமதில் கொண்டோரை என்றென்றும் வாழ்த்திடுமே.







நூலாசிரியர்

## தவத்திரு கந்தசாமி சுவாமிகள்

அணிநீடு கந்தச்சு வாமியே ! அதிஆர்வம் மிஞ்சச்சொல் பேசுவீர் !
திணியான சந்தத்தை ஓதுவீர் ! திறல்கூறும் இன்பத்த யாளரே !
தணியாத சிந்தைத்தி யானரே ! தவவாழ்வு மிஞ்சக்கொள் மேன்மையீர் !
மணிநீறு துன்றக்கொள் மேனியீர் ! வளர்மேன்மை என்றைக்கும் வாழியே !

– தவத்திரு கஜபூசைச் சுந்தரசுவாமிகள்

சிரவணபுரம் – கௌமார மடாலயம்
அருள்மிகு தண்டபாணிக்கடவுள் திருக்கோயிலில் நடைபெற்ற
56–ம் ஆண்டு இலட்சார்ச்சனை, கந்த சஷ்டித்திருவிழாவில்
(30.10.2014) வியாழக்கிழமையன்று வெளியிடப்பெற்றது.

## சிரவைத் தண்டபாணிக் கடவுள் பிள்ளைத்தமிழ்

### காப்பு வெண்பா

கிள்ளைத் தமிழ் உவக்கும் கேகய வேள் அன்பு அருளப்
பிள்ளைத் தமிழ்ப்பனுவல் பேசவே - கொள்ளைப்
புதுக் கடவுள் கோலம் புனைந்து விளையாடும்
பொதுக் கடவுள் பொன் பதம் காப்பு.

**கிள்ளைத்தமிழ்** - தம்வாழ்வின் இறுதியில் கிளியின் வடிவத்தை ஏற்ற அருணகிரிநாதரின் திருப்புகழ் முதலிய தமிழ்ப் பனுவல்களை, **உவக்கும்** - விரும்பி அணியும். **கேகய வேள்** - மயில்வாகனக் கடவுள். **அன்பு அருள** - தன் கருணையை வழங்க வேண்டும் என்பதற்காக, இறைவன்பால் நாம் காட்டும் அன்பு பக்தி; அவன் அருளும் அன்பு கருணை. **கொள்ளைப் புதுக் கடவுள் கோலம் புனைந்து** - ஏராளமான புதிய புதிய தெய்வ வடிவங்களை ஏற்று. **பொன்பதம்** - அழகிய திருவடிகள்.

குறிப்புரை : ஒரே பரம்பொருள் அடியார்கள் எப்படித் தியானிக்கின்றனரோ அப்படிக் காட்சியளித்து ஆட்கொள்கிறது. எல்லா வடிவங்களையும் பெயர்களையும் தாங்கி நின்று அருள்புரிவது ஒரே ஒரு பொதுத் தெய்வம்தான் என்பது வண்ணச்சரபர் காட்டும் கௌமாரத்தின் அடிப்படைத் தத்துவம். இவ்வாறு ஒரே பொருளைப் பலவாறாகக் கூறுவதால் அதன் பெருமை குன்றிவிடாது என்பதையும் அவர்,

ஒன்று ஆனதேவைப் பலஎன்று உரைப்பதால்
குன்றாது மேன்மை என்று உந்தீபற;
குரு சொல்வது உண்மை என்று உந்தீபற. (பதிக உந்தி 8)

என விளக்குகிறார்.

## விநாயகர் துதி
## *(இரட்டையாசிரிய விருத்தம்)*

பரசுஆன தொண்டுபுரி தொண்டர்கட்கு அண்டர்கள் -
பசுமலர்ச் சோனை பொழிய,
பரசான கையுடையன் வரைஅரையன் மகள்இடப் -
பால் கொள்ள மேற்கொள் கயிலைச்
சிரசுஆன வாழ்வு அமைய விடு துதிக்கை அணிச்
சிந்தூர சிந்தூர வத் -
திரம் உற்ற குடிலை அக்கரம் உற்ற தன் மயச்
சின்மயனை, நன்மயம் தோய்
அரசுஆன அரசுஆன வரசித்தி பிரசித்தி
அமை மகோற்கட தேவன்ஆம்
அபிதான முத்தான முத்து ஆன கொம்பனை அ -
கத்தானம் மீது அமைப்பாம் -
சரசு ஆனதில் பண் இசை வண்டு அகம் மொய் முண்டகம்
சால் சிரவை மேவு ஞான
தண்டு அணிகரத்தன் மிசை விண்டு அணிசெய் பிள்ளைத்
தமிழ்க்கவி தழைத்து இலகவே.

**பரசு ஆன தொண்டுபுரி தொண்டர்கட்கு** - துதித்தல் ஆகிய பணியைச் செய்கின்ற அடியார்களுக்கு, **அண்டர்கள் பசுமலர்ச் சோனைபொழிய** - தேவர்கள் குளிர்ச்சியான பூக்களை மழைபோல் சொரிய. **பரசு ஆன கை உடையன்** - மழுவாயுதத்தை ஏந்திய சிவபெருமான். **வரைஅரையன் மகள் இடப்பால் கொள்ள** - மலையரசனின் மகளாகிய பார்வதியைத் தன் இடப்புறத்தில் கொண்டு. **மேற்கொள் கயிலைச் சிரசு ஆன வாழ்வு அமைய** - எழுந்தருளியுள்ள கயிலாயமலையின் சிகரத்தில் இருக்கும்படியாக, கயிலாய பதவியைப் பெறுமாறு என்றபடி. **விடு துதிக்கை அணி** - ஔவையாரைத் தூக்கிவிட்ட தும்பிக்கையின் அழகை உடைய. **சிந்தூர சிந்தூர வத்திரம் உற்ற** - செம்மை நிறம் பெற்ற யானையின் முகத்தைப் பெற்றவரும். **குடிலை அக்கரம் உற்ற** - ஓங்காரம் ஆகிய பிரவணத்தில் இருப்பவரும் ஆகிய. சின்மயத்தன்மயனை எனுமாறுக, ஞானமயமாகவே இருத்தலைத் தன் இயல்பாகக் கொண்ட

விநாயகரை. **நன்மயம்நோய்** - மங்களகரம் நிறைந்த. ***அரசு ஆன*** - தலைவர் ஆனவரும். ***அரசு ஆன வரசித்தி பிரசித்தி அமை*** - அரச மரத்தினடியில் வரசித்தி விநாயகர் எனப் பெரும்புகழ் பெற்றுள்ளவரும் ஆகிய. **சித்திமகோற்கட தேவன் ஆம் அபிதான** - சித்திமகோற்கடர் என்னும் திருப்பெயரை உடைய. **முத்தான** - மூன்று மதங்களைப் பொழிகின்ற. **முத்து ஆம் கொம்பனை** - முத்துப்பிறக்கின்ற தந்தங்களை உடையவரை. **அகத்தானம் மீது** - மனதாகிய இடத்தில், உள்ளத்தில். ***சரசு ஆனதில்*** - குளத்தில், ஆனது பகுதிப்பொருள் விகுதி. **பண் இசை** - பண்களை முரலுகின்ற. **அகம்மொய்** - தன் இருப்பிடமாகக் கொண்டு படிகின்ற. **முண்ட கம் சால்** - தாமரை மலர்கள் நிறைந்த. **தண்டு அணி கரத்தன் மிசை** - தண்டபாணிக் கடவுளின் மீது. **விண்டு** - சொல்லி, இயற்றி. **அணிசெய்** - அணிவிக்கின்ற.

குறிப்புரை : கவிதழைத்து இலகவே கொம்பனை அகத்தானம் மீது அமைப்பாம் என்பது பொருள் முடிபு.

**பரசு ஆன தொண்டு** என்புழிப் **பரசு** - முதனிலைத் தொழிற்பெயர். விநாயகர் அகவல் பாடி வழிபட்ட உடனே அவ்வையைக் கணபதி தன் துதிக்கையால் தூக்கிக் கயிலாயத்தில் வைத்த வரலாறு வெளிப்படை. கவுமார மடாலயத்தில் காணாபத்தியச் சமய மூலவராக வீற்றிருப்பவர் திருநாமம் சித்திமகோற்கடர். இவரே மற்றோர் அரசமரநீழலில் வரசித்தி விநாயகராகவும் வீற்றுள்ளார்.

## *சற்குரு துதி*

**வண்டுஆன கும்பலுடன் வண்டானமும் கனிவின்**
**வண்தானம் என்று செறியும்**
**வளம்ஆன குளம்ஆன கண்கொண்டு விண்கொண்டல்**
**வாரி அறல் வாரி எளிதே**
**உண்டு, ஆன விடு மகிமை உண்டான அருள்முனிவ -**
**னுக்கு உவகை மிக்கு வந்த**
**உவமானம் உற்று இசைகொள் தவ மானதச் சீடர்**
**உரிமை அமை பொதியை மலைபோல்**

தொண்டுஆன அடியர்இனம் விண் தானம் மான சிற்
சுக வேலையகமீதினில்
துள்ளிக் குதிக்கும் நிலை அள்ளிக் குடித்தல் போல்
சுர மறையை அருள் சிரவையின்
கண்தானம் இடு சுவைக் கண்டு ஆன அருள்மொழிக்
கவின் இராமானந்தனைக்
கருத்து உற இருத்துதும் - குமரவேள் பிள்ளைக்
கவித்தமிழ் பவித்து இலகவே.

**வண்டு ஆன கும்பலுடன்** - தேனீக்கூட்டத்துடன். **வண்டானமும்** - நாரைகளும். **கனிவின்** - விருப்பத்துடன். **வண்தானம் என்று செறியும்** - வளமை மிக்க இடம் என அறிந்து மிகுந்துள்ள. **விண் கொண்டல்** - வானில் உள்ள மேகங்கள். **வாரி அறல் வாரி** - கடலில் உள்ள நீரை இரு கைகளால் ஏந்தி. **எளிதே உண்டு** - (கடல் நீர் முழுவதையும்) மிகச் சுலபமாகக் குடித்து. **ஆனவிடு** - அக்கடல்நீரைத் தீர்ந்துவிடுமாறு செய்யும். அருள்முனிவன் என்றது அகத்தியரை. இவ்வரலாறு வெளிப்படை. **உவமானம் உற்று** - தம் ஆசானுக்கு இணையானவர்கள் எனக் கூறப்படும்படி. **இசை கொள்** - புகழ் மிக்க. **விண்தானம் மான** - தேவலோகம் போல. **சித்சுகவேலையகமீதினில்** - ஞானானந்தக் கடலில். **சுர மறையை அருள் சிரவையின் கண்** - இசைப்பெருமை வாய்ந்த திருமுறைகளை வழங்குகின்ற சிரவணம்பட்டிக்கோயிலில். அகத்தியர் பொதியமலையில் தம் சீடர்களுக்கு அருள்வழங்குவதைப் போல இராமானந்த சுவாமிகள் சிரவையில் தம் அடியார்களுக்குத் தமிழ்மறைப் பயனை வழங்குகிறார் என உவமையை விரித்துக் கொள்க. **தானம் இடு** - அருட்கொடையாக வழங்குகின்ற. **கண்டு ஆன** - கற்கண்டினைப் போன்ற. **கவின்** - அழகு, இங்கு சிறப்பு. **பவித்து** - உற்பவித்து, தோன்றி. **இலகவே** - அடியார் நடுவே சிறப்புற்று விளங்க வேண்டி.

பிள்ளைக்கவித்தமிழ் பவித்து இலகவே இராமானந்தனைக் கருத்துஉற இருத்துதும் என்பது பொருள் முடிவு.

# 1. காப்புப் பருவம்

## *திருமால்*

## *(இரட்டையாசிரிய விருத்தம்)*

கடல் உடைப் பாரில் இசை உடலுடைப் பாலர் உள்
கன்றும்வகை துன்று பாவக்
கருகு இருள்(க்) கடலினைப் பருகி அற்புத ஞான
கான ஆரணமுடித்தோய்
மிடலுடைக் கங்கை உறவு இடும் அடல்(க்) கங்கையினை
விட்டு அளந்திட்ட தாளும்,
விழுங்குஇயல்(க்) கனிவாயும் இசை நாரணக் கடவுள்
விரி அன்பினில் புரக்க -
மடலுடைக் கேதகையினிடம் அளிப் பாடகர்கள்
மதுரம் நிறை பண் முழக்கி
மணம் மிகும் தண் தாது அளைந்து கௌமாரரில்
வயங்கி அடியிற் குவித்த
திடல் உடைந்து ஓடிட, கள் நீர் பொழிந்திடும்
தேம் துணர்கள் ஏந்து பொழில்சூழ்
சிரவை இசை, தொண்டு அணித்தவர் பரவு தண்டு அணித்
தேவ சேனாபதியையே.

**கடல்உடைப்பாரில் உடலுடைப்பாலர்** - சமுத்திரத்தை ஆடையாக உடைய நில உலகத்தில் உடல்கொண்டு பிறந்துள்ள மக்கள். **உள்கன்றும் வகை துன்று** - தம் மனம் கலங்கும்படி வந்து சேருகின்ற. **பாவ** - தீவினைகள் ஆகிய. **கருகு இருள் கடலினைப் பருகி** - நாளுக்கு நாள் கருமைநிறம் பெற்றுக்கொண்டே இருக்கின்ற இருண்ட ஆழியைக் கைப்பற்றி. கருகு இருள் வினைத்தொகை. பருகி என்றது இலக்கணை. ஆரணகானமுடி என மாறுக. வேதப் பாடலின் முடிபாகிய மெஞ்ஞானம். மிடலுடைக் கங்கை (கங்கு+ஐ) உறவு இடும் வலிமையுள்ள கரையோடு தொடர்பு கொள்ளும், கரைகளோடு மோதும் என்றபடி. (உலகத்தை) கங்கைவிட்டு அளந்திட்ட தாளும்; திருமால் திரிவிக்ரமனாக மூன்று உலகங்களையும் அளந்தபோது திருவடி மேல் அண்டத்தை உடைக்க ஆகாய கங்கை கால்வழி ஒழுகி கங்கை ஆறாக நில உலகத்திற்கு வந்தது என்பது ஒரு

வரலாறு. உலகை உண்டது: பேரூழியில் உலகங்கள் அனைத்தையும் தன் வயிற்றில் அடக்கிக் கொண்டு ஒரு குழந்தையாக ஆலிலையில் பள்ளி கொண்டது; கிருஷ்ணாவதாரத்தில் மண்தின்றதும் ஆம். **மடலுடைக் கேதகையினிடம்** - இதழ்களையுடைய தாழைமலரில். **அளிப்பாடகர்கள்** - வண்டுகள் ஆகிய இசைவாணர், உருவகம். **மதுரம்** - இனிமை. **பண்** - இராகம். **மணம்** - வாசனை. **தண் தாது** - குளிர்ந்த மகரந்தம். **கௌமாரரில் வயங்கி** - இளம் பருவத்தார் போல விளங்கி, வண்டுகள் சிறார்களைப் போல விளையாடுகின்றன என்றபடி. **திடல்** - மண்மேடு. **கள்நீர்** - தேன் ஆகிய திரவம். தேம் - இனிய. **துணர்கள்** - பூங்கொத்துகள்.

தேவசேனாபதியை (ஏ அசை) நாரணக் கடவுள் அன்பினில் புரக்க என்பது செய்யுள் முடிபு.

## சிவபெருமான்
### *(வண்ணவிருத்தம்)*

தனதனத் தனதந்த – தானனத் தாத்தனா

கமழ் மணத் துணர் மிஞ்சு மரகதத் தழைகொண்டு
கவின் அணித் தரு ஒன்று சோலையிற் கூர்த்துஉளே
கவிழ் இருள்(க்) குலம்இன்றி ஒழிதரத் தவளம் கொள்
கதிர் பரப்பிடு பண்பு, "உள் ஒகையில் பார்த்தபேர் -
களின் மனக் குகை நின்ற மலஇருட் படலங்கள்
கழிய, அற்புதம் என்று மேவி, மொய்த்து, ஏற்றம் ஆர்
கதி அளிக்குதும்; இன்று எனிடம் அடைக்கலம் என்று
கடிதில் எட்டுமின் அன்பர்காள்!" எனச் சாற்றல் நேர்
அமலம் உற்று இசை தொண்டர் புறம் அகத்தும் மிளிர்ந்து
அமிழ்தின் மெய்ச் சுவை பொங்கி ஆர்வம் மிக்கு ஏத்த நீள்
அருள் மயத் தளிகொண்ட கயிலை வெற்பினில் இன்பம்
அதிகரித்து எழமுந்து சோதியைத் தாள்(க்) கணே
அமை மகத்துவம் விஞ்சு தவம் மிகுந்து அயன் நெஞ்சில்
அவதரித்திடும் மைந்தர் நால்வர் கட்கு ஊற்றம் ஏய்
அசிபதத் திறம் விண்ட கரதலக் குறிதுன்றும்
அரன் அடிக் கமலங்கள் ஆதரித்து ஏத்துவாம்

அமரர் கட்கு இறை தந்த பிடி, பிடித்தருள்கின்ற
அமிழ்தக் கற்பியல் அன்றி ஆரணப்பால் குலாம்
அபிநவக் களவுஇன்பு புலவர் நத்துபுவிண்டும்
அனுபவித்திட நன்கு உள் ஆவலில் காட்டல்போல்,
அழல் பரல்(ப்) பொலி குன்றினிடம் அனிச்சம் இசைந்த
அடி பெயர்த்து உளம் உந்து காதலில்(ப்) போக்கலால்
அதி சினத்தொடு நிந்தை பகர் குறக்கொடி முன்பில்
அணுகி மெச்சி வியந்து உண் மாவினுக்கு ஏக்கம்ஆர்,
சிமயம் உற்று நடம்செய் தலைவனை, பணி அன்பர்
திகில் ஒழித்து அவர் நெஞ்சம் ஆம் அணிக் கோட்டம் ஏய்
திருடனை, கடல் அம்பு பருகு மைத்திரள் கண்டு
செயும் நடச்சிகி வெங்கண் நேர் அருட் காட்சி சார்
சிறுவனை, கமழ்கின்ற குரவனை, கதிர் வென்றி
திகழ் அயில் படைதங்கு தோளனை சீர்த்திதோய்
சிரவணப் பதியின்கண் அடியர் வைப்பு என நின்ற
திருவருட் பொலி தண்ட பாணியைக் காக்கவே. 2

**அமரர்கட்கு இறை தந்த பிடி** - தேவராசனாகிய இந்திரன் அளித்த தெய்வயானையை. **பிடித்தருள்கின்ற** - கைப்பிடித்து மணந்துகொள்கின்ற. **அமிழ்த** - இனிய. **கற்பியல்** - தலைவியை அவள் பெற்றோர் வேள்விச் சடங்கோடு மணம் செய்து கொடுப்பத் தலைவன் அவளை ஏற்று வாழ்தல். **ஆரணப்பால் குலாம்** - வாழ்க்கை இலக்கணமாகிய பொருளதிகாரத்தில் கூறப்பெற்றுள்ள, ஆரணம் உலகியல் வேதத்தைக்குறித்து நின்றது. **அபிநவக் களவு இன்பு** - எப்பொழுதும் புதுமை குன்றாத களவினால் ஏற்படுகின்ற இன்பத்தை. **புலவர் நத்துபு விண்டும்** - சங்கப்புலவர்கள் விரும்பி ஏற்றுக்கொள்ளும்படி உரைத்ததோடு. **உள் ஆவலில்** - மனம் நிறைந்த ஆர்வத்தால். இறையனார் அகப்பொருளின் சரியான உரை நக்கீரருடையது தான் என (உக்கிரசன்மனாக வந்து) தீர்ப்பளித்ததோடு நில்லாமல். **காட்டல்போல்** - தன் வாழ்க்கையிலும் தெளிவாக எடுத்துக்காட்டுவதைப் போல. **அழல்பரல்பொலி** - தீயைப்போன்று சுடுகின்ற சிறுகற்கள் நிறைந்த. **அனிச்சம் இசைந்த அடி பெயர்த்து** - அனிச்ச மலர் போன்ற மென்மையான பாதங்களை எடுத்து வைத்து, நடந்து என்றபடி. **குறக்கொடி முன்பில்** - வள்ளிதேவியின் எதிரில். **உண்**

- சாப்பிடுகின்ற. **மாவினுக்கு** - தேன் கலந்த தினைமாவிற்கு. **சிமயம் உற்று** - மலைச்சிகரத்தை அடைந்து. **ஏக்கம்** ஆர் தலைவன், நடம்செய்தலைவன் எனத் தனித்தனி இயையும். **திகில்** - அச்சம். **அணிக்கோட்டம்** - அழகிய கோயில். **அம்பு** - நீரை. **மைத்திரள்** - மேகக் கூட்டத்தை. நடம் செயும் சிகி என மாறுக. **சிகிவெந்கண்** - மயிலின் முதுகில். **குரவனை** - குராமலர்மாலை அணிந்தவனை. **கதிர்வென்றி** - புகழ்மிகும் வெற்றி, வினைத்தொகை. **அயில்படை** - வேலாயுதம். **வைப்பு** - பொக்கிஷம்.

**துணர்** - மலர்க்கொத்து. **மரகதத்தழை** - பச்சை இலை. **தருஒன்று** - மரங்கள் நிறைந்துள்ள. **கூர்ந்து** - தொளைத்துக் கொண்டு. **இன்றி ஒழிதர** - இல்லாமல் நீங்க. **தவளம் கொள்** - வெண்மையான. பரப்பிடு பண்பு : இது சாற்றல் என்பதற்கு எழுவாய். **ஒகையில்** - மகிழ்ச்சியுடன், இங்கு பக்தி. **மல இருட்படலங்கள் கழிய** - ஆணவம் ஆகிய இருட் செறிவு நீங்கும்படியாக. **அமலம் உற்று** - தூய்மை அடைந்து. **தளிகொண்ட** - கோவில் அமைந்த. **அயன்நெஞ்சில் அவதரித்திடும்** - பிரமனின் மனத்திலிருந்து தோன்றிய. **நால்வர்** - சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமரர் என்னும் நான்கு முனிவர்கள். **அசிபதத்திறம்** - தத்வமசி என்னும் வேதப்பொருள் சொல்லில் இருக்கிறாய் என்னும் பொருள்தரும் அசி என்னும் சொல்லின் ஆற்றல். **கரதலக்குறி** - கையால் காட்டும் சின்முத்திரை. **அரன்** - சிவபெருமான், இங்கு தென்முகக்கடவுளைக் குறிக்கின்றது.

## அம்பிகை

தனதன தனத்தந்த - தானனத் தாத்தனா

தமிழ்மணம் மிகப் பொங்கு மதுரை இறைவற்கு அன்பு
தழைதரும் அகத்தின்கண் நேர் அருட் சீர்த்திசால்
தகை மலி சுதைப் பண்பின் வடிவம் அமைவுற்று, உம்பர்
தரணி மனிதர்க்கும்த யாளம் மிக்கு, ஏற்றம் ஆர்
சதுர்விதம் எனத்துன்று பயன் முழுது அளித்து, அஞ்சு
தருவினன் நினைத்து அஞ்சு நேய மெய்ப் பார்ப்பதீ!
சகல சமயத்தின்கண் அமைகுநரும் மெச்சுஇன்ப
சகள வடிவக் கும்பல் ஆகும் மெய்க் காட்சியாய்!
அமிழ்தென இனிக்கும் சொல் கொடு பரவு பத்தன்பின்
அறுமதிவரைச் சென்று பேணும் நற் கூத்து உளாய்!
அதிநய குணத்துங்க மலை அரையனுக்கு அங்கம்
அமை பயன் அளித்து, ஒன்று கோகிலப் பார்ப்பின் நீள்
அருள் மழலை சொற்று, அங்கி மெழுகில் உருகத் தந்த
அருண அதரத்து அந்த வாய்கொள் பொற்பு ஈட்டமே!
அநுதினம் மனத்தின்கண் உனது ஒளிமயச் செம்பொன்
அடிகளை நினைத்து அன்பி னால் மிகப் போற்றுவேன்
இமிழ்திரை அணிச் சிந்து உடை புனை புவிக் கொங்கை
இனம்என, இடிக் கொண்டல் தூவும் அப் பொற்றை தான்
இசைவுறும் இருப்புஎன்று தனது உரு உள் வைத்து என்றும்
இறைவன் அருளில்(ப்) பொங்கி ஆருயிர்க்கு ஊட்டம்ஆய்
இயல் உறு பலர்க்கும் பல்கு அருவியில் அளித்துஇன்பம்
இடுமலையிடத்து அன்பில் ஆடவிட்டு ஏத்துவார்
இகபர சுகப் பொங்கம் எளிதில் எய்திடத் தந்து, உள்
இரவி ஒல்கிடத் தங்கு சேயனை, காட்டில்வாழ்
சிமிழ்நிகர் அணிக்கொங்கை மறமகள் உருக் கண்டு
தெரிசனம் எய்த, கண்கள் போல முற்றுஆக்கையே
திகழ் பரிசனத்து இன்பு பெறு மகிழ்நயப்பு ஒன்று
திறம் மிக நினைத்து, அன்பில் நீடு கை கூப்பும் ஓர்
சிறுவனை எழில்(க்) கந்த முருகனை, அணித் தொண்டர்
திரள்களை உள் ஐக்கம் செய் தாளனை, சூல் கொண்மூ
தினகரன் உடுத் திங்கள் தவழ்பொழில் வளப்பம்கொள்
சிரவணபுரத் தண்ட பாணியைக் காக்கவே. 3

**இமிழ் திரை** - ஒலிக்கின்ற அலைகளை உடைய. **அணிச் சிந்து உடை** - அழகிய கடல் ஆகிய ஆடை. **இடிக்கொண்டல்** - இடிகளுக்கு இடமான மேகம். **பொற்றை தான்** - குன்றே. **இருப்பு** - வசிப்பிடம். **உரு** - வடிவம். திருமேனி. **பல்கு அருவியில்** - மிகுகின்ற நீர்வீழ்ச்சியைப்போல. **பொங்கம்** - மேன்மை. **உள்** - மனத்திற்குள்ளே. **இரவி ஒல்கிட** - சூரியனும் நாணும்படி. **மறமகள்** - வள்ளிதேவியின். **பரிசனத்து இன்பு** - தீண்டுதலால் கிடைக்கின்ற சுகம். **மகிழ் நயப்பு ஒன்று** - உவகை கொள்கின்ற. **கை கூப்பும் ஓர் சிறுவன்**. "சிறு குறவர்மகட்குச் சலாம் இடற்கு ஏக்கறு குமரன்" (மீனாட்சி. பிள்ளைத். காப்பு 4) **ஐக்கம் செய்தாளனை** - தனக்குள் நீக்கமற இணைத்துக் கொள்ளும் திருவடிகளை உடையவனை. **சூல் கொண்மூ** - கருஉற்ற மேகம். **தினகரன்** - சூரியன். **உடு** - விண்மீன்கள். **திங்கள்** - சந்திரன்.

**மதுரை இறைவற்கு** - மலயத்துவச பாண்டியனுக்கு. **அகத்தின்கண்** - உள்ளத்தில். **சுதைப்பண்பின்** - மகளாக. **உம்பர்** - தேவர். **தரணி** - மண்ணுலகம். **தயாளம்** - கருணை. **ஏற்றம் ஆர்** - உயர்ந்த. **சதுர்விதம்** - அறம்,பொருள், இன்பம், வீடு. **அஞ்சு தருவினன்** - கற்பகம் முதலிய ஐந்து தெய்வீக மரங்களுக்கு உரியவன் ஆகிய இந்திரன். **அஞ்சு** - பயப்படுகின்ற. **நேயமெய்** - கருணையையே தன் உடலாகக் கொண்ட. **சகள வடிவக் கும்பல்** - (கடவுளின்) திருஉருவக் கூட்டம். **மெய்க்காட்சி** - சத்தியஞானம். எல்லாத் தெய்வ வடிவங்களும் ஒரே பரம்பொருளின் வடிவங்களே என்பது கௌமார சாத்திரக் கொள்கை. சொல், பத்தன் என்றது முறையே சௌந்தரிய லகரி மொழிபெயர்ப்பையும் கவிராஜ பண்டிதரையும்; வரலாறு வெளிப்படை. **கூத்து** - திருவிளையாடல். **துங்க** - உயர்ந்த. **மலை அரையனுக்கு** - இமவானுக்கு. **அங்கம் அமை** - உடலைப் பெற்ற. **கோகிலப் பார்ப்பின்** - குயிற்குஞ்சினைப்போல. **அங்கி மெழுகில்** - தீயிலிட்ட மெழுகுபோல. **அருண அதரத்து** - சிவந்த உதடுகளை உடைய. **அந்த** - அழகிய.

சிரவணபுரத் தண்டபாணியைக் காக்கவே, அடிகளை நினைத்து அன்பினால் மிகப்போற்றுவேன் என்பது பொருள் முடிபு.

## சித்திமகோர்க்கடர்

தனதன தத்தன தாத்தனத் தாத்தனா

கடமழை கொட்டுபு படாத்து அணிச் சீர்ப்புஇசை
கரியுடன், மிக்க சிலாக்கியத் தூய்ப்பரி -
களின் வெரிந் உற்று நடாத்தும் மெய்ப் பாக்கியர்,
கயிலை என் ஒப்பு இல் சிலோச்சயச் சேர்ப்புஉறு
மிடலினை நத்தி, உள் ஏக்கம் உற்று, ஆற்றிடு
விரைவு மிகுத்த பராய்க் கடப்பாட்டினை,
விமரிசையிற் செய் அபேட்சை சொற்று, ஏற்று, முன்
விடுதல் செய் சித்திம கோர்க்கடற் போற்றுதும் -
அடல்கொடு உளத்தொடு உபேட்சை மிக்கு ஆட்சி செய்து
அமரர் சுவர்க்கம் அபாக்கியக் கேட்டு உற
அனல் இடு துட்ட அகாத்தியத்தூர்த்தர் மெய்
அலகு உறு புட்கள் சுவாக்களுக்கு ஊட்டுபு,
திடம்மலி பத்தி விடாச் சுரர்க்கு ஏற்புறு
திருவை அளித்து, மகோற்சவப் பேற்று அமை
செயல் மணம் உற்ற விழாப் புவிக் காட்சி செய்
சிரவை கொள் வெற்றிவை வேற்கரற் காக்கவே. 4

**அடல்கொடு** - வலிமை பெற்று. **உளத்தொடு** - மனப்பூர்வமாக (தீமைசெய்ய வேண்டும் என்றே), **உபேட்சை மிக்கு** - (தேவர்களின் மீது) வெறுப்பு மிகுந்து. **அமரர் சுவர்க்கம்** - தேவர்களுக்குரிய வானுலகம். **அபாக்கியக் கேட்டு உற** - வறுமையாகிய தீமையை அடைய. **அனல்இடு** - தீ வைக்கின்ற, பல வகையான கொடுமைகளுக்கு உபலட்சணம். **துட்ட** - தீயவர்கள் ஆகிய. **அகாத்தியத் தூர்த்தர்** - செய்யக் கூடாததைத் துணிந்து செய்யும் தீயவர்கள் ஆகிய அரக்கர்களின். **மெய்** - உடல்கள். **அலகு உறு புட்கள்** - கூரிய மூக்கினை உடைய பறவைகளுக்கும். **சுவாக்களுக்கு** - நாய்களுக்கும். **ஊட்டுபு** - உண்ண வைத்து. **திடம் மலிபத்திவிடா** - உறுதியான பக்தியை விட்டுவிடாத. **சுரர்க்கு** - தேவர்களுக்கு. **ஏற்புறு** - அவர்களுக்குத் தகுந்த. **திருவை** - செல்வம் முதலியவற்றை. **மகோற்சவப்பேற்று அமை செயல்** - பெருந்திருவிழாவைப் போன்ற அதிருஷ்டத்தை அளித்த காரியம். சூரசம்மாரத்தையும் தெய்வயானை

திருமணத்தையும் திருவிழாவாக உலகத்தினருக்கு நடத்திக் காட்டுகின்ற. **வெற்றி** - செயத்தை உடைய. **வை வேல் கரர்** - கூரிய வேலாயுதத்தை ஏந்திய குமரகுருபரக் கடவுள். (மடாலய உற்சவர்).

**கடமழை கொட்டுபு** - மதநீரைப்பொழிந்து. **படாத்து** - யானையின் முகத்தில் அணிவிக்கப்படும் அலங்காரப் போர்வையின். **சீர்ப்பு இசை** - அழகு பொருந்திய. **கரியுடன்** (சுந்தரமூர்த்தி நாயனாரைக் கயிலைக்கு இட்டுச் சென்ற) யானையோடு. **சிலாக்கிய** - (சேரமானுக்கு) உரிமை உடைய. **தூய்ப்பரி** - புனிதமான குதிரை (தன் செவிகளால் பஞ்சாக்கரத்தைக் கேட்டதால் புனிதம் அடைந்த என்பது குறிப்பு). மெய்ப்பாக்கியர் என்றது நிலையான சிவப்பேற்றைப் பெற்ற சுந்தரமூர்த்தி நாயனாரையும் சேரமான் பெருமானையும். **சிலோச்சயம்** - மலையில். **சேர்ப்புறு மிடலினை நத்தி** - கொண்டுசேர்க்கின்ற அருள்வலிமையை விரும்பி. **ஆற்றிடு** - (ஔவையார்) தான் செய்கின்ற. **விரைவு மிகுந்த** - அவசரமாகச் செய்த. **பராய்க் கடப்பாட்டினை** - வழிபாட்டை. விமரிசையில் செய் அபேட்சை சொற்று - நிதானமாக ஒழுங்காகச் செய்க எனத் தன் விருப்பத்தைக் கூறி. **ஏற்று** - அவ்வாறு அவ்வை செய்த பூசனையை ஏற்றுக்கொண்டு. **முன்** - சுந்தரர் சேரமான் ஆகிய இருவருக்கும் முன்னாலேயே. **விடுதல் செய்** - (தும்பிக்கையால் தூக்கிக் கயிலையில் இறக்கிய). இவ்வரலாறு வெளிப்படை.

வேற்கரற் காக்கவே சித்திமகோற்கடற் போற்றுதும் என்பது முடிபு.

## திருமகள்

### தனனதன தந்ததன தந்தனத் தாத்தனா

கடலிடை எழுந்த அமிழ்தம் புசித்து, ஏக்கம் ஆர்
கடவுளர்கள், கண்களிகொடு, அன்பில் மிக்கு ஏத்தவே,
திடம் மருவு கொண்டல் வண்ணன் மொய்ம்பிடத்து ஏற்றநீள்
திருமகளின் அம்புய பதங்களைப் போற்றுவேன்

இடர் புரியும் வெம் பவம் ஒல் குன்றில் உற்றோர்க்கு எலாம்
இனிய கதி தந்து அருள்வன் என்று இசைத்து, ஏற்றம்ஆர்
திடர் மருவு குன்றம் முழுது ஒன்று மெய்க் காட்சி தோய்
சிரவண புரம் குலவு கந்தனைக் காக்கவே. 5

**இடர் புரியும்** - துன்பத்தைத் தரும். **வெம் பவம் ஒல்** - கொடிய பாவத்தைப் போன்ற. **குன்றில் உற்றோர்க்கு எலாம்** - கிரவுஞ்சம் என்னும் மலையில் சிக்கிக்கொண்ட வீரவாகு முதலியவர்கள் அனைவருக்கும். **இனிய கதி** - இங்கு விடுதலை. **இசைத்து** - கூறி, அதனை நிறைவேற்றி என்பது பொருளெச்சம். முருகப்பெருமான் குன்றுருவவேல் வாங்கிய கந்தபுராண வரலாறு வெளிப்படை. **ஏற்றம் ஆர்** - உயர்ந்த. **திடர் மருவு** - மேடுகளை உடைய. முழுது என்புழி முற்றும்மை தொக்கது. **ஒன்று** - கோவில் கொள்ளும்.

**களிகொடு** - மகிழ்ந்து. **ஏத்தவே** - போற்ற, ஏகாரம் அசை. **திடம் மருவு** - வலிமை மிக்க. **கொண்டல் வண்ணன் மொய்ம்பிடத்து** - மேகத்தின் நிறத்தைக் கொண்டுள்ள திருமால் தன் மார்பில். அம்புயப் பதங்கள் எனற்பாலது வண்ணம் நோக்கி இயல்பாக நின்றது; இனி இரண்டும் வடசொல்லாதலின் அங்ஙனம் நின்றது எனினும் ஆம்.

கந்தனைக் காக்கவே பதங்களைப் போற்றுவேன் என்பது பொருள் முடிபு.

## கலைமகள்

தனதத்த தானதன - தானனத் தாத்தனா

உலகத்தின் மீது பொலி அளவு அற்ற பேதம் உறும்
உடலத்தின் மேன்மை யொடு தாழ்வினைக் காட்டவே,
உவமிக்க ஒணாவி வித கலை முற்றுமே புலவர்
உளம் உற்று உலாவி இனிது ஓர்தரத் தேற்றியே,
நலம் முற்றும் நான்முகவன் முயல் சிட்டி ஆன தொழில்
நவை பெற்றிடாது விதி ஆம் எழுத்து ஆக்கி ஆள்
நயனக் கலாநிதியை, எனதுள் குலாவி அருள்
நரலைத் தயாள கலைமாதை மிக்கு ஏத்துவேன் -

அலகு அற்ற ஆகிநிகழ் சமயத்து அவாவின்வர்,
அவர் பெற்றதே பெரியது ஆம் எனச் சீற்றமோடு
அமை உத்திவாதம் அதில் அமிழ்வித்து, மாதவ மெய்
அறிவித்து, மேன்மையினது ஆறு எனக் காட்டவே,
திலகத்தில் நீடும் அறுமுகம் உற்று, நாடு அடியர்
திரள்கட்கு ஞான குரு மேனி பெற்று, ஏற்ற கோல்
திறம் மிக்க மாசகள அயில் மெய்ச் சொரூப மெய்கொள்
சிரவைக் குமாரகுரு தேவனைக் காக்கவே. 6

**அலகுஅற்ற ஆகி நிகழ் சமயத்து அவாவினவர்** - கணக்கு இல்லாமல் பலவாக விளங்குகின்ற மதங்களில் ஈடுபாடு கொண்டவர்கள். **அவர் பெற்றதே பெரியது ஆம் என** - தாங்கள் ஏற்றுக் கொண்டுள்ள சமயம்தான் சிறப்புடையது ஆகும் என்று. **சீற்றமோடு அமை** - மற்ற சமயங்களின் மீது கொண்ட கோபத்துடன் கூடிய. **உத்திவாதம் அதில் அமிழ்வித்து** - அக்கருத்துக்கு இசைந்தபடி சொல்திறமை காட்டி வாதிடும்படி செய்து, அதுபகுதிப்பொருள் விகுதி. **மாதவ மெய் அறிவித்து** - உயர்ந்த தவத்தால் அடையவேண்டிய மெய்ஞானத்தை ஊட்டி. **ஆறு** - அறுவகைச் சமயங்களுமே. காட்டவே - உணர்த்த, ஏகாரம் அசை. **திலகத்தில் நீடும்** - நெற்றிப்பொட்டினால் எழில் சிறந்து விளங்கும். ஏராளமான சமயங்கள் அத்தனையும் ஏற்கத்தக்கனவே எனக் கூறி அவற்றுள் சௌரம் முதலிய அறுவகை வழிபாட்டு முறைகளை மட்டும் சிறப்பிப்பானேன் என்னும் இயல்பான வினாவிற்கு வண்ணச்சரபரின் விடை வருமாறு :

நானிலத்தில் பலவாறுஆம் நூலில் ஒன்றும்
நவிலாதது ஆம் புதிய நாம ரூபம்
ஆனிஇலாப் பரம்பொருளுக்கு அமைத்து நாடி
அருள்பெறினும் சம்மதமே; ஆறுபேதம்
ஏன் நிகழ்த்தல் என்பீரேல் முன்னோர்க்கு அவ்வாறு
இலங்கியது உண்டு; அவ்வழி தொட்டு ஏறுவார்க்கே
ஊன் இகத்து மானிடர்க்கு நஞ்சு ஆம் வண்ணம்
உஞற்றுவோன் உபாசனையே உயர்ச்சி ஆமே

(கௌமார முறைமை 1-98)

ஞானகுரு மேனி பெற்று : முருகப்பெருமான் ஞானதேசிகனாக வந்துதான் முத்தி தருவான் என்பது கௌமார சாத்திரக் கொள்கை.

பரிதி ஈசன் பராசத்தி மாயவன், கரிமுகன் குகன்
என்னக் கவின்தரும் பெரிய சற்குரு

என்பது குருபரதத்துவம் (1). **ஏற்ற கோல் திறம் மிக்க** - கையில் தாங்கியுள்ள தண்டாயுதத்தின் சிறப்பு மிகுந்த. **மா சகள** - சிறந்த திருமேனி ஆகிய. **அயில்** - அழகிய. **மெய்ச் சொரூப மெய்கொள்** - உண்மையான வடிவம் ஆகிய வடிவத்தைப் பெற்றுள்ள.

**பேதம் உறும்** - வித்தியாசங்களை உடைய. **உடலத்தின்** - உடல்களின். **விவித** - பலவாறான. **கலை** - கற்கத்தகுந்த கல்வி. **ஓர்தரத் தேற்றியே** - உணரும்படித் தெளிவித்து, ஏகாரம் அசை. **நலம் முற்றும்** - நன்மைகள் யாவும் நிறைந்துள்ள. **நான்முகவன் முயல். சிட்டி ஆன தொழில்** - பிரமன் செய்கின்ற படைப்புச் செய்கை. **நவை பெற்றிடாது** - குறைவடைந்திடாமல். **விதி ஆம் எழுத்து ஆக்கி ஆள்** - ஊழ்வினையாகிய தலையெழுத்தாகச் செய்து நிர்வகிக்கின்ற. **நயன** - கண்களை உடைய. **கலாநிதியை** - அறிவுக்கலைகளின் கருவூலம் ஆகியவளும். **நரலைத் தயாள** - தயாள நரலை என மாறுக, கருணைக்கடலும் ஆகிய.

தேவனைக் காக்கவே மாதைமிக்கு ஏத்துவேன் என்பது முடிபு.

## அருணகிரிநாதர்

**தனனதன தான - தனதனத் தாத்தனா**

**உலகில் உயர்வான பொருள் எது என நாடி**
**உழலும் அறிவீனம் உடைய பொய்க் காட்சியீர்!**
**உமது விழியூடு மலையை அறியீர்கொல்?**
**உடைய இறையாவன்? அறிதிர்; மெய்ச்சீர்த்தியான்**
**அலகுஇல் புகழ்பாடி உருகு தவம் ஆவது**
**அரிதில் அரிது ஆகும் என உளத்து ஊக்கமோடு**
**அமைமின் என, ஓது புகழ் கொடு அறை கூவும்**
**அருணகிரிநாதன் அடிகள் மிக்கு ஏத்துவேன் -**

அலரின் மிசை மேய பிரமனொடு தாதை
அடிகள் முடிதேட அறிதல் அற்றாற்கு, நீள்
அருமை மறை மேவும் மவுன பரஞான
அரிய பொருள் ஓது திருவருள்(க்) கீர்த்திசால்
திலகன், அசுரேசர் கலகன், உணராத
திருடன், அடியார்கள் மனவெளிக் காட்சிசார்
சிறுவன், அருவான பெரியன், வளம்நீடு
சிரவை நகர் மேவும் முருகனைப் போற்றவே. 7

**அலரின்மிசை மேய பிரமனொடு** - தாமரையின்மேல் இருக்கும் நான்முகனோடு. **தாதை** - அவனுடைய தந்தை ஆகிய திருமால். **அடிகள் முடி** - அடி முடிகள் என மாறுக, எதிர் நிரனிறை. **அறிதல் அற்றாற்கு** - காணப்பட முடியாதவர் ஆகிய சிவபெருமானுக்கு. **மறை மேவும்** - வேதங்களுள் இடம் பெற்றுள்ள. பொருள் என்றது பிரணவத்தின் பயனை. **அசுரேசர் கலகன்** - அரக்கத்தலைவர்களுடன் போரிடுபவன். **உணராத** - உணரப்படாத எனப்பிறவினைப் பொருளில் ஆட்சி. **அருவான** - தனக்கெனத் தனித்ததொரு உருவம் இல்லாத.

**அறிவீனம்** - பேதைமை. **பொய்க்காட்சியீர்** - மெய்யறிவு இல்லாதவர்களே. **உடைய** - எல்லாவற்றையும் தன் உடைமைகளாகப் பெற்ற. **மெய்ச்சீர்த்தியான்** - பொருள்சேர் பெரும்புகழ் உடையவனின். **அலகு இல்** - கணக்கற்ற. **ஊக்கமோடு** - உறுதியாக. **அறை கூவும்** - வலியுறுத்தும்.

முருகனைப் போற்றவே அடிகள்மிக்கு ஏத்துவேன் என முடியும்.

## நவக்கிரகம்

தனன தத்ததன தானதன தந்தனா

சகசம் உற்ற மலம் ஆம் இருள் அகன்று, தோய்
தநுவயின்(ப்) புல்கு உயிர்யாவையும் அருந்த, நேர்
சகமிசைப் பலபல் போகமும் வழங்கு, சீர்
தழை நவக்கிரக தேவரை வணங்குவேன் -

இக பரத்தும் ஒரு தாழ்வு இல் அருள் இன்ப மூடு
இசைய வைத்து, அடியர் பாவனையின் அங்கமே
திகழ் குருத்துவம் உளான் இலகு கொங்கில் ஆர்
சிரவை உற்ற குகவேள் நலம் விரும்பியே. 8

**இகபரத்தும்** - இம்மை மறுமைகளிலும். **இன்பமூடு** - மகிழ்ச்சியில், அத்துச் சாரியை கெட்டது. **இசைய வைத்து** - பொருத்தி. **பாவனையின் அங்கமே திகழ்** - தியானிக்கின்ற வடிவத்தோடேயே காட்சியளிக்கின்ற.

"எந்த வடிவும் எடுக்கும் பொருளுக்குச்
சொந்த வடிவு ஏது என்று உந்தீபற;
தொண்டர் நினைப்பது என்று உந்தீபற" (சதக உந்தி 8)

என்பது கௌமார சாத்திரம். குருத்துவம் - ஆசாரியத் தண்மை.

**சகசம் உற்ற மலம் ஆம் இருள் அகன்று** - மூலமலம் ஆகிய ஆணவ அறியாமை நீங்கி. **தோய் தநுவயின் புல்கு** - தனக்கு ஏற்பட்ட உடலுக்குள் பொருந்தும். **அருந்த** - நுகர. **நேர்சகமிசை** - அமைந்துள்ள உலகில் (புவனம்). **போகமும்** - நுகர்தற்குரியனவற்றையும். **வழங்குசீர் தழை** - அளிக்கின்ற முகவராக விளங்கும் சிறப்பை உடைய. வினையை ஊட்டுவது இறைவன்தான்; எனினும் கோள்கள் கருவிகளாக அமைகின்றன.

குகவேள் நலம் விரும்பியே நவக்கிரக தேவரை வணங்குவேன் என்பது பொருள் முடிபு.

## வீரவாகு தேவர்
### *(இரட்டையாசிரிய விருத்தம்)*

தோளினில், கழல்கொண்ட தாளினில், புகல் கின்ற
சூளினில், தீரவீரத்
துடியினில், கைத்தலத் தடியினில், பிடியினில்,
சூர உங்காரமதனில்,

வாளினில், சங்கார நாளினில் துட்டர் குலம்
மாய்த்திடும் தீத்திரளை நேர்
வல்லபத்தனை வேள்(க்)கு நல்ல பத்தனை வீர -
வாகுவை மிகத் துதிப்பாம் -
கோளினில் பந்த தீக் கோளினில் பெற்ற கார் -
கோளினில் கொண்ட துயரால்
குன்றிய மனத்தினை, குன்றி அணி ஒன்றி அமை
குன்று இயலும் மா நடம் செய்
தாளினில் பொலி தவத் தாளினில் புக அருள்செய்
சண்முகனை உள் முகம் தோய்
சரவணனை அவிர் புகழ்ச் சிரவணனை அன்பினில்(ச்)
சார்ந்து காத்து அமைக என்றே. 9

**கோளினில்** - விண்மீன்களாலும். **பந்த தீக்கோளினில்** பற்றிக்கொள்ளும் கொடிய கிரகங்களாலும். **பெற்ற** - அடைந்த. ஈரிடங்களிலும் இல்லுருபு மூன்றன் பொருளில் பயின்றது, "போரின் முழங்கும் புரவிக் கடலும் என்புழிப் போல" (சிந்தாமணி 2195) **கார்கோளினில்** - கடலைப்போல. **குன்றிய** - சோர்வடைந்த. **குன்றி அணி ஒன்றி அமை குன்று** - குந்துமணிக் கொடிகள் வரிசையாக வளர்ந்துள்ள மலைகளில், **இயலும்** - நிகழ்கின்ற. **மாநடம்செய்** - குன்றுதோறாடும் என்றபடி. **தாளினில்பொலி** - திருவடிகளில் விளங்க வைக்கின்ற. **தவத்தாளினில் புக** - தவம் ஆகிய முயற்சியில் ஈடுபடும்படி, தவநெறியில் சேர்வித்து. **உள்முகம் தோய்** - மனத்திற்குள்ளே பொருந்தி. **சிரவணனை** - சிரவணபுரத்தை உடைய முருகப்பெருமானை. **சார்ந்து** - அருகமைந்து.

**கழல் கொண்ட தாளினில்** - வீரக் கழலணிந்த காலில். **புகழ்கின்ற சூளினில்** - செய்கின்ற சபதத்தில், தான் பானுகோபனைக் கொன்ற பிறகுதான் முருகப்பெருமானைச் சந்திப்பேன் என்று சூளுரைத்தார். (கந்த.யுத்த.நகர்புகு.3) **துடியினில்** - குதித்தலில், துடி - முதல்நிலைத் தொழிற்பெயர். இனி குமரனுக்குரிய துடிக்கூத்தை ஆடுதலில் எனக் கொள்ளினும் ஆம். தடி - தண்டாயுதம். **பிடியினில்** - வேலில், கைப்பிடி ஆகிய சினை முதலுக்கு ஆகிவந்த ஆகுபெயர். **சூர உங்காரமதனில்** -

வீர கர்ஜனையினால், அதுபகுதிப்பொருள் விகுதி. **சங்கார நாளினில்** - உலகம் அழியும் தினத்தில். **துட்டர்குலம்** - தீயவர் கூட்டம். **தீத்திரளை நேர்** - நெருப்புக் கோளத்தைப் போன்ற. **வல்லபத்தனை** - ஆற்றல் உடையவனை. **வேட்கு** - முருகப்பெருமானுக்கு.

சிரவணனைக் காத்து அமைக என்றே வீரவாகுவை மிகத் துதிப்பாம் என்பது செய்யுள் முடிபு.

## முப்பத்து மூவர்

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
தனத்தத் தனத்தான தானதன தத்தன.

முடித்தலை அடித்தலம் முடித்து, அவர் மனக்குறை
முடித்து, புவிப் போகமோடு உயர் சுவர்க்கமுள்
முயக்குறு மயக்குஉறு பவத்தில் அவ்அவத்தினில்
முயற்சித்து உவப்புஆகும் மூட மதி அற்று, அலர்
வடிக்கணை தொடுப்பவன், அடுத்து உயிர் குடிப்பவன்
மணப் பொற்புடைப் பூவின் மீதினில் இருப்பவன்
வசத்து உறவிடுக்கும் வல்வினைத் தொடர் அறுத்து, அருள்
- மயச் சிற்சுகத் தேறல் வாரியின் முழுக்குறு
கடித்துணர் உகுத்த கள் மழைப் பொதியையில்(ப்) பொலி
கமழ்ச்சித் தவத்தோனும், நீடும் அருணைப்புடை
கலித்திடு திருப்புகழ் மிகப்பொழி சிறப்புறு
கவிக்கற்பின் மிக்கோனும் ஓகை உள் மிகுத்திட,
வடித்து அருள் மறைப்பொருள் செவித்துளை சுவைத்து உளம்
மதித்து, எட்டிடக் கூடிவாழ் சிரவை அப்பனை
மருத்துவர் வசுக்கதிர் உருத்திரர் எனப் பொலி -
யும் முப்பத்து முக்கோடி தேவர்கள்பு ரக்கவே. 10

**முடித்தலை அடித்தலம் முடித்து** - அடியவர்களின் தலையின்மீது தன் திருவடிகளை வைத்து. **புவிப்போகமோடு** - இந்த மண்ணுலகச் சுகங்களுடன். **சுவர்க்கமுள்** - வானுலகில், (மறுமை), அத்துச்சாரியைகெட்டது. **முயக்குறு** - சேர்கின்ற.

**பவத்தில்** - பிறப்பில். **அவத்தினில்** - பயனற்ற (வீணான) செயலில். **உவப்பு ஆகும்** - மகிழும். **மூடமதி அற்று** - அறியாமை நீங்கி. **அலர்** - மலர்களாகிய. **வடிக்கணை** - தேர்ந்தெடுக்கப்பட்ட அம்பு, கூர்மையான எனினும் ஆம். **தொடுப்பவன்** - மன்மதன். **உயிர்குடிப்பவன்** - இயமன். **பொற்புடைப்பூ** - அழகிய தாமரை. **இருப்பவன்** - பிரமன், இவன் பிறவியைத் தருபவன். பிறப்பு, இறப்பு, காமங்களுக்குக் காரணம் வலிய இருவினைகளே ஆகும். **சிற்சுகத்தேறல்வாரி** - ஞானானந்தமாகிய தேன் கடல், **கடித்துணர் உகுத்த** - நறுமணம் மிக்க பூங்கொத்துக்கள் சிந்திய. **கள் மழைப் பொதியையில் பொலி** - தேனின் மழையை உடைய பொதிகை மலையில் விளங்குகின்ற. **கமழ்ச்சித் தவத்தோனும்** - வாசனைபோலப் புகழ் பரவிடக் காரணமான தவச்சிறப்பை உடைய அகத்தியரும். **நீடும்** - நிலையான. **அருணைப்புடை** - திருவண்ணாமலையில், **கலித்திடு** - ஒலிக்கின்ற. கலி ஆகிய கற்பின் மிக்கோன் என்க. முருகப்பிரானை மட்டுமே வழிபட்டுவந்த அருணகிரிநாதரும். **ஓகை** - களிப்பு. **வடித்தருள்** - வார்த்த. **எட்டிட** - அந்த மறைப்பொருட் பயனை அடைய. **மருத்துவர்** - அசுவினி தேவர் இருவர். **வசு** - வசுக்கள் எண்மர். **கதிர்** - சூரியர்கள் பன்னிருவர். உருத்திரர் பதினொருவர்.

சிரலை அப்பனை முப்பத்து முக்கோடி தேவர்கள் புரக்கவே என்பது பொருள் முடிபு.

## 2. செங்கீரைப் பருவம்

### *(இரட்டையாசிரிய விருத்தம்)*

**விண் நிலவு தண் அமுத வெண் நிலவு அணிந்த சடை
விண்ணவன் கண்ணின் வழியே
விரிஅனல்(ப்) பொறி ஆகும் உரிமை உற்றாய்; அதன்
மேல் நவில் மெய் சானவியதன் -
கண் நிலவி நண்ணு இசைக் காங்கேய நாமம்
கலந்தனை; பின் எறி தரங்கக்
கடல் அனைய சரவணத் தடமிசை இசைந்து உற்ற
காரணப் பேர் அணிந்தாய்;
தெண் நிலவு வெண்முத்த மூரலார் ஆரலார்
திருமுலைப் பால் அருந்திச்
சீர் பொலி விசாகத்து உதித்துஅவர்கள் பெயரும்
சிறப்பாக ஏற்றருளியே,
திண் நிலவு பூரணம் குன்றாத தேசிகா!
செங்கீரை ஆடியருளே!
சிரவண புரத்தில் அவிர் சரவணபவக் குமர
செங்கீரை ஆடியருளே! 1**

**விண்ணவன்** - தேவன், சிவபெருமான். **விரி அனல் பொறி** - ஒளிர்கின்ற தீப்பொறி. **அதன்மேல்** - அதற்குப்பிறகு. **சானவியதன்கண்** - கங்கையாற்றில். **நண்ணு** - பொருந்தும். **இசை** - புகழ்மிக்க. **காங்கேய நாமம்** - காங்கேயன் என்னும் திருப்பெயர், காங்கேயன் என்பதற்கு வடமொழி முறையில் கங்கையோடு தொடர்புடையவன் எனப் பொருள். **எறி தரங்க** - வீசுகின்ற அலைகளை உடைய, வினைத்தொகை. **தடமிசை** - குளத்தில். சரவணக் குளத்தின் தொடர்பால் சரவணபவன், சரவணன். **தெண் நிலவு** - தெளிவான. **முத்த மூரலார் ஆரலார்** - முத்துக்களைப் போன்ற பற்களை உடைய கார்த்திகை மகளிர். **விசாகத்து** - விசாக நட்சத்திரத்தன்று. அவர்கள் பெயரும் என்றது கார்த்திகேயன், விசாகன் என்பனவற்றை. **திண் நிலவு** - வலிமை கொண்ட, இங்கு பரத்துவம் ஆகிய தகுதி. **பூரணம்** - முழுமை, எந்தக் குறையும் இல்லாத பரம்பொருள்தன்மை. **தேசிகா** - குருநாதா.

சராசரம் அளித்தருள் புராதனி, புராந்தகன்
சரவணத்து உற்று உவப்பால்
தரும் மேனி ஆறும் ஒரு திருமேனி ஆக்கியே
தந்த பால் அமுது அருந்திப்
பராசரன் அணிச் சுதர் துர்ஆசு அற ஒழித்து, அம்மை
பகர் கந்த நாமம் ஏற்று,
பாதி உரு இருவருள்(ச்) சோதிஆம் ஆனந்த
படிவம் ஏற்றுச் சிறந்த
வரா! சரதனே! பகல் இரா சரம் இலா அருளின்
மத்தி அமை முத்திமுதலே!
மலயமிசை கலயன் நிகர் நிலையர் உணர்தரு சின் -
மயத் தன்மயா! அருமறைச்
சிரா! சரண சரணர் உள் கரணம் நுகர் அமுதமே
செங்கீரை ஆடியருளே!
சிரவண புரத்தில் அவிர் சரவண பவக்குமர
செங்கீரை ஆடியருளே! 2

**சராசரம்** - நிலைத்திணை இயங்குதிணை உயிர்கள் அனைத்தையும், **அளித்தருள்** - ஈன்ற. **புராதனி** - மிகப் பழமையானவள் ஆகிய பார்வதி. **புராந்தகன்** - முப்புரங்களை எரித்தழித்த சிவபெருமானும். **உவப்பால்** - மகிழ்ச்சியோடு. புராந்தகன் தரும் மேனி ஆறும் புராதனி ஒரு திருமேனி ஆக்கியே என இயையும். **பராசரன் அணிச் சுதர்** - பராசர முனிவரின் மக்கள் ஆகிய தத்தன், நந்தி, பரிதி, பாணி, சதுமுகன், தவமாலி என்னும் அறுவரின். **துர் ஆசு அற ஒழித்து** - தீய குற்றம் ஆகிய சாபத்தை நீக்கி. இந்த வரலாறு : பராசர முனிவரின் மக்கள் அறுவரும் தம் இளமையில் விளையாட்டாகச் சரவணப் பொய்கையின் மீன்களைப் பிடித்து வெப்பம் மிக்க பாறையின்மேல் போட்டு அவை துடிக்கக் கண்டு களித்தனர். இக் கொடுமையைக் கண்ட முனிவர் சினங்கொண்டு தம்மக்களை மீன்களாகப் போகுமாறு சபித்து விட்டார். சரவணப்பொய்கையில் முருகப்பெருமான் ஆறு குழந்தைகளாகத் தவழ உமாதேவி எடுத்து ஓர் உரு ஆக்கிப் பால் கொடுக்கும்போது சிந்தும் பாலை அருந்திச் சாபவிமோசனம் பெறுமாறு விதிக்கப்பட்டது. இவ்விரிவைத் திருப்பரங்கிரிப்புராணத்தில் காண்க. **கந்த நாமம்** - ஸ்கந்தன்

என்னும் திருப்பெயர். ஆறாக இருந்து ஒன்றாக ஆக்கப்பட்டவன் என்பது பொருள். **பாதிஉரு இருவருள்** - பாதி அம்மை பாதி அப்பனாக விளங்கும் இருவருக்கு நடுவே. **ஆனந்த படிவம்** - இன்பமே ஆன உருவம். இது சோமாக் கந்தமூர்த்தியை நினைந்து கூறியது. **வரா** - மேலானவனே. **சரதனே** - எப்பொழுதும் நிலை ஆனவனே. **பகல் இரா சரம் இலா** - பகலோ இரவோ அசைவோ இல்லாத. ஆன்மா ஆணவ மலத்தோடு மட்டும் கூடியதாய் அணுமாத்திரமாய் ஒடுங்கிக்கிடக்கும் நிலைக்குக் கேவலம் எனப்பெயர். இரவு என்பது இதன் குறியீடு. மும்மலங்களோடு தனுகரணபுவன போகங்களை நுகரும் நிலை சகலம் எனப்படும். பகல் என்பது இதன் குறியீடு. **மலயமிசை கலயன் நிகர் நிலையர்** - பொதிய மலையின் அகத்தியரைப் போன்ற ஞானிகள். **சின்மயத் தன்மயா** - தனி ஞானவடிவாக இருப்பதையே தன் சொந்த இயல்பாகக் கொண்டவனே. **சிரா** - முடிவில் உள்ளவனே. **சரண சரணர்** - திருவடிகளில் அடைக்கலம் அடைந்த அடியார்கள். **உள் கரணம்** - கரணமுள் என மாறுக, விருப்பத்தோடு.

பேண் பிள்ளையாய் உற்ற பெண்பிள்ளை, ஆர் எழில்
பெறுபிள்ளைஆய், மங்கலம்
பெறு பிள்ளைஆய், மகப்பெறு பிள்ளை ஆய், கிழம்
பெறு பிள்ளைஆய் ஒழிந்தார்;
மாண்பிள்ளை யான் என்னும் ஆண்பிள்ளை, யௌவன
மணப் பிள்ளைஆய், அதன்பின்
மருள்குணப் பிள்ளைஆய், திரள் பணப்பிள்ளைஆய்
மடி பிணப்பிள்ளை ஆனார்;
ஆண் பிள்ளை பெண் பிள்ளை இருபிள்ளை ஒரு பிள்ளை
ஆம், இறைவன் இறைவி ஆவார்
அகம் மலைக்கும் பிள்ளைஆய் மலைக் கும்புகளை
ஆள்கிழவன் ஆகி, இன்பச்
சேண் பிள்ளைஆய், இளைய பிள்ளைஆய் நின்றருக!
செங்கீரை ஆடியருளே!
சிரவணபுத்தில் அவிர் சரவண பவக்குமர!
செங்கீரை ஆடியருளே! 3

**பேண்பிள்ளையாய் உற்ற பெண்பிள்ளை** - ஆசையோடு

வளர்க்கப்படுவதற்குரிய குழந்தையாகப் பிறந்த பெண். **ஆர்எழில்பெறு** - மிகுந்த அழகைப்பெற்ற. **மங்கலம் பெறு** - திருமணம் செய்து கொண்ட, "மங்கலம் என்ப மனைமாட்சி". **மகப்பெறு** - மக்களைப்பெற்றெடுக்கின்ற. **கிழம்பெறு** - முதுமையை அடைகின்ற. **ஒழிந்தார்** - இறந்துபோனார்கள். **யான் மாண்பிள்ளை என்னும் ஆண்பிள்ளை** - நான் சிறப்புக்குரியவன் எனக் கூறிக்கொள்ளும் பையனும். **யௌவன மணப்பிள்ளை ஆய்** - வாலிப மாப்பிள்ளை ஆகி. **மருள் குணப்பிள்ளை ஆய்** - உலகியல் இன்பங்களுக்கு, குறிப்பாகக் காமத்திற்கு மயங்கும் இயல்புடையவன் ஆகி. **திரள் பணப்பிள்ளை ஆகி** (அவ்வின்பங்களைத் துய்க்கத் தேவையான) திரண்ட செல்வத்தைத் தேடுபவனாக ஆகி. **மடி** - (இறுதியில்) இறந்துபோகின்ற. இருபாலாரும் நிலையற்றவர்களே என்றபடி.

ஆண்பிள்ளை பெண்பிள்ளை இருபிள்ளை ஒருபிள்ளை ஆம் - ஆண்பெண் இருவர் ஒருவர் என எல்லாமுமாக விளங்குகின்ற. **இறைவன் இறைவி ஆவார்** - சிவபெருமானும் உமாதேவியும், மாதொருபாக வடிவத்தை நினைந்தது. **அகம் மலைக்கும் பிள்ளை ஆய்** - மனம் மயக்குகின்ற மைந்தன் ஆகி. **மலைக்கும்புகளை ஆள் கிழவன்** - குன்றுகளுக்கு எல்லாம் உரிமையுடைய தலைவன். சேண் இன்பப்பிள்ளை என மாறுக, பேரின்பத்தை வழங்குபவன். **இளைய பிள்ளை ஆய்** - மூத்தவராகிய விநாயகரை நோக்க எப்போதும் இளையவராகவே விளங்குபவனாய்.

பிள்ளை என்னும் சொல் ஒரே பொருளில் பலமுறை பயின்று வந்ததால் இது சொல்பொருள் பின்வருநிலை அணி.

ஆடும் ஒருபால்; இன்பம் மூடும் ஒருபால்; உடன்
அகத்து அமை பெருங்காதலால்
அன்னை எங்கு என்று நாடிக் களித்து அணுகும்; பின்
அன்னை எங்கு என்று தேட
ஓடும்; ஒருபால் அன்பில் உண்ணும்; ஒரு பால் அங்கு
உறங்கும்; ஒரு பால் விழித்தே
ஒ என்று இரங்கும்; உடன் ஆ ஏன்று உவந்து அமுத -
மோ என்று உருக்கு கீதம்

பாடும் ஒருபால்; நடனம் ஆடும் ஒருபால்; அதைப்
பார்த்து அன்பில் ஆர்த்து உவக்கும்;
பற்றும்; ஆறு உருவுமாய் மற்றும் வேறு உருவும் ஆம்
பரிபூரணக் கடவுளே!
தேடும் ஒரு பால் அன்றி எப்பாலும் ஆம்முருக
செங்கீரை ஆடியருளே!
சிரவணபுரத்தில் அவிர் சரவணபவக்குமர
செங்கீரை ஆடியருளே! 4

**ஒருபால்** - ஒரு சமயத்தில், ஓர் இடத்தில் எனினும் ஆம். **அகத்து அமை** - மனத்தின்கண் ஏற்பட்ட. **நாடி** - தேடி. **பின்** - பிறகு ஒரு சமயத்தில். **இரங்கும்** - அழும். **உருக்கு** - உள்ளத்தை உருகச் செய்கின்ற. **கீதம்** - பாட்டு. **ஆர்த்து** - கூச்சலிட்டு. **உவக்கும்** - மகிழும். ஆறு தனித்தனி வடிவங்களாகவும் பிறகு வேறானதாக ஆறும் இணைந்த ஒரு வடிவமாகவும். **பரிபூரணம்** - அனைவற்றிலும் முழுமையை உடைய. **தேடும் ஒருபால் அன்றி** - (பொதுவாக அடியார்களால்) தேடப்படுகின்ற ஆலயங்களாகிய ஓர் இடத்தில் மட்டும் அல்லாமல். **எப்பாலும் ஆம்** - எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்துள்ளவனாகிய.

தீர்த்திகைச் சடில சிவன் நேர்த்தி பெற்று அவிர்கண்மிசை
தீப் பொறிப் படிவு அமைந்தே,
திரிபதகை விட வந்து, விரிபதும சரவணச்
சேக்கையில் விளங்கு முருக
மூர்த்தி கைத்தலம் உற்ற கார்த்திகைத் தாயர் தவம்
முன்பு உதவும் அன்பு பொங்கும்
முறையினில் கொங்கைகளில் நிறை அமுதம் இனிது ஊட்டி,
முத்தி, அருள் முத்தி இன்பப்
பூர்த்தி கைத்தலம் உற்ற ஆர்த்தி கைவல்யமிசை
புளகம் மிக இளக உள்ளம்
பூரணாகரம் உதவு காரணா என மிகப்
போற்றி செயும் வேல்(த்) திலகனே!
சீர்த்தி கைப்பற்றி உறு பார்த்திகைப்பு அற்று ஒழி ஓர்
செங்கீரை ஆடியருளே!
சிரவணபுரத்தில் அவிர் சரவண பவக்குமர!
செங்கீரை ஆடியருளே! 5

**சீர்த்திகைச் சடில சிவன்** - கங்கை ஆற்றுக்கு இடமான சடையை உடைய சிவபெருமானின். **நேர்த்திபெற்று அவிர் கண்மிசை** - சிறப்புற்றதாகிய நெற்றிக்கண்ணில். **படிவு** - வடிவம். **திரிபதகைவிட** - கங்கையில் செலுத்த. **விரி பதும** - மலர்ந்த தாமரைகளை உடைய, வினைத்தொகை. **சேக்கையில்** - படுக்கையில். **முருகமூர்த்தி** - முருகப்பெருமான். **கைத்தலம் உற்ற** - தங்கள் கைகளை வந்தடைந்த. முன்பு தவம் என மாறுக, பூர்வ புண்ணியம். **அமுதம்** - பாலை. முத்தி - முத்தமிட்டு. **முத்தி இன்பப் பூர்த்தி** - வீட்டுப்பேறு ஆகிய பேரின்ப நிறைவு. **கைத்தலம் உற்ற ஆர்த்தி கைவல்ய மிசை** - கிடைத்த அநுபவம் ஆகிய பந்தங்கள் அற்ற விடுதலை உணர்வால். **புளகம்** - மகிழ்ச்சி. உள்ளம் இளக என்க. **பூரணாகரம்** - குறையற்ற நிறைவை. **காரணா** - கடவுளே. **வேல்திலகனே** - வேலை ஏந்திய மேன்மையானவனே. **சீர்த்தி** - பெரும்புகழ். பார்த்திகைப்பு அற்று ஒழி - உலகியல் மயக்கம் நீங்கி அழியும்படி. சீர்த்தி உறு செங்கீரை, அற்றுஒழி செங்கீரை எனத் தனித்தனி இயையும். **ஓர்** - ஒப்பற்ற.

## *(பன்னிரு சீர் விருத்தம்)*

களி மிக்கு அமையும் முகமலரில்
கமழ்ந்த அருட் புன்னகை ஆட,
கவினும் மகர குண்டலத்தின்
கதிர்கள் எதிர்வில் விரித்து ஆட,
துளி பெற்று இயலும் கண்களிடை(ச்)
சுரந்த கருணை மிகை ஆட,
சோமன் நிகர்க்கும் வதனமிசை
சுட்டிச் சோதி சுழன்றாட,
ஒளி மிக்கு அமையும் மணித்திரள் ஆர்
உச்சி அவிர் சூழியம் ஆட,
உகள பதக் கிண்கிணி சதங்கை
ஒலித்தே மிகவும் கலித்தாட,
அளி மிக்கு அமைந்த திருவுளத்தாய்!
ஆடியருளாய் செங்கீரை!
அணி ஆர் சிரவைப் பதிஅரசே!
ஆடியருளாய் செங்கீரை! 6

**களி** - மகிழ்ச்சி. **எதிர்வில் விரிந்து** - மாறுபட்ட ஒளிகளைப் பரப்பி. **சுரந்த** - வழிகின்ற. **சோமன் நிகர்க்கும் வதனமிசை** - சந்திரனைப் போன்ற முகத்தில். **சுட்டி** - ஒருவகை நுதல்அணி, நெற்றிச்சுட்டி. **மணித்திரள்** - இரத்தினக் கூட்டம். **சூழியம்** - உச்சந்தலையில் அணியும் அணிகலன். **உகளபத** - இரண்டு பாதங்களிலும் உள்ள. **கலித்து** - நன்கு விளங்கி, **அளி** - கருணை.

ஓடும் கலையும் விலங்கினமும்
ஒயில் ஆர் கோழி மயில் கிளியும்
உற்ற ஏனல் புனத்து அடையாது
ஓட்டும் மணிக்கல் சிறுமியரும்,
கோடு உந்திய பல் மரத்து அணியும்,
கொழிக்கும் அருவித் தெழிப்புஇசையும்,
கோயில் வளமும், அணி நீற்றுக்
கோலக் கவுமாரரின் குழுவும்,
பாடும் புலவர்க்கு அணி விளங்கப்
பயிற்றும் வளங்கள் பற்பலவும்,
பார்த்தோர் உளம் கண் கொள்ளை கொளும்
பண்பார் குன்றம் தோறும் விளை -
யாடும் கருணைக் குருபரனே!
ஆடியருளாய் செங்கீரை!
அணி ஆர் சிரவைப் பதி அரசே!
ஆடியருளாய் செங்கீரை! 7

**கலையும்** - மான்களும். **விலங்கினமும்** - பலவகையான மிருகங்களும். **ஒயில் ஆர்** - அழகிய. **ஏனல் புனத்து** - தினைக்கொல்லைக்குள். **மணிக்கல்** - இரத்தினங்களாகிய சிறு கவண்கற்களை வீசுகின்ற, இது இலக்கிய மரபு, மணி போன்ற அல்லது அழகிய எனினுமாம். **சிறுமியர்** - தினைப்புனத்தைக் காவல் காக்கும் மகளிர். **கோடு உந்திய** - கிளைகள் மிகுந்த. **அணியும்** - வரிசைகளும். **கொழிக்கும் அருவித் தெழிப்பு இசையும்** - வளம்மிக்க அருவிகளின் ஓசையாகிய சங்கீதமும். **அணி நீற்றுக்கோலக் கவுமாரரின் குழு** - பூசிய விபூதியின் அழகினையுடைய முருகபக்தர்களின் கூட்டம். **அணி விளங்கப் பயிற்றும்** - பொருளணிகளை அமைத்துப் பாக்களை இயற்றக்

கற்பிக்கும், கற்பனையை மிகுவிக்கும் என்றபடி. **உளம்கண்** - உள்ளத்தையும் விழிகளையும், உம்மைத்தொகை.

### *(வண்ண விருத்தம்)*

தனதன தனதன தனதன தனதன
தானன தந்தான

வரபதி சுரபதியுடன் இமையவர் மலர்
மாரி பொழிந்தார்கள்;
மதுரித கவி பகர் புலவர்கள் பரவினர்
வாழி மொழிந்தார்கள்;
திர மனம் நிலைபெறு தவ நிறைவினர் உயர்
சேவை விழைந்தார்கள்;
திசைபொலி இறைவர்கள் அனையவர் பணிபுரி
சீலம் நிறைந்தார்கள்;
அரகர சிவ குருபர எனும் அடியவர்
ஆர்வம் மிகுந்தார்கள்;
அதி பரிமள மலர் அணியல் செய்தவர்புனை
ஆவல் சிறந்தார்கள்;
அரன் நுதல் விழி வரு திருவருள் வடிவினன்!
ஆடுக செங்கீரை!
அணிபொலி சிரவணபுரம் இசை குருபரன்!
ஆடுக செங்கீரை! 8

**வரபதி** - வரத்தை உடைய தலைவன், வரம் என்னும் நவநிதிகளுள் ஒன்றன்பெயர் உபலட்சணமாக நிதிகள் அனைத்தையும் உணர்த்த, வரபதி குபேரன் ஆகிறான். **சுரபதி** - தேவராசன், இந்திரன். **மதுரித** - இனிய. **பரவினர்** - போற்றியவர்கள் ஆகி, முற்றெச்சம். **திர மனம்** - அலை பாயாத உள்ளம். **சேவை விழைந்தார்கள்** - தரிசனத்தை விரும்பி நிற்கிறார்கள். **திசைபொலி இறைவர்கள் அனையவர்** - திக்குப்பாலகர்களைப் போன்ற மன்னர்கள். **சீலம்** - ஒழுக்கம். **அதி பரிமள** - மிக்க நறுமணம் உள்ள. **மலர் அணியல்** - பூமாலை. **செய்தவர்** வினைத்தொகை. **புனை ஆவல்** - அணிவிக்கின்ற விருப்பம், பிறவினைப்பொருளில் ஆட்சி. **வடிவினன்** -

உருவத்தை உடையவனே. விளி. அடுத்த குரவன் என்பதும் அவ்வாறே.

**தனதன தனதன தனத்த தந்தன**
**தந்தா தந்தான**

**அருமறை முதல் எழுத்தில் ஒன்றி அ -**
**லங்காரம் தோயும்**
**அதிசய மயிலினை நடத்தி, அன்பர் அ -**
**கங்காரம் சாடி,**
**இருவிழியுடன் மனம் அறக் கவர்ந்தருள்**
**இன்பா! மஞ்சு ஆரும்**
**எழில் வரைதொறும் நடம் இயற்றிடும் புகழ்**
**எந்தாய்! விண்தோயும்**
**அருணை நல் நகரிடை உதித்திடும் தவன்**
**அன்பு ஆரும் பாடல்**
**அநுதினம் நுவல்பவர் அகத்து எழுந்தருள்**
**அங்கா! இங்கீத!**
**திருவருள் பொழி விழி படைத்திடும் குரு!**
**செங்கோ செங்கீரை!**
**திருவளர் சிரவண புரத்துஇலங்குஇறை!**
**செங்கோ செங்கீரை!** 9

**அருமறை முதல் எழுத்தில் ஒன்றி** - வேதத்தின் முதல் அக்கரமான ஓம் என்பதுடன் தொடர்புபெற்று, ஒகரம் என்பது மயிலின் ஒருபெயர். இது ஒ என்னும் குற்றெழுத்தும் ஆம். இது ஓ என்னும் நெடிலுடன் தொடர்பு உடையது. **அலங்காரம் தோயும்** - அழகு பொருந்தி விளங்கும். **நடத்தி** - செலுத்தி. **அன்பர் அகங்காரம் சாடி** - அடியார்களின் நான் என்னும் அகம்பாவத்தை அழித்து. **மனம்** - உள்ளத்தை. **அற** - முற்றிலுமாக. **மஞ்சு ஆரும்** - மேகங்கள் நிறைந்த. **வரைதொறும்** - குன்றுகள் எல்லாவற்றிலும். **அருணை** - திருவண்ணாமலை. தவன் என்றது அருணகிரிநாதரை. **பாடல்** - திருப்புகழ் முதலிய ஆறு பனுவல்களை. **அங்கா** - திருமேனியை உடையவனே. **இங்கீத** - இங்கித என்பதன் நீட்டல் விகாரம், இனியவனே.

தனதனத் தனனத் தனத்த தந்தன
தந்தா தந்தான

மலர் இட்டு முடித்திடப் படும் குழல்
மஞ்சே; மிஞ்சு ஓகை
மனதுள் பெருகப் புகுத்து கண்களி
வண்டே; கொண்டாட
இலகு அற்புத வத்திரத் திறம் பகர்
இந்தே; சந்தேக இடை கட்டம் உறப் பணைத்த கொங்கை இ-
றும்பே; அன்பு ஆகும்
நலம் மிக்கு இசை புட்குரல்(ச்) செய் கந்தரம்
நந்தே; என்று ஆர்வம்
நவில் அக் குறவிக்கு உவப்பு உறும்படி
நன்றே நின்று ஓதும்
திலகப் புலமைக்குணப் பெருந்தகை!
செங்கோ செங்கீரை!
சிரவைப் பதியில் தழைத்திடும்குக!
செங்கோ செங்கீரை! 10

**குழல் மஞ்சே** - கூந்தல் மேகமே ஆகும். **மிஞ்சு ஓகை** - பெருகுகின்ற மகிழ்ச்சி. **புகுத்து** - செய்கின்ற. **கண் களிவண்டே** - விழிகள் மயக்கம் உடையவண்டுகளே. **கொண்டாட** - போற்றும்படி. **வத்திரத்திறம்** - முகத்தின் சிறப்பு. **பகர்இந்தே** - சொல்லப்படுகின்ற சந்திரனே. **சந்தேக** - உண்டோ இல்லையோ என்னும் ஐயத்திற்கு இடமான. **கட்டம் உற** - கனத்தால் வருந்தும்படி. **பணைத்த** - பருத்த. **இறும்பே** - குன்றுதான். **புட்குரல் செய் கந்தரம்** - புள்ளொலி எழுப்புகின்ற கழுத்து, கலவிக் காலத்தே மகளிர் எண்விதமான பறவைகளின் ஒலியை எழுப்புவர் என்பது காமநூல் தரும் செய்தி. "மயில் புறவு அன்னம் காடை வண்டு வாரணம் செம்போத்துக் குயில் என இசைக்கும் எட்டினைப் பயின்று" என்பது கந்தபுராணம் (ப-5-45). **நந்தே** - சங்குதான். **குறவிக்கு** - குறமகளாகிய வள்ளி நாயகிக்கு. **திலகப்புலமைக்குண** - தலைமையான கல்வியாற்றலை உடைய.

## 3. தாலப் பருவம்

### *(பன்னிரு சீர் விருத்தம்)*

கால் உந்திடு மண்டலம் அளந்து
கடந்து நெருங்கித் தழைத்து இருண்டு
கண்ணீர் பொழிந்து கச்சோதம்
கலந்து களி வண்டு இசை பெருக்கி
மால் உந்திடும் மண்டலம் என்ன,
வளம் மிக்கு அமைந்து ஓங்கிடு திறத்தால்,
மால் உந்திடச் செய்திடும் சோலை
மால் உந்தியினோடு இதயம் என்ன
மேல் உந்து இனனும் சந்திரனும்
விரவும் தகை அவ் வளவு அன்றி,
விளங்கும் நெடுமால் கரதலத்தின்
மிளிர் நேமியும் வெண் சங்கும் எனச்
சாலும் சிரவைப் பதிக்கு அரசே!
தாலோ தாலோ தாலேலோ!
தண்டாயுதக் கைப் பெருமானே!
தாலோ தாலோ தாலேலோ! 1

**கால் உந்திடு மண்டலம் அளந்து கடந்து** - காற்றுமண்டலம் இதுவரைக்கும் தான் எனக் கணித்துப்பார்த்துவிட்டு, அதனைத் தாண்டி. **கள்நீர்** - (மலர்களில் இருந்து) தேன். **கச்சோதம் கலந்து** - மின்மினிப் பூச்சிகளோடு தொடர்பு கொண்டு. **களி** - மயங்கிய. **மால் உந்திடும் மண்டலம் என்ன வளம் மிக்கு அமைந்து** - திருமால் வசிக்கும் வைகுந்தத்தைப்போல மிகச் செழிப்புப் பெற்று. **மால் உந்திடச் செய்திடும் சோலை** - விருப்பத்தை மிகுவிக்கின்ற பூங்காவனங்கள். **மால் உந்தியினோடு** - திருமாலின் கொப்பூழினோடு. **இதயம் என்ன** - மார்பையும் போல. **மேல் உந்து இனனும்** - மேலே இயங்குகின்ற சூரியனும். கொப்பூழ் மார்பு, சூரியன் சந்திரன், நிரனிறை. **அவ்வளவு அன்றி** - அதுமட்டும் அல்லாமல். **கரதலத்தின்** - கைகளில் உள்ள. **மிளிர் நேமியும்** - ஒளிர்கின்ற சுதர்சன சக்கரமும். **சாலும்** - சிறந்து விளங்கும்.

பொய் வம்பு அழுத்தும் புன்சமயப்
புணர்ப்பு மறையினிடத்து இசைதல்
போல, இருண்ட இயல்பினையும்
பொருந்தக் கொண்டு, புண்ணியர்க்கு ஆம்
மொய் வம்பு அழுந்து அ மலரினைத் தன்
முடிக்கண் சுமந்து, தொண்டர் இனம்
முன்நேர் தோறும் தலைவணங்கி,
முருகோன் பதத்தில் மலர்இடில் யாம்
உய்வம்; பழுத்த பத்தி உளத்து
உள்ளீர்! என்ன அளிகொடு உரைத்து,
உறும் அஃறிணையும் அநித்த உலகு
ஒருவி உண்மை பெற விழையும்
சைவம் பழுத்த சிரவை உளாய்!
தாலோ தாலோ தாலேலோ!
தண்டாயுதக் கைப் பெருமானே!
தாலோ தாலோ தாலேலோ! 2

**பொய்வம்பு அழுத்தும்** - உண்மையல்லாத தீய செயல்களில் ஈடுபடுத்தும். **புன் சமய** - இழிந்த மதங்களின். **புணர்ப்பு மறை** - இட்டுக்கட்டப்பட்ட சமய நூல்கள், **மொய்வம்பு அழுந்து அ மலரினை** - வண்டுகளும் நறுமணமும் படிந்த அந்தப் பூக்களை. **முடிக்கண்** - தலையில். **முன் நேர்தோறும்** - எதிர்ப்படும் போதெல்லாம். **உய்வம்** - ஈடேறுவோம். **பழுத்த** - நன்கு கனிந்த. **அளிகொடு** - அன்போடு. **உறும் அஃறிணையும்** - தன்பால் வந்தடையும் விலங்கு முதலிய உயிர்களும், இழிவு சிறப்பும்மை. **அநித்த** - நிலை அற்றதாகிய. **உலகு ஒருவி** - உலகியலை நீத்து. **உண்மை** - நிலையானவீட்டுப்பேறு. **சைவம் பழுத்த** - சைவநெறி செழித்துள்ள.

இழைக்கும் புகட்கும், பஞ்சுடன் பட்டு
இழைக்கும், புகட்கும் மயங்கும் மின்னார்
இடை நேர் இன்பம் பெறவிரும்பி
இணைதீர் தனத்தில் துன்பு அமைந்தே,

உழைக்கும் கடற்கும் நேர் விழி ஒத்து
உழன்று சுழன்று கட்டு அமைந்த
ஓதி நிகர்க்கும் மூல மலத்து
உயிரும் உணர்வும் தடுமாறி
பிழைக் கும்பு அடியேம் தெளிவுஅடைந்து
பிழைக்கும்படி ஆம் திருவுள்ளம்
பெருக்கும் கருணை சுரந்து இரங்கிப்
பேர் ஆனந்த வாழ்வு அமைந்து
தழைக்கும்படி ஆள் சிரவை உளாய்!
தாலோ தாலோ தாலேலோ!
தண்டாயுதக் கைப் பெருமானே!
தாலோ தாலோ தாலேலோ. 3

**இழை கும்புகட்கும்** - அணிகலன்களின் குவியலுக்கும். **பஞ்சுடன் பட்டு இழைக்கும்** - பருத்தியாலும் பட்டினாலும் ஆன நூல்களைக் கொண்டு நெய்யப்பட்ட ஆடைகளுக்கும், இழை துணிக்கு ஆகுபெயர். இங்கு புகழ் என்றது காமுகர் பாராட்டி உரைக்கும் காதல் உரைகளை. **மின்னார் இடைநேர் இன்பம்** - மகளிரின் இடுப்பைப்போல மிக மெலிந்த சுகத்தை, சிற்றின்பம் என்றபடி. **இணைதீர் தனத்தில்** - இரட்டுற மொழிதல், 1. நிகரற்ற முலைகளைப் போன்று 2. சோடியாக எழுந்துள்ள நகில்களைப்போல. மிகப்பருத்த, மிகுந்த என்பது கருத்து. "இணை தபுத்து எழும் இணைத்தடம் கோடும்" (திருநாகைக்காரோணப் புராணம், நாட்டுப்படலம் 37) என்பார் மகாவித்வான். சிற்றின்பம் வெஃகிப் பெருந்துன்பம் அடைதலைக் குறித்தவாறு. **உழைக்கும்** - மானுக்கும், (மிரட்சி உடைய கண்). **கட்டு அமைந்த** - திண்மையான. **ஓதி நிகர்க்கும்** - கூந்தலைப் போன்று கருமை வாய்ந்த. **மூலமலத்து** - ஆணவத்தால். **பிழை கும்பு அடியேம்** - தவறு செய்யும் கூட்டமாகிய எளியேங்கள். **சுரந்து** - பொழிந்து. **தழைக்கும்படி** - ஆன்ம முன்னேற்றம் அடையுமாறு. **ஆள்** - ஆட்கொள்கின்ற. ஆள்சிரவை என வினைத்தொகை ஆக்கிச் சிரவணபுர மடாலயமே ஆட்கொள்ளும் எனத் தலச்சிறப்பு ஆக்கினும் அமையும். மேலைச் செய்யுளில் சைவம் பழுத்த சிரவை என்றதனை இணைத்துப் பார்க்க.

பந்தத்து அமிழ்ந்து, யாங்கள் எலாம்
பாவ புண்ணியங்களை உள்
பகுத்தும் உணரேம்; போதனை ஆம்
பரிசும் அறியேம்; பாதார -
விந்தத்து அமிழ் சத்தியத் தவமாய்
மிளிரும் சரியை கிரியை செயில்
விமலம் ஆகும் என்று உளத்தில்
விளக்கி, யோகம் மெஞ்ஞான ஆ -
னந்தத்து அமிழ் சீர் தர, ராமா -
னந்தப் பெயர்ச் சற்குருபரனா
நண்ணும் உனது திருவருட்கு
நாம் செய் கைமாறு ஒன்று உளதோ?
சந்தத் தமிழ்ச் சீர்ச் சிரவணவூர்த்
தலைவா! தாலோ தாலேலோ!
தண்டாயுதக் கைப் பெருமானே!
தாலோ தாலோ தாலேலோ! 4

**பந்தத்தில் அமிழ்ந்து** - இருவினைகளில் சிக்கி. **உள்பகுத்தும்** - உள்ளத்தில் ஆராய்ந்தும். **போதனை ஆம் பரிசு** - உபதேசமாகிய பேறு. **பாதாரவிந்தத்து அமிழ்** - திருவடித் தாமரைகளில் படியும். **சத்தியத் தவமாய் மிளிரும்** - உண்மையான வழிபாடாக விளங்கும். **சரியை** - பொதுவாக ஆலயத்தொண்டும் வழிபாடும். **கிரியை** - பொதுவாக உருவத்திருமேனிக்கு இயற்றும் வழிபாட்டுச் சடங்குகள். **விமலம் ஆகும்** - (பாவங்கள் நீங்கி) தூய்மை பெறலாம். **யோகம்** - பொதுவாக இறைவனை உள்ளத்தில் தியானித்தல். **மெய்ஞ்ஞானம்** - உயிராகிய தன் தன்மையையும், பதியாகிய இறைவனின் தன்மையையும் ஐயந்திரிபின்றி உணர்தல். **ஆனந்தம்** - மெய்யறிவால் உண்டாகும் இன்பம். **அமிழ்சீர்** - முழுமுதலாகிய சிறப்பு. **நண்ணும்** - எழுந்தருளியிருக்கின்ற.

அவத்தில் உறக்கம் தரும் விடய ஆ -
வரணம் ஒழித்தாய்; ஆங்கு அதுபோல்
அலகு இல் உடம்பும் கரணமும் உற்று,
அலைக்கும் புவன போகத்து உற் -

பவத்தில் உறக்கும் இருவினையை,
பந்தம் இயற்றும் மாயைதனை,
பசுவாப் புரியும் மூலமலப்
பாழ் சேர் சொரூப ஆவரணம் அற,
சிவத்தில் உறக்கும் உபகாரச்
சிற்சத்தியின் மேல்மாடம் உறச்
சேர்த்தும், உண்மைப் பெருந்துணையாய்,
செலுத்தும் சோபானம் அது ஆம் மா-
தவத்தில் உறக்கும் சிரவணவூர்த்
தலைவா! தாலோ! தாலேலோ!
தண்டாயுதக் கைப் பெருமானே!
தாலோ தாலோ தாலேலோ! 5

**அவத்தில் உறக்கம் தரும்** - ஒரு பயனும் இல்லாமல் வீணில் சாக வைக்கும். **விடய ஆவரணம் ஒழித்தாய்** - ஐம்புல நுகர்ச்சி வேட்கை என்னும் திரையை அகற்றினாய், நுகர்ச்சியை விழையாத அறிவை அளித்தாய் என்பது கருத்து. ஆங்கு அசை. **அலகு இல்** - கணக்கற்ற. கரணம் - அந்தக்கரணங்களும். **புவன போகத்து** - நுகர்ச்சிக்கு உரிய உலகிலும் நுகர்ச்சிப்பொருள்களுடனும். **உற்பவத்தில் உறக்கும்** - பிறவியில் வாடச் செய்யும். **பந்தம் இயற்றும்** - ஆசைகளில் சிக்க வைக்கும். **மூலமலம்** - ஆணவம். **சொரூப** - இயல்பான வடிவத்தை உடைய. **ஆவரணம் அற** - மறைப்பு நீங்க. **சிவத்தில் உறக்கும்** - பரசிவத்தில் ஐக்கியப் படுத்தும். **உபகார** - பேருதவியைப் புரிகின்ற. **சிற்சக்தியின் மேல்மாடம் உற சேர்த்தும்** - மேன்மையான மண்டபத்தை அடைவிக்கும், இது சத்திநிபாதத்தைக் குறித்தது. **சோபானம்** - படிக்கட்டு, அது பகுதிப்பொருள் விகுதி. **மாதவத்தில் உறக்கும்** - தவநிலையில் நிலைநிறுத்தும்.

## *(இரட்டையாசிரிய விருத்தம்)*

போல் மறை இலாது உயரும் மேல் மறை எனத் திருப்
புணர் மந்திரப் பெயர் பெறப்
போதம் மலிதிருமூல நாதர் அநுபூதி கொள்
புகைப்படத்து உற்ற நூலில்,

ஊன் மறைதரத் தூங்கும் வான் முறையினார்கள் சிவ
லோக போகத்தியோகம்
உலையாத பேர்கள் அவர் நிலை ஆனதோ சொல்ல
ஒண்ணாதது என்று அருளினார்;
நான் மறை எனப் பகரும் நூல் முடிவும் உள்ளத்துள்
நாடி, ஊடாடி நோக்கில்,
நான் மறைவது எனும் முடிவு தான், மலை இலக்கு ஆகி
நம் உணர்வின் முன் நிற்பதால்,
தான் மறைவு உறாது, உன் உள் யான் மறைதரச் செய்குரு!
தாலேல தாலேலவே!
சரவணத் தடத்தில் அவிர் சிரவணபுரத்தலைவ!
தாலேல தாலேலவே! 6

**போல்மறை இலாது உயரும் மேல்மறை என** - தனக்கு இணையான வேறொரு அறிவு நூல் இல்லை எனக் கூறும்படிப் பெரும்சிறப்பு வாய்ந்த ஆகமம் ஆக. **திருப்புணர் மந்திரப் பெயர் பெற** - திரு என்னும் சிறப்பு அடை இணைந்த மந்திரம் என்று புகழ்பெறுமாறு, திருமந்திர நூல், பத்தாம் திருமுறை. **போதம் மலி** - ஞானம் நிறைந்த. **புகைப்படத்து** - போட்டோவைப் போல, இச் சுவாமிகள் காலத்து அறிவியல் முன்னேற்றப் பதிவு இது. கண்ணாடிபோலக் காட்டுதல் எனலே பழ மரபு. இங்கு கூறப்படுவது,

"தூங்கிக் கண்டார் சிவலோகமும் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் சிவயோகமும் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் சிவபோகமும் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் நிலைசொல்வது எவ்வாறே" (129)

என்னும் திருமந்திரச் செய்யுள். **ஊன் மறைதரத் தூங்கும்** - உடலைப் பற்றிய நினைவு மறைந்துவிடும்படி நிட்டையில் ஆழ்ந்திருக்கின்ற.

கட்டறுக்க ஒண்ணாக் கருவிகரணாதி எல்லாம்
கட்டறுத்து நிட்டையிலே தூங்குவதும் எக்காலம்
(மெய்ஞானப் புலம்பல் 74)

என்பார் பத்திரகிரியார். **வான்முறையினார்கள்** - மிக உயர்ந்த நிலையினர். **உலையாத** - குறையாத. **நிலை ஆனதோ** - நிலையோ எனில், ஆன பகுதிப்பொருள் விகுதி. **ஊடாடி** - பலவிதக் கண்ணோட்டங்களில். நான் மறைவது - யான் என்னும் அகங்காரம் அழிவது. **தான் மறைவு உறாது** - (குருநாதராக எழுந்தருளியுள்ள) இறைவன் மறைந்து விடாமல். **உன்உள்** - உன்னுடைய உள்ளத்தில். **யான்** - அகங்காரம்.

**விட்டில் ஆகிய உணர்வு உள்விட்டிலாது, இளமகளிர்**
**வெம் போக சம்போகமுள்**
**வீழவேள் மதி நலத்து ஆழவே, புவிமனிதர்**
**மெச்சு கொடு நச்சு உருவம் ஆம்**
**துட்டில் ஆம் ஆசை இடர் தொட்டிலாது ஓட, உயர்**
**சுக சரவணக் கஞ்சமே**
**தொட்டிலா நிலவிய நின் மட்டுஇலா ஆனந்த**
**சோதி அநுபூதி இன்பம்**
**சொட்டு இலா அத்துரியம் எட்டி, யான் எனது என்ற**
**சோக மோகத்து உதிக்கும்**
**சொல்லுடன் பொருளும், வரும் அல்லுடன் பகலும் இசை**
**சுட்டு அறச் சுட்டு ஒழித்துத்**
**தட்டு இலாது எனது உளக் கட்டில் ஆம் வகை செய்குக!**
**தாலேல தாலேலவே!**
**சரவணத் தடத்தில் அவிர் சிரவணபுரத்தலைவ!**
**தாலேல தாலேலவே!** 7

**விட்டில் ஆகிய உணர்வு உள்விட்டிலாது** - (விளக்கின் ஒளியால் கவரப்பட்டு அதில் பாய்ந்து இறப்பது ஆகிய) விட்டில் பூச்சியைப் போன்ற மனநிலையை உள்ளத்திலிருந்து நீக்கி விடாமல், ஆகிய என்றது உவமப்பொருளில் வந்தது. ஒப்பு : "கருத்தழிவான், வேம்பரிசில் உடல்கரிந்தும் விளக்கு விடாப் பதங்கம் போல்" (குற்றாலப்புராணம், மந்தமாருதச்.51) **வெம்** - விரும்பப்படுகின்றதும். **போக** - இன்பம் பயப்பதுமாகிய. **சம்போகமுள்** - கலவியுள், அத்துச் சாரியை கெட்டது. **வீழ** - சிக்கிக் கொள்ள. **வேள்மதி** - விரும்புகின்ற அறிவு, வினைத்தொகை. **நலத்து ஆழவே** - (அதனின்றும் நீங்கி)

நன்னெறியில் பயில்வதற்கும், ஏகாரம் அசை. **மெச்சு** - பாராட்டுகின்ற. **துட்டில்** - பணத்தில். **ஆசை இடர்** - ஆசையாகிய துன்பம், உய்வினைத் தடுக்கும் தடை எனினும் ஆம். **தொட்டிலாது ஓட** - என்பால் அமையாது நீங்கும்படியும், ஆடி, ஓட ஆகிய ஈரிடங்களிலும் எண்ணும்மை விரிக்க. **சரவணக்கஞ்சமே** - சரவணப் பொய்கையில் உள்ள தாமரையையே. **மட்டு இலா** - எல்லையற்ற. **சொட்டு** - குற்றம். **அ** - அந்த, நெஞ்சறி சுட்டு. **துரியம் எட்டி** - இறைவனைத் தவிர ஏனைய பிற யாவும் நீங்கி நிற்கும் ஆன்மாவின் சுத்த நிலையை அடைந்து. **சோகம்** - வருத்தம். **மோகம்** - மயக்கம். **அல்லுடன் பகலும்** - கேவல சகல நிலைகளும். **இசை சுட்டு** - பொருந்துகின்ற பிணிப்பு, வினைத்தொகை. **சுட்டு ஒழித்து** - (உலகியற்பொருள்களை இது, இது எனத் தனித்தனியா - கக்கொண்டு) குறிப்பிட்டு அறியும் நிலையினின்றும் நீங்கி. **சுட்டு இறந்து அறிதல்** - அத்துவிதமாய் நின்று அறிதல். **தட்டு** - தடை. **உளக்கட்டு** - மனத்தில் நிலைநிறுத்தல், தியானம். "சுட்டி உணராமல் துரிய நிலையாய் வெளியில் விட்ட நின்னை யானோ வியப்பேன் பராபரமே" (பராபரக்.129) என்னும் தாயுமானவர் வாக்கு இங்கு நினைக்கதக்கது.

குறிப்புரை : காட்சியின்பத்தால் கவரப்பட்ட விட்டிற்பூச்சி விளக்குத் தீயில் சாகும்வரை பலமுறை வீழ்ந்து இறக்கும். சூடுபட்டும் அதற்கு அறிவு வராது. இதைத்தான் சுவாமிகள், "விட்டில் ஆகிய உணர்வு" என்கிறார். "தீப்புகு விட்டிலில் இன்மொழியாரில் பல்நாள் விழுகின்ற என்னை" என்பது மணிவாசகம் (6-5).

## *(வண்ணவிருத்தம்)*

**தனதன தனனா தனதன தனனா**
**தானா தானானா**

**உமை அருள் மதலாய்! திருமகள் மருகா!**
**ஊன் ஆர் வேல் மார்பா!**
**உயிரினுள் உயிராய் ஒருக்கணம் அகலாது**
**ஓர்வான் நீர் ஈவாய்!**

கமைமுதல் அமை மாதவம் நிறை பெரியோர்
காண் ஆர்வா! மாண் ஆர்
கமழ் மதுரித பாவலர் நசை அருள் ஓர்
காவே! தூவேதா!
அமை நிகர்தரு தோள் பெறு குறமகள் சேர்
ஆர்வா! தார்வாகா!
அணிபொலி மயில் வாகனம் இவர் ஒளி தோய்
ஆகா! யோகா! நீள்
சமய நல் முதல்வா! அமை பரி புரணா!
தாலோ தாலேலோ!
சரவண பவனே! சிரவண புரியாய்!
தாலோ தாலேலோ! 8

**மதலாய்** - மகனே. **ஊன்ஆர்** - பகைவர்களின் உடல்தசை ஒட்டிக்கொண்டுள்ள. **ஓர்வான்** - உணர்வதற்காக. **நீர்** - அன்பு, பக்தி. **கமைமுதல் அமை** - பொறுமை முதலிய நற்பண்புகளைப் பெற்றுள்ள. **காண்** - தரிசனம் செய்கின்ற. **மாண் ஆர்** - மேன்மை பொருந்திய. மதுரித கமழ் பாவலர் என இயைக்க. இனிமையை உண்டாக்குகின்ற கவிதைகளைப் படைப்பவர்களின். **நசை** - விருப்பங்களை. **காவே** - கற்பகச்சோலை போன்றவரே. **தூவேதா** - சுத்தமான மறைகளால் சுட்டப்படுபவனே. **அமை** - மூங்கில். **தார்வாகா** - மாலைகளை அணிந்த தோளனே. **இவர்** - செலுத்துகின்ற. **ஆகா** - திருமேனியனே. **யோகா** - யோகிகளின் தலைவனே. நற்சமய முதல்வா என மாறுக. கொலைபுலை இல்லாத தூய மதங்கள் போற்றும் கடவுளே. **அமை பரிபுரணா** - இயல்பாகவே அமைந்த நலங்களை உடையவனே, "சென்றடையாத திருவுடையான்" என்றபடி.

தனனத் தனதன தனனத் தனதன
தானா தானானா

அருணக் கதிர்விரி அருள்மெய்ப் பொலிவுஅமை
ஆகா! வாகு ஆய
அருணைச் சுகமுனி புகல் அற்புதகவி
ஆரா! ஆதாரா!

கருணைத் தவ முனிவரர் உள்பரவு இரு
காலா! கோலாலா!
கருதித் தொழுது உருகு அரிவைத் திரள் பெறு
கான் ஆர் தேன்ஆரா!
வெருள் மிக்கு அமைதரு பதிதக் குழுவினர்
மேல் ஏவா வேலா!
விரி பத்தியின் மிக வழிபட்டவர் உடல்
வீயாதே ஆள்வாய்!
தருணத்து அடியவர் விழி முற்படும் இறை!
தாலோ தாலேலோ!
தயைமிக்கு இசைதரு சிரவைக் குருபர!
தாலோ தாலேலோ! 9

**அருண** - செந்நிறமான. **ஆகா** - திருமேனியனே. வாகு ஆய - தோளில் இருப்பவராகிய. **அருணைச் சுகமுனி** - திருவண்ணாமலையினரும் கிளிவடிவினரும் ஆகிய அருணகிரிநாதர். **புகல்** - இயற்றியருளிய. **ஆரா** - மாலைகளை அணிந்தவனே. **ஆதாரா** - அனைத்திற்கும் அடிப்படை ஆனவனே. **உள் பரவு** - தங்கள் மனத்தில் இருத்தி வழிபடுகின்ற; இனி முனிவர்களின் உள்ளத்தில் முழுவதுமாக நிறைந்திருக்கின்ற எனினும் ஆம். **காலா** - திருவடிகளை உடையவனே. **கோலாலா** - ஆடம்பரம் மிக்கவனே. **கருதி** - நினைத்து. **அரிவைத்திரள்** - மகளிர் கூட்டம், அரிவை என்றது பருவம் சுட்டாமல் பொதுப்பொருளில் பயின்றது. **கான்ஆர்** - நறுமணம் பொருந்திய. **தேன் ஆரா** - வண்டுகள் மொய்க்கின்ற மாலைகளை அணிந்தவனே. **வெருள்மிக்கு அமைதரு** - மனமயக்கம் நிறைந்த. **பதிதக்குழுவினர்** - தீக்குணங்கள் நிறைந்த கீழோர். **ஏவா** - செலுத்தப்படா நின்ற. **விரி பத்தியின்** - மிகுந்த அன்பின் காரணத்தால், ஏதுப்பொருள். **வீயாதே** - அழிந்து படாமல். **தருணத்து** - உரிய காலத்தில். **இறை** - கடவுளே, விளி. **தயை** - கருணை.

தய்யத் தனதன தனதன தனதன
தானா தானானா

வள்ளிக்கொடி சுரர்பிடி மருவிய மண -
வாளா தாலேலோ!
வையத்து அவிர்தரு கிரிதொறும் நடம்இடு -
வானே தாலேலோ!
புள்ளிச் சிகிமிசை தரிசனம் உதவு வை -
போகா தாலேலோ!
பொய் அற்றிடு தவமுனிவரர் செவி நுகர்
போதா தாலேலோ!
கள்ளில்(ச்) சுவைபொலி புலவர்கள் கவிவிழை
காதா தாலேலோ!
கள்ளக் குணம் அறும் மனமிசை உறு பிர -
காசா தாலேலோ!
தெள்ளித் தருதினை இடி நுகர் நசைபொலி
சீலா தாலேலோ!
செல்வச் சிரவண புரம் மருவியகுரு -
தேவா தாலேலோ! 10

**சுரர்பிடி** - தெய்வயானை. **வையத்து** - உலகத்தில். **கிரிதொறும்** - மலைகளில் எல்லாம். **புள்ளிச்சிகிமிசை** - கண்களைப் பெற்ற தோகையை உடைய மயிலின்மீது. **வைபோகா** - மகிழ்ச்சியை உடையவனே. **செவி நுகர்** - காதுகளால் கேட்கப்படுகின்ற. **போதா** - ஞானத்தை உபதேசிப்பவனே. **கள்ளில்** - தேனை விட. **கவிவிழை** - பாடல்களை விரும்புகின்ற. **கள்ளக்குணம்** - வஞ்சகம். **பிரகாசா** - ஒளிமயம் ஆனவனே. **தெள்ளித் தரு** - நன்றாகக் கொழித்து (சல்லித்து) அளிக்கும். **தினை இடி** - தினைமாவு, இடிக்கப்பட்டது, முதல்நிலைத் தொழிற்பெயர். **நசை** - விருப்பம். **சீலா** - வழக்கத்தை உடையவனே, அடிக்கடி விரும்பி உண்பவன் என்றவாறு.

## 4. சப்பாணிப் பருவம்

### (இரட்டையாசிரிய விருத்தம்)

சடம் கைத்து, இயற்றிடு சடங்கைத் தவிர்த்து, உற்ற
சவம் ஆன உவமானம் ஆர்
தவ மானசத் தொண்டர் அவமானம் உற்றிட,
சாற்று தேனுற்று அமைந்து,
படங்கைத் தவிர்த்தருள் உடங்குற்ற தெய்வ மெய்ப்
பாவையின் அவாவை நீத்து,
பரலினில் தெருமரல் இசைந்து உறுதினைப்புனம்
பாலிக்குவாள்முனம் போய்,
குடங்கைக்கு அகன்று இரு குடம் கைத்து எழுந்த மெய்க்
கோலங்கள் சால நோக்கி,
கொளு தழலின்மிசை இட்ட மெழுகு என்ன நெஞ்சம்
குழைந்து உற, விழைந்து கூப்பும்
தடங்கைத் தலம் கொண்டு, உடம்பு உற்ற பயன் அருள் ஓர்
சப்பாணி கொட்டியருளே!
தர வைபவ நிலை உதவு சிரவை நகர் வேல! ஒரு
சப்பாணி கொட்டியருளே! 1

**சடம் கைத்து** - தத்தம் உடல்களை வெறுத்து, உடற்பற்று நீங்கி என்பது கருத்து. சடங்கைத் தவிர்த்து. ஞானநிலையில் மேல்நிலைக்குச் செல்லச்செல்ல வழிபாட்டுச் சடங்குகளைக் குறைத்துக்கொண்டுவிடுவர். **சவம் ஆன உவமானம்ஆர் தவ மானசத் தொண்டர்** - பிணம் ஒன்றை நிகர் எனச் சொல்லலாம்படி எல்லாவகையிலும் இச்சையோ செயலோ இல்லாதபடி இருக்கும் தவத்தை உடைய அடியார்கள், மானசத் தவத்தொண்டர் என மாறுக. **அவமானம் உற்றிட** - தம் முழு வைராக்கிய நிலை பயனற்றதோ என ஐயமுற்றுப் பழிப்புக்கு ஆளாகும்படியும், இறைவனாகிய முருகனே வள்ளியம்மையின்மீது மோகம் கொண்டு கை கூப்புவதால் நிவ்ருத்தி மார்க்கிகள் அவமானம் அடைகின்றனர். **சாற்று தேனுற்று** - புகழ்ச்சிக்குரிய மகிழ்ச்சியையடைந்து, தேனித்தல் என்பது போலத் தேனுறுதல் எனப் படைத்துக் கொள்ளப்பட்ட ஆட்சி. "கேசவன் பேரிட்டு

நீங்கள் தேனித்திருமினோ" (பெருமாள் திருமொழி 4-6-1) படங்கைத் தவிர்த்தருள் என்னும் தொடர் தெளிவாக விளங்கவில்லை. **உடங்குற்ற** - தன் அருகிலேயே உள்ள. **மெய்த்தெய்வப்பாவையின்** - உண்மையிலேயே தேவலோகப் பெண் ஆகிய தெய்வயானையின் மேல் உள்ள. **அவாவை** - ஆசையை. **பரலினில் தெருமரல் இசைந்து** - வழியில் கிடக்கும் பருக்கைக் கற்களால் நடப்பதற்குத் துன்பப்பட்டு. **தினைப்புனம் பாலிக்குவாள் முனம் போய்** - தினைக்கொல்லையைக் காவல் காக்கும் வள்ளிநாயகியிடம் சென்று. **குடங்கைக்கு அகன்று** - குவித்த கைக்குள் அடங்காமல் பருத்தும்; **இருகுடம் கைத்து எழுந்த** - இரண்டு நீர்க்குடங்களை நிகர்த்துப் பூரித்தும். **மெய்க்கோலங்கள்** - உடலின் எழில்களை. **சால** - மிகவும். **கொளு** - எரிகின்ற. **விழைந்து** - மிகவும் ஆசைப்பட்டு. **தடம்கை** - பெரிய கரங்கள். "தருக்கிக் கண் களிக்கத் தெண்டனிட்டுத் தண்புனத்தில் செங்குறத்திக்கு அன்பு உறச் சித்தம் தளர்வோனே" (90) என்பார் அருணகிரிநாதர். **தர வைபவ நிலை** - தகுதியுள்ளதும் சிறப்பு மிக்கதுமாகிய வாழ்வு.

**நரம் உற்றது ஆம் அரிய புரம் உற்றும் அதுகொண்டு**
**நண்ணு பயன் எண்ணிடாமல்,**
**நாய் நரிகள் கழுகு எருவை பேய் கொடிகள் என்னவே**
**நவை உணாச் சுவையில் மூழ்கி,**
**தரம் உற்றதுஆன இக பரம் உற்ற அருள் நெறிச்**
**சார்பு இலரும், ஓர்வுஇலர்களாய்ச்**
**சைனம் பவுத்தம் இசை பொய் நம்பி நீடும் மெய்த்**
**தவம் மறந்தவரும், மேல் ஆம்**
**பரம் உற்ற ஞான அருள் வரம் முற்றும் வாழ்வு உறப்**
**பழுது அற்ற கழுமலத்தில்,**
**பாலன் ஆய், அம்மை அருள் பால் அமுதுஅருந்தி, மேற்**
**பட்ட சுட்டோடு பஞ்சாட் -**
**சரம் உற்ற தாளம் இசை கரம் உற்ற முருகனே!**
**சப்பாணி கொட்டியருளே!**
**தர வைபவ நிலை உதவு சிரவை நகர் வேல! ஒரு**
**சப்பாணி கொட்டியருளே!** 2

**நரம் உற்றது ஆம் அரிய புரம் உற்றும்** - மனிதப் பிறவிக்கு உரியது ஆகிய உடம்பு வாய்த்தும், மனிதப்பிறவி கிடைத்தும் என்றபடி. **நண்ணு** - பெறக்கூடிய. **எருவை** - பருந்து. **கொடிகள்** - காகங்கள். **என்னவே** - போல. **நவை உணா** - தீய ஊன் உணவு. **தரம்** - தகுதி. **இகபரம் உற்ற** - இம்மை மறுமை ஆகிய இரண்டிற்கும் பயன்படுகின்ற. **சார்பு** - தொடர்பு. **ஓர்வு இலர்களாய்** - உணர்வு அற்றவர்கள் ஆகி. **இசைபொய்** - உரைக்கின்ற மெய்யற்ற தத்துவங்களை. **மேல் ஆம்** - உயர்வான. **பரம்உற்ற ஞான** - பரம்பொருளைப்பற்றிய மெய்யறிவு, சிவஞானம். **வரம் முற்றும்** - தெய்வ ஈகையின் பயன் முழுவதும் நிறைவேறும். **கழுமலத்தில்** - சீகாழிப்பதியில். பாலன் என்றது திருஞானசம்பந்தரை. **மேற்பட்ட** - (அளவைகள் மூன்றிலும்) தலைசிறந்ததாகிய; காணல், அநுமானித்தல், நூலறிவால் அறிதல் என அளவை (பிரமாணம்) மூன்று. **சுட்டோடு** - (பெம்மான் இவனே எனக் கையெடுத்துக்காட்டிய) எதிரில் வைத்துச் சுட்டிக் காட்டியதோடு, பிரத்தியட்சப் பிரமாணத்தால் நிருபித்து என்றபடி. **பஞ்சாட்சரம் உற்ற தாளம்.** "அஞ்செழுத்தும் எழுதிய நல் செம்பொற்றாளம்" என்பார் சேக்கிழார் பெருமான்.

**உய்கை அருள் மாதவச் செய்கை தரும் மண் உலகம்**
**உம்பரும் விரும்பு மகிமை**
**உற்றது ஆம்; இதில் உறப் பெற்றது ஆம் பிறவிகளில்**
**ஒப்பு இலா வைப்பில் மனித**
**மெய் கைவரல் பேரின்ப மெய்கை வரலே என்ன**
**விண்டனர்கள் தொண்டர்; அவருள்**
**விரவுற்ற சித்தியும் பரவுற்ற முத்தியின்**
**விளக்கமும், உளக்கண் உறவே,**
**பொய்கை நடுவாழ் புலவர் பொய்கை நடுமாறு தற் -**
**போதம் மிக வாதம் இடுகால்,**
**போற்று நெல் மணி பதடி தூற்றுபு பிரித்தல் போல்,**
**புந்தியுள் உவந்து இனிது உறச்**
**சைகை கொடு உணர்த்தலின் உள் வைகும் வகை கைகொடு ஓர்**
**சப்பாணி கொட்டியருளே!**
**தரவைபவ நிலை உதவு சிரவை நகர் வேல்! ஒரு**
**சப்பாணி கொட்டியருளே!** 3

**உய்கை அருள்** - ஆன்ம ஈடேற்றத்தை அளிக்கின்றதும். **மாதவச் செய்கை தரும்** - நல்லறங்களைச் செய்வதற்கான வாய்ப்பை அளிப்பதும் ஆகிய. **உம்பரும்** - தேவர்களும். மகிமை உற்றது - பெருமை பெற்றது. இதில் என்றது மண்ணுலகத்தை. **ஒப்பு இலா வைப்பில்** - இணை இல்லாத கருவூலத்தைப் போன்ற. **மனித மெய் கைவரல்** - மானிட உடம்பு கிடைத்தல், "அரிதரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது" என்பார் ஔவைப்பிராட்டி. **பேரின்ப மெய் கைவரலே என்ன** - முத்திக்குச் சாதனமாகிய மெய்ஞானம் கிடைத்தல்தான் என்று, மனிதப்பிறவியைச் சரியாகப் பயன்படுத்திக் கொண்டால் வீடுபெறுதல் எளிது என்றவாறு. **அவருள்** - அவ்வாறு கூறிய அடியார்களுக்குள். **விரவுற்ற** - கலந்திருந்த. **பரவுற்ற** - சொல்லப்பட்ட. **உளக்கண்** - உள்ளம் ஆகிய விழி, மனத்தால் உணரும் அறிவு. **பொய்கை நடு வாழ் புலவர்** - மதுரைப் பொற்றாமரைக் குளக்கரையில் இருந்த சங்கப்புலவர்கள். **பொய்கை நடுமாறு** - பொய்யால் தங்கள் திறமையை நிலைநிறுத்தும்படி. **தற்போதம் மிக** - மிகுந்த கல்விச் செருக்கோடு, "தம்மில் செருக்குஉறு பெருமை கூறி" என்பார் பரஞ்சோதி முனிவர்(திருவிளையாடல் சங்கத்தார் கலகம்). **வாதம் இடுகால்** - (இறையனார் களவியல் என்னும் அகப்பொருள் இலக்கணத்திற்குத் தாங்கள் இயற்றிய உரைதான் சரியானது என) சொற்போர் புரிந்தபோது. **பதடி** - பதர்நெல். **தூற்றுபு** - காற்றில் மேலிருந்து கொட்டி. **புந்தியுள்** - அறிவில். **சைகை கொடு** - (ஊமை என்பதால்) முகக்குறிப்பை மட்டும் கொண்டு. உள் வைகும் வகை உணர்த்தலின் என இயைக்க. உருத்திர சன்மன் அகப்பொருள் உரைகளுள் கீரனுரையைப் போற்றிய வரலாறு வெளிப்படை.

குறிப்பு : வானுலகில் புல இன்பங்களைத் துய்ப்பதற்கென வாய்த்த உடலைக்கொண்டு நிலையான பேரின்பத்தைப் பெற முடியாது. மனிதப் பிறவியின் ஞானபக்திவைராக்கியங்களால் தான் வீடுபேற்றை அடைய முடியும். "போக பூமியினில் போக தநுவினால் பொருந்தல் ஆகாது; ஏகம் ஆம் இன்ப சித்தி இயம்புறில் கருமபூமி ஆகமானது கொண்டன்றி; ஆதலால் ஞாலத்து எய்தி யோகம் ஆம் நெறியில் நின்றோர் உண்மை சாதித்துக் கொள்வர்" என்பார் சிவப்பிரகாசர். (பிரபுலிங்க லீலை,

கைலாசகதி) இதனைக் கௌமார சாத்திரமும், "உம்பர் என்னினும் ஓர் உடலாயினும் இம்பர் மானுடத்தின் எய்திடின் அல்லது செம்பரத்துள் புகார்" (கௌமார முறைமை, பாயிரம் 3) என வலியுறுத்தும்.

வகை ஆகி விரி பெருந் தொகை ஆகும் இயல்பு உற்ற
மலம் மாயை கன்மம் என்னும்
வாருணி தனக்கு உற்ற நீர்உணி எனப்பெற்ற
வடவை ஆய், திட வைபோக
மிகை ஆகும் அன்புக்கும் முகை ஆகும் நெஞ்சுக்கும்
விரிபரிதி ஆகி, இன்பம்
விதித்து அமிழ்தரப் புரி துதித் தமிழின் ஊற்றுக்கு
மிகு சோனை ஆகி, வேதச்
சிகை ஆகும் உபநிடதம் ஆகம புராணம் கொள்
சிந்தைக்கு விந்தை ஞான
தீபம் ஆய், உற்ற நிட்சேபம் ஆய், ஒப்பற்ற
சித்தியுடன் முத்தி அருளும்
தகை ஆகும் மெய்ப் பெருந்தகை ஆகும் உன் கைகொடு ஓர்
சப்பாணி கொட்டியருளே!
தர வைபவ நிலை உதவு சிரவை நகர் வேல! ஒரு
சப்பாணி கொட்டியருளே! 4

**வகை ஆகி** - (பாசம் என்னும் ஓர்) இனம் ஆகி. பெரும் தொகை என்றது ஆணவம், கன்மம், மாயை, என்ற பல பிரிவுகளைக் குறித்து. **வாருணிதனக்கு** - கடலுக்கு. **நீர் உணி எனப்பெற்ற** - கடல் நீரைப்பருகுவது என்று கூறப்படுகின்ற. **வடவை ஆய்** - வடவைத் தீயைப்போல. வடவைத்தீயால் கடல்நீர் முழுவதையும் பருக முடியாது; ஓர் அளவுக்கு மிகாமல் மட்டுப்படுத்தும். மூலமலம் ஆகிய ஆணவமும் அழியாது செயலற்று ஒரு கட்டுக்குள் அடங்கியிருக்கும் என உவமையை விரிக்க. **திட** - உறுதியான. **வைபோக** - மகிழ்ச்சியின். **முகை** - தாமரை மொட்டு. **விரிபரிதி** - விரிக்கின்ற (மலரச்செய்கின்ற) சூரியன். **விதித்து** - உண்டாக்கி. **சோனை** - மழை. **வேதச் சிகை ஆகும்** - நான்மறைகளின் முடிவு ஆகிய. **நிட்சேபம்** - புதையல். **சித்தியுடன் முத்தி அருளும் தகை** : "பரவு சித்திபெற்றல்லது கதிஉறாப்பண்பு அறிதர வேண்டும்"

என்பது குருபரதத்துவம் (2,27) சித்துவல்லமை கைவரப்பெற்ற பிறகுதான் வீடுபேறு கிட்டும் என்பது வண்ணச்சரபரின் கோட்பாடு.

மலமாகிய கடலுக்கு வடவை ஆகவும், அன்பால் உள்ளத்தை விரியச் செய்யும் சூரியன் ஆகவும், தமிழ்ப்பாடல் ஆகிய ஊற்று வற்றாமல் செழிக்கும் மழை ஆகவும், வேதாந்த சித்தாந்த ஞானத்தை விளக்கும் தீபம் ஆகவும், மெய்ஞானப் புதையலாகவும், சித்திமுத்திகளை அருளும் வள்ளலாகவும் விளங்குபவன் முருகக் கடவுள் என்றவாறு.

**போற்றும் கைதவன் எனத் தோற்றிக் கைவளையினால்**
**போகி முடி போகி ஆக்கி,**
**போர் உலவு செண்டில் பொன் மேருவை அடித்து, உறும்**
**புணரியை உணக்கிட்ட வேல்**
**ஏற்றும் கை, வழுதியின் மெய் நீற்றும் கைதவர் சுரம்**
**இறக்கும் கை, தோடு உடையனை**
**எட்டும் கை, இவன் எனச் சுட்டும் கை, பவவினைக்கு**
**ஈற்றுக் கை, நீற்றுக் கை, பொய்**
**மாற்றும் கை, அஞ்சல் என ஆற்றும் கை, நல்லூர்**
**மணத்தில் நம்பாண்டார் நம்பி**
**மாவை நிகர் என்று இலகு பூவை கைப்பற்றி அவிர்**
**மாண் அருட் சோதி புகுதச்**
**சாற்றும் கை, என் வினைகள் பாற்றும் கை கொண்டு இனிது ஓர்**
**சப்பாணி கொட்டியருளே!**
**தரவை பவ நிலை உதவு சிரவை நகர் வேல! ஒரு**
**சப்பாணி கொட்டியருளே!** 5

**போற்றும்** - புகழப்படும். **கைதவன் என தோற்றி** - உக்கிர குமார பாண்டியன் என உதித்து. **கை வளையினால்** - கரங்களில் பிடித்துள்ள சக்கரப்படையால். **போகி** - இந்திரனை. **முடிபோகி ஆக்கி** - தன் கிரீடத்தைத் தவறவிட்டவன் ஆகச்செய்து, முடியைத் தள்ளி என்றவாறு. **போக்கி** - போகி, இடைக்குறை. **செண்டில்** - செண்டாயுதத்தால். **புணரியை** - கடலை. **உணக்கிட்ட** - உலரச்செய்த, "அரில்வலை உணக்கும் துறைவன்" (4) என்னும்

நற்றிணைச் செய்யுளில் இப்பொருள் காண்க. **வழுதியின்** - கூன்பாண்டியனின். **மெய் நீற்றும்** - உடலை வெப்பத்தால் கொதிக்க வைக்கும். **கைதவர் சுரம்** - வஞ்சகர்களாகிய சமணர்களால் ஏற்பட்ட காய்ச்சலை, மூன்றன் உருபும் பயனும் உடன்தொக்க தொகை. தோடு உடையனை எட்டும் கை - காதணி அணிந்த சிவபெருமானைத் தான் எளிதில் தொடுகின்ற கரம். **இவன் எனச் சுட்டும் கை** - (தான் சென்றடைவது மட்டும் அன்றி) அடுத்தவர்க்கும் இவரே சிவபெருமான் எனச் சுட்டு விரலால் காட்டுகின்ற கரம், "தோடு உடைய செவியன்.... பெம்மான் இவன் அன்றே" (தேவாரம் 1-1-1) என ஞானசம்பந்தராக வந்து காட்டியதைக் குறித்து நின்றது. எட்டியது முருகப்பெருமான் கயிலையில்; சுட்டியது ஆளுடையபிள்ளையார் சீகாழியில். **பவவினைக்கு ஈற்றுக்கை** - பிறவிகளுக்குக் காரணமான கன்மங்களுக்கு முடிவு கட்டும் கரம். **நீற்றுக்கை** - திருநீற்றை வழங்கும் கை. **பொய் மாற்றும்** - மாயையை இல்லாமல் செய்யும். **அஞ்சல் என** - பயப்படாதே என்று. **ஆற்றும்** - ஆறுதல் அளிக்கும். **நல்லூர் மணத்தில்** - திருநல்லூர்ப்பெருமணம் என்னும் ஆச்சாபுர ஊரில். **மாவை** - திருமகளை. **பூவை** - பெண்ணை. சாற்றும் என்றது இயற்றும் என்னும் பொருட்டு. **பாற்றும்** - துரத்துகின்ற.

இதில் இடம்பெற்றுள்ள திருவிளையாடற் புராணச் செய்திகள் யாவும் வெளிப்படை.

***(பன்னிரு சீர் விருத்தம்)***

நவை சான்றிடு நாத்திக வாதம்
நவிற்றி முடை நாத் தழும்பு ஏறும்
ஞான ஈனப் பாம்பு அனையார்
நடுங்கத் தெழிக்கும் இடி போன்றும்,
சுவை சான்று உயர் ஆத்திக அருள் மெய்த்
துறையோர்க்கு எல்லாம் வெற்றி மிகத்
துலக்கும் மகிமை உற்ற சுயஞ்
சோதி வடிவேல்(ப்) படை போன்றும்,

சிவை சால் இடப் பாகத்தன் முதல்
செப்பும் உனது சண்முகமாய்ச்
சிறந்த தேவர் வழிபாடு
செய்வார்க்கு இசை வான்மொழி போன்றும்
குவை சால் இன்புற்றிடக் கரத்தால்
கொட்டியருளாய் சப்பாணி!
கோலச் சிரவைப் பதிக்கு அரசே
கொட்டியருளாய் சப்பாணி! 6

**நவை சான்றிடு** - குற்றம் பொருந்திய. **நவிற்றி** - பேசி. **ஞான ஈன** - அறிவுக் குறைவு உள்ள, அறிவற்ற என்றபடி. "நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்" என்பது மணிவாசகம் (4:47) தெழிக்கும் - ஒலிக்கின்ற. இடியோசை கேட்ட அளவில் பாம்புகள் அஞ்சும் என்பது இலக்கிய மரபு, "இடியேறுண்ட நாகம் போல" என்பது பெருங்கதை (இலாவாண. 10:112). **சுவை** - இனிமையும். **சான்று** - உய்வது உறுதி என்பதற்கான நம்பகமான சாட்சிகளும் உடைய. **துலக்கும்** - தெளிவாக விளக்குகின்ற. **சுயம்சோதி** - பிறவெளிச்சங்களின் துணை வேண்டாமல் தானே ஒளிர்கின்ற. **சிவைசால் இடப்பாகத்தன்** - உமையம்மை பொருந்திய இடதுபுறத்தை உடைய சிவபெருமான். முருகப்பெருமானது ஆறு திருமுகங்களும் அறு சமயக் கடவுளர் ஆவர் என்பது வண்ணச்சரபர் கொள்கை; "சமயம் மூவிரண்டும் முகங்கள் என்று அவிர் பொது முதல்" என்பது அவருடைய வாக்கு. **வான்மொழி** - ஆகாயவாணி, அசரீரி. **குவை சால் இன்பு** - மிகுந்த மகிழ்ச்சி. **கோல** - அழகிய.

கும்புஇட்டு அடியார் தொழும் பொதியைக்
குறு மாமுனிக்கும், தமிழ் அளிக்கும்
கோல அருணைச் சுகமுனிக்கும்,
கொன்றைச் சடைதோய் இறை தவளக்
கம்பு இட்டு அசையும் செவி குளிர்ந்து
களிப்ப, புகலும் தாரகத்தின்
கதிர் செம்பொருளை உபதேசம்
காட்டும் கருணைக் குருபரன் ஆய்,

வம்பு இட்டு அலர் பொன் சுணங்கு உந்து
வடம் தோய் தனக் குஞ்சரி உள்ளம்
வாட விடுத்து, தினைப் புனம் தோய்
வள்ளிக் கொடி உள் உவகை பெறக்
கும்பிட்டருள் கைத்தாமரையால்
கொட்டியருளாய் சப்பாணி!
கோலச் சிரவைப் பதிக்கு அரசே!
கொட்டியருளாய் சப்பாணி! 7

**கும்புஇட்டு** - கூட்டமாகக் கூடி. **பொதியைக் குறுமாமுனி** - அகத்தியர். **தமிழ் அளிக்கும்** - திருப்புகழ் முதலிய தமிழ்ப்பனுவல்களை அருளிய. **சுகமுனி** - கிளிவடிவம் கொண்ட அருணகிரிநாதர். இறை என்றது சிவபெருமானை. **தவளக்கம்பு** - வெண்மையான சங்கு. **தாரகத்தின்** - ஓம் எனும் பிரணவமந்திரத்தின். **கதிர் செம்பொருளை** - தெளிவாக விளங்குகின்ற சரியான அருத்தத்தை, வினைத்தொகை. **உபதேசம் காட்டும்** - உபதேசம் செய்யும், நன்றாக உணர்த்தும் என்றவாறு. **வம்பு இட்டு** - மார்க்கச்சை அணிந்துகொண்டு. **அலர்** - பூரிக்கின்ற. **பொன் சுணங்கு உந்து** - பொன்னிறத்தேமல் ஏறப்பெற்ற. **வடம் தோய்** - முத்துமாலைகள் படிகின்ற. **தன** - நகில்களை உடைய. **கும்பிட்டருள்** - காதலால் பணிந்து இதமொழி பேசுகின்ற. ஒப்பு : இப்பருவத்தின் முதல் பாடல்.

### *(வண்ணவிருத்தம்)*

தனதன தனதன தனதன தனதன
தத்தன தத்தான

வெயில்விரி உடைமணி பரிபுரம் முதலிய
மிக்கு ஒலிபெற்று ஆட,
விகசித நவமணி அணி இனம் இனன் ஒளி
வெட்க விரித்து ஆட,
ஒயில் பொதி முகமதிமிசை குறு வெயர்வு அமுது
ஒப்ப உதித்துஆட,
ஒளிர் கரம் அவிர்தரு கடகம் மெல் ஒலியுடன்
ஒக்க நடித்து ஆட,

அயில் அமை புயம் அணி குரவு அலர் இசை அளி
அச்சம் மிகுத்து ஓட,
அபிநய விதரண அருள் நிறை குறுநகை
அற்புதம் மிக்கு ஆட,
குயில் மலி பொழில் பொலி சிரவண புரஇறை
கொட்டுக சப்பாணி!
குறமகள் சுரர்மகள் மருவிய குருபர
கொட்டுக சப்பாணி! 8

**வெயில்விரி** - ஒளியைப்பரப்புகின்ற. **உடைமணி** - குழந்தைகளின் இடுப்பில் கட்டும் ஓர் அணிகலன், "உடைமணி கட்டிச் சிறுதேர் உருட்டி உலாத்தரும்" (திருக்கோவை 385). **பரிபுரம்** - காற்சிலம்பு. **முதலிய** - முதலான ஆபரணங்கள். **விகசித** - தன் ஒளியை நன்றாகப் பரப்புகின்ற. **நவமணி** - ஒன்பான் இரத்தினங்கள் இழைக்கப்பட்ட. **அணி இனம்** - நகைகள். இனன் ஒளி. சூரிய வெளிச்சம் ஆகிய வெய்யில். **ஒயில்பொதி** - ஆடம்பரம் பொருந்திய. **முகமதிமிசை** - வதனமாகிய சந்திரனில். **அமுது ஒப்ப** - திங்களில் அமுதம் கசிவதைப்போல. **கரம்** - கைகளில். **கடகம்** - கைவளை. ஒக்க - நன்கு பொருந்தும்படி. **அயில் அமை புயம் அணி** - வேலாயுதத்தைத் தாங்கியுள்ள தோள்களில் சூட்டப்பட்டுள்ள. **குரவு அலர் இசை அளி** - குராமலர்களில் பொருந்தியுள்ள வண்டுகள். ஒளியின் மிகுதியாலும் ஒலியின் கலகலப்பாலும் வண்டுகள் அஞ்சுகின்றன. **விதரண அருள் அபிநயம் நிறை** - சிறப்புமிக்க திருவருளைக் காட்டும் மெய்ப்பாடு முழுமையாக நிறைந்துள்ள. **சுரர் மகள்** - தெய்வயானை நாச்சியார்.

தானத் தானன தானத் தானன
தத்தா தத்தான

காவில்(த்) தோய் இறை ஆவல் கூர் சுதை
கத்தா! புத்தேளிர்
காவற்கார! விசாலத் தோள்கொள்க -
டப்பு ஆரப் பார!

நாவில்(த்) தோய் கலைமாது ஒப்புஆய் அவிர்
நற்சீர் பெற்றோர்கள்
ஞானப் பாடல்களால் எப்போதினும்
நத்து ஆர்வப் போத!
கூவிப் பேர் புகல் போதில், பாய் புனல்
கொட்டு ஆர்வத்தோர்கள்
கோலத்துஊடு அகலாமல் தோய்தரு
கொத்தா! மெய்த்துஆள
கோவில்(ச்) சேர் திருவோணக் காவல!
கொட்டாய் சப்பாணி!
கோழிக் கேதன! வீரச் சேவக!
கொட்டாய் சப்பாணி! 9

**காவில் தோய் இறை** - கற்பக நாட்டின் அரசன் ஆகிய தேவேந்திரன். **சுதை** - மகளாகிய தெய்வயானை நாச்சியாரின். **கத்தா** - கணவனே. **புத்தேளிர் காவற்கார** - அமரர்களைக் காக்கும் தேவசேனாபதியே. **கடப்பு ஆர பார** - கடம்பமலர் மாலைகளின் கனத்தை உடையவனே, கடப்பு வண்ணம் நோக்கிய வலித்தல் விகாரம். **தோய்** - பொருந்தியுள்ள. நல் சீர் பெற்றோர்கள் என்றது உயர்ந்த சிறப்பைப் பெற்ற புலவர்களை. பாடல்களால் என்புழி மூன்றன் உருபு இரண்டன் பொருளில் வந்தது. **நத்து ஆர்வ** - ஒரு பொருட் பன்மொழி, விரும்புகின்ற. **போத** - ஞானமயமானவனே. **கூவி** - உரக்க அழைத்து. **கோலத்து** - வேடத்தில். **ஊடு** - அவர்களுக்கு இடையிலேயே. **தோய்தரு** - கலந்துள்ள. **கொத்தா** - (அடியார்களின்) இனத்தவனே. **மெய்த்து ஆள** - உண்மையாகவே ஆட்கொள்ள. முருகப்பெருமான் அடியார்களுக்கிடையிலேயே இருக்கின்றான் என்றபடி. **திருவோணக் கோவில்சேர் காவலா** - சிரவணபுர மடாலயத்தில் எழுந்தருளியுள்ள அரசனே. மெய்த்து ஆள திருவோணக் கோவில் சேர் காவல என இயையும். **கோழிக் கேதன** - சேவற் கொடியுடையாய்.

தாத்த தனதன தாத்த தனதன
தத்தன தத்தான

பூட்கை முகம் உறு தீர்த்தன் உவகைகொள்
பொற்பு இசை நட்பாள!
போற்றும் அடியவர் ஆக்கம் உற அருள்
பொன் கமலத்தாள!
வாள்(க்) கை பொலி நவர் போற்றி, உளம் மகிழ்,
மட்டு அறு சிற்போத!
வாழ்க்கை நிறைவு அமைவு ஆக்க அருள் பொழி
மைக்கணுடைத் தேவ!
வேட்கை அறு தவ மார்க்கம் உதவிட
வெற்பின் முடிக் கோயில் -
மேல், கை அயில், கொடி காட்டி அவிர்தரு
மெய்க் கருணைப் பூம!
கோள், கைதவம் இலர் ஏற்றம் உறும்வகை
கொட்டுக சப்பாணி!
கூர்த்த சிரவண ஊர்க்கண் அவிர்குக!
கொட்டுக சப்பாணி! 10

**பூட்கை முகம் உறு தீர்த்தன்** - யானை முகத்தை உடைய புனிதனாகிய விநாயகர். **பொற்பு இசை** - சிறப்புப் பொருந்திய. **பொன்** - அழகிய. **கமலத்தாள** - தாமரை போன்ற திருவடிகளை உடையவனே. **வாள்கை பொலி நவர்** - வாட்படையை ஏந்திய கரங்களை உடைய நவவீரர், வீரவாகு முதலிய ஒன்பதின்மர். **மட்டு அறு** - எல்லையற்ற. **சிற்போத** - ஞானமயமானவனே, ஒருபொருட் பன்மொழி. **நிறைவு** - முழுமையும். **அமைவு** - அடக்கமும். **ஆக்க** - உடையதாக இருக்க. **மை கண்** - கரிய விழிகள். இனி அருளைப் பொழிகின்ற மேகம் போன்ற கண்கள் எனினும் ஆம். **வேட்கை அறு தவமார்க்கம்** - ஆசையை நீக்குதலாகிய துறவு நெறியை. **வெற்பின் முடிக் கோயில் மேல்** - குன்றினைப் போன்ற கோபுர சிகரத்தை உடைய ஆலயத்தில். **கை அயில்** - கரத்து வேற்படை. **கொடி** - சேவற்பதாகை. **பூம** - அரசனே. **கோள்** - பிறரைப் பற்றி அவர் இல்லாதபோது குறை சொல்லுதல். **ைகதவம்** - வஞ்சகம். **கூர்த்த** - நாளுக்கு நாள் சிறப்படைகின்ற.

## 5. முத்தப் பருவம்

*(பன்னிரு சீர் விருத்தம்)*

தீத்தம் உடம்பு பொருள் ஆவி
 தத்தம் கொடுக்கும் அன்பு அடியார்
 தநு ஆதிய நான்கினையும் ஒரு
 தானே ஆக்கி, தழைத்து வந்து
சித்தம் பொருந்தி மலம் ஒழிக்கும்
 சிவன் மெய் அதனில் பாதி பெற்றுச்
 சிறந்த உமையாள், பால் ஊட்டி,
 திருத்தும் மடியின் மீது இருத்தி,
முத்தம் கொடுக்கும் செம்பவள
 மூடி திறந்து, நகை காட்டி,
 முகிழ்த்துப் பெருகும் காதலினால்,
 முருகா! கந்தா! எனக் கொஞ்சி,
முத்தம் கொடுக்கும் செல்வ! அருள்
 முருகா! முத்தம் தருகவே!
 முதிர் சீர்ச் சிரவைப் பதி புரக்கும்
 முதல்வா! முத்தம் தருகவே! 1

**தத்தம் உடம்பு** - அவரவர்களினுடைய உடல். **தத்தம் கொடுக்கும்** - கொடையாக அளிக்கின்ற. **தநு ஆதிய** - உடல் முதலிய. நான்காவன: தநு கரணம் புவனம் போகம்; இது முறையே பருவுடல், புலன்கள், உலகம், துய்க்கும் பொருள்கள் ஆகும். **தழைத்து** - திருவருள் பெருகி. **சித்தம் பொருந்தி** - மனத்துக்கண் நீங்காதிருந்து. **மலம்** - ஆணவம். **மெய்அதனில் பாதி** - உடம்பில் இடப்பாகம், அது பகுதிப்பொருள் விகுதி. **திருத்தும்** - தேற்றுகின்ற, ஆசுவாசப்படுத்தும் என்றபடி. **செம்பவள மூடி** - சிவந்த பவளத்தாலான மூடிபோன்ற உதடுகளை, **நகை** - பற்கள். பெட்டியின் பவள மூடியைத் திறந்து அணிகலன்களைக் காண்பித்து என்பது ஒரு தொனி. **முகிழ்ந்து** - அரும்பி. **முதிர்சீர்** - நிறைந்த சிறப்புக்களை உடைய. **புரக்கும்** - காக்கின்ற.

வேரல் அரும்பும் முத்து உதிர்ந்து
வெய்யோன் ஒளி தோய் பகல் என்றும்
விதுவின் கதிர் சால் இரவு என்றும்
வேறிட்டு அறியாப் பனி வெற்பின்
சாரல் அரும்பும் செங்கமலத்
தண் பூந் தொட்டிலிடை அமைந்து,
தாம் முன் புரிந்த தவப் பயனைத்
தநு ஆதிய நான்கினும் திளைக்கும்
ஆரல் அரும்பு முலை அமுதம்
அருந்தி, களித்து, தனது அகண்ட
அறிவைத் தனக்குள் ஆய்ந்து, அமைந்திட்டு,
அளவா இன்பம் வெளியிடல் போல்
மூரல் அரும்பும் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே!
முதிர் சீர்ச் சிரவைப் பதி புரக்கும்
முருகா!! தருக முத்தமே! 2

**வேரல் அரும்பும்** - மூங்கில் மரத்தில் தோன்றும். மூங்கில் முத்துப்பிறக்கும் இடங்கள் இருபதில் ஒன்று எனல் கவிமரபு "நீண்ட கழை முத்து உதிர்க்கும் ஈங்கோயே" (ஈங்கோய்மலை எழுபது 7) **வெய்யோன்** - சூரியன். **விதுவின் கதிர்** - சந்திரனின் ஒளிக்கிரணம். **பனிவெற்பின்** - இமய மலையின். **சாரல்** - பக்கமலையில். **அரும்பும்** - மலர்கின்ற. **தண்** - குளிர்ந்த. **தநு ஆதிய நான்கு** - தனு கரணம் புவனம் போகம் என்பன; அவை முறையே உடல், புலன்கள், துய்ப்பதற்கான இடம், நுகர்வு என்பன ஆம். **திளைக்கும்** - மிகுதியாக அனுபவிக்கின்ற. **ஆரல்** - கார்த்திகைப் பெண்களின். **அரும்பு முலை அமுதம்** - தாமரை மொட்டுப் போன்ற நகில்களில் ஊறும்பால். **அகண்ட** - பிளவுபடாத, முழுமையான. **அமைந்திட்டு** - வெளியே காட்டாமல் அடக்கமாக இருந்து. **அளவா** - கணக்கிடமுடியாத, மிக்க. **மூரல் அரும்பும்** - புன்னகை தோன்றுகின்ற.

குறிப்பு : முருகா! பூந்தொட்டிலிடை அமைந்து, அமுதம் அருந்தி, கணித்து ஆய்ந்து அமைந்திட்டு இன்பம் வெளியிடல் போல மூரல் அரும்பும் செல்கனிவாய் முத்தம் தருக என்பது பொருள் முடிவு.

தலைப்பால் வாயு ஏந்தி மிகத்
தளர்ந்தே, வரும் அக்கினி தேவன்
தன்பால் அளிப்ப, அவன் துவண்டு
தண் கங்கையில் வைத்திட, அவளும்
மலைப்பால் விளங்கும் சரவணத்தில்
மருவ விடுப்ப, ஆறு உரு ஆய்,
மன்னும் புகழ்க் கார்த்திகை மாதர்
மதுர முலைப்பால் நுகர்ந்து, ஆடி,
கலைப்பால் விளங்கும் ஒள் ஒளி தோய்
கயிலைக்கு இறைவன் தேவியுடன்
கண்டு களிக்க அம்பிகையின்
காதல் வடிவாய்ச் சுரந்து ஒழுகும்
முலைப்பால் குடித்த துவர்வாயால்
முத்தம் தருக! முத்தமே!
முதிர் சீர்ச் சிரவைப் பதி புரக்கும்
முருகா! தருக முத்தமே! 3

வாயு தலைப்பால் ஏந்தி என்க; **தலைப்பால்** - தலையில். **அக்கினிதேவன்தன்பால்** - தீக்கடவுளினிடம்; **தன்** - பகுதிப்பொருள் விகுதி; அவன் என்றது அக்கினியை. **மலைப்பால்** - மலையினிடத்தில். **சரவணத்தில்** - சரவணப்பொய்கையில். **மருவ** - பொருந்தும்படி. **மன்னும் புகழ்** - நிலைத்த கீர்த்தியை உடைய. **மதுர** - இனிமையான. **கலைப்பால் விளங்கும் ஒள் ஒளி தோய்** - (ஆழமாகவும் அகலமாகவும் கற்கப்படும்) கல்வியால் தெளிவாக உணரப்படுவதாகிய ஞானம் பொருந்திய, ஞானமயமான. ஒளிதோய் இறைவன், கயிலைக்கு இறைவன் எனத் தனித்தனி இயைக்க. இறைவன் தன் தேவியுடன் என ஒரு சொல் வருவிக்க. **துவர்வாயால்** - பவளம் போன்ற உதடுகளால்.

உழி உந்திய அண்டத் திரள்கள்
ஒடுக்கி இன்று ஆம் எனப் புரிந்தே
உண்டாக்கிடும் ஓர் செயல் சிவன்பால்
உறவும், பூ தேவியின் உடையாய்க்

கழி உந்திய வான் கடல் அதனைக்
கடுகின் அளவாய்க் கரத்து அமைத்துக்
கனிவில் அருந்தி விடுக்கும் நலம்
கலச முனிபால் இசைந்திடவும்,
பொழியும் சோனை மாரி எனப்
பொங்கும் மதுரத் திருப்புகழ் ஆம்
புஞ்ச அமுதப் பா அருணா -
புரி மாதவன்பால் பொலிந்திடவும்,
மொழியும் உபதேசக் கனிவாய்
முத்தம் தருக! முத்தமே!
முதிர் சீர்ச் சிரவைப் பதி புரக்கும்
முருகா தருக முத்தமே! 4

**உழி உந்திய** - இடம் அகன்ற. **அண்டத் திரள்கள்** - பல ஆகிய உலகக் கூட்டங்களை. **இன்றுஆம்** - இல்லாதது ஆகிவிட்டது. **உண்டாக்கிடும்** - அவற்றை மீண்டும் தோற்றுவிக்கும். **ஓர் செயல்** - ஒப்பற்ற செய்கை. **உறவும்** - உண்டாகுமாறும். **சுழி உந்திய** - நீர்ச்சுழிகள் மிகுந்த. **வான்** - பெரிய. **கரத்து அமைத்து** - உள்ளங்கையில் அடைத்து. **கனிவில்** - அன்புடன் என்பது சொற்பொருளாயினும் இங்கு எளிதாக, விளையாட்டாக என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. **விடுக்கும் நலம்** - உண்டதனை மறுபடியும் வெளியேற்றும் நற்செயல், ஆகுபெயர். **கலசமுனிபால்** - அகத்திய முனிவரிடம். **சோனை மாரி** - இடைவிடாத மழை. **மதுர** - இனிமையான. **புஞ்ச** - திரட்சியான. **அருணாபுரிமாதவன்பால்** - அருணகிரிநாதரிடத்து. ஓர் செயல் சிவன்பால் உறவும், நலம் கலச முனிபால் இசைந்திடவும், பா அருணாபுரி மாதவன்பால் பொங்கிடவும் மொழியும் உபதேசம் என இயையும். முருகவேளின் உபதேசத்தால்தான் முற்கூறியவர்கள் செயற்கரிய செயல்களைப் புரிந்தனர் என்பது கருத்து.

தொறு வல்லபம் மிக்கு அமைந்து, உனையே
தொழுது பணி செய்து, உன் புகழே
துதித்து, உள் உருகும் கவுமாரத்
தொண்டு அன்பு அடியார் தங்களிடத்து

உறு வல்வினை ஒப்பாம் இடையும்,
உயர் மாதவ ஞானப் பெருக்கம்
உதவும் இன்பம் போல் இறுமாந்து
உற்ற கொங்கைத் துணையினையும்
பெறு வல்லிப் பேர் இசை தரும் எம்
பிராட்டி தன்னைக் கண்டு, உவகை
பெருகி, உருகி, பருகி எழும்
பேரானந்தச் சுவை துளும்பும்
முறுவல் விரியும் கனிவாயால்
முத்தம் தருக! முத்தமே!
முதிர் சீர்ச் சிரவைப் பதி புரக்கும்
முருகா தருக முத்தமே! 5

**தொறுவல்லபம்** - அடிமையாம் திறமை. **உறு வல் வினை ஒப்பு ஆம்** - அடைந்துள்ளதும் வலிமை மிக்கதும் ஆகிய. கரும மலத்தைப் போன்ற. **இடையும்** - இடுப்பும். முருகனடியார்களின் வினைகள் மிகச் சுருங்கிவிடும் என்பது கருத்து. "பல உடம்பு அழிக்கும் பழி ஊன் உணவினர் தவம் எனத் தேய்ந்தது துடி எனும் துசுப்பே" என்னும் கல்லாட அடிகளின் (1:18,19) நிழல் இது. **துணையினையும்** - ஜோடியையும். **வல்லி** - வள்ளியம்மை. **துளும்பும்** - நிறைந்து வழிகின்றது ஆகிய. **முறுவல்** - புன்சிரிப்பு.

## *(இரட்டையாசிரிய விருத்தம்)*

வளர் கண் அமை முள் பெற்ற கழையின் முத்தோ அங்கி
வாய்ச் சுவைத்திட்டது ஆகும்;
மருவு பணிலத்து முத்தம் மயிலையின் நிணத்து ஊறு
மாசுண்டது ஆகும்; இதழ் தோய்
முளரி தரு முத்தமோ அங்கணத்தின்கண் ஆம்
முடை மிகவும் உடையது ஆகும்;
முதலை உடல் முத்தமோ மூர்க்கம் மிகு வண்டர் அணி
முறை உறப் பெற்றது ஆகும்;
கொளல் அரிய நாகத்தின் முத்தமோ காரியொடு
கூர் இயலும் நட்பு உற்றது ஆம்;
குரைகடலின் மீன் முத்தம் நுளையர்க் கான் நுழைவு ஆன
குற்றம் உளது ஆம்; பரசிவன்

முளரி அம் கண் மிசை உதித்த குமரா! நின் வாய்
முத்தம் கொடுத்தருள்கவே!
மொய்ப் பதி பொழில் கொள் சிரவைப் பதி உளாய்! நின்வாய்
முத்தம் கொடுத்தருள்கவே! 6

**வளர்கண் அமை** - வளர்கின்ற கணுக்களைப் பெற்றதும். **முள்பெற்ற** - முள்ளை உடையதாய் இருப்பதுமாகிய. **கழை** - மூங்கில். **அங்கி வாய் சுவைத்திட்டது** - நெருப்பு தன் வாயால் ருசி பார்த்த குறை உடையது. ஒப்பு : "வேய் வரும் முத்தம் அதில் எழும் தழலால் வெதுப்புண்டு மாமை கருகியது" (திருவெண்ணீற்றுமை பிள்ளைத். முத்தப்.6) **பணிலத்து** - சங்கில் பிறக்கின்ற. **மயிலையின் நிணத்து ஊறு** - மீன்களின் கொழுப்பில் நனைந்த. **மாசு** - குற்றம். ஊறு மாசு வினைத்தொகை. ஒப்பு : "இப்பிவளைமீன் பொலி முத்தம் வெய்யபுலவு ஒழியாது நாறும்". (திருவெண்ணீற்றுமை. முத்தப்.6) **இதழ்தோய்** - மலர் இதழ்களை உடைய. **முளரி தரு** - தாமரைப் பூ அளிக்கின்ற. **அங்கணத்தின்கண் ஆம் முடை** - சேற்றில் இருக்கும் தீயமணம். மூர்க்கம் மிகு வண்டர் அணி - கோபம் நிறைந்த வலியவர்கள் கூட்டம். **முறைஉற** - எப்படி வேட்டை ஆடவேண்டுமோ அப்படிச் செய்து, வன்முறையால் என்பது கருத்து. **காரியொடு** - நஞ்சினுடன். **கூர் இயலும் நட்பு** - மிகுந்த தொடர்பு. **குரைகடலின்** - ஒலிக்கின்ற சமுத்திரத்து. நுளையர்க்கான் - மீனவர்களின் வீடு; கான் என்பதற்கு வாசனை எனினும் ஆம். **முளரி அம்கண்மிசை** - தீக்கண்ணில். **மொய்ப்பதி** - வண்டுகளின் தங்குதலை உடைய, வண்டுகள் வாழ்கின்ற என்றபடி; **பதிபொழில்** - வினைத்தொகை.

ஆக்கம் எனவே பெற்ற பேர்க்கு அதனை முன் பெற்றும்
ஆன அஞ்ஞானம் உதவி
அலைமகள் பின்னாளில் மணம் அலை மகள் எனப் பெற்று உள்
அரி உரம் பெறு தன்மையால்,
ஏக்கம் மிகவே பெருக நீக்கமும் பெறுதலால்
எவ்வித மணித் திரளினும்
இச்சை மேவிடுவார்கள் கொச்சை மானிடர் ஆகும்
இயல்பு ஆன மயலோர்களே

நாக்கண் அமைவுஆய் ஒப்புஇல் பாக்கள் நவில் பாரதியும்
நல்கு உரவு நல்குரவு உளார்
நாடு செல்வத்தர் இசை பாடுவித்தலின் ஒர் சுகம்
நண்ணாது புண் ஆக்கிடும்;
மோக்க மய அம்மை அருள் வாய்க்க, நின் கனிவாயின்
முத்தம் கொடுத்தருள்கவே!
மொய்ப்பதி பொழில் கொள் சிரவைப் பதி உளாய் நின்வாய்
முத்தம் கொடுத்தருள்கவே! 7

**ஆக்கம் எனவே** - சிறந்த செல்வம் எனக் கருதி. **பெற்ற பேர்க்கும்** - ஏற்றுக் கொண்டவர்களுக்கும். **அதனை முன் பெற்றும்** - அச்செல்வத்தை முதலில் அடைந்திருந்தபோதிலும். **அலைமகள் ஆன அஞ்ஞானம் உதவி** - திருமகள் அவ்வுயிரின் வினைகளுக்குத் தகுந்த அறியாமையைக் கொடுத்து. **பின்நாளில்** - பிற்காலத்தில். **மனம் அலைமகள் எனப்பெற்று** - உள்ளத்தைச் சஞ்சலப்படுத்துகின்ற பெண் எனச் சொல்லும்படி, **அலைமகள்** - வினைத்தொகை. **உள்அரி** - மனத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சிதைக்கின்ற. **உரம்பெறு தன்மையால்** - வலிமையை உடைத்தாயிருப்பதால், **அரிஉரம்** - வினைத்தொகை. அரிஉரம் பெற்ற என்புழித்திருமாலின் மார்பில் இடம் பெற்ற என்பது தொனி. இலக்குமி மேன்மேல் உயருமாறு (ஆக்கம்) செய்கிறாள்; ஆனால் அவளே மனம் வருந்தும்படி கேட்டையும் தருகிறாள் என்றபடி. **நீக்கமும்** - முன்பு சேர்ந்ததைப்போல இப்போது பிரிதலையும், உம்மை இறந்தது தழீஇய எச்சம். **மணித்திரள்** - இரத்தினக் கூட்டம். **கொச்சை** - சின்னப்புத்தியை உடைய, அல்பமான. **மயலோர்களே** - மன மயக்கத்தை உடையவர்களே ஆவர், ஏகாரம் தேற்றம். **நாக்கண்** - நாவினிடத்து. **பாரதியும்** - கலைமகளும், உம்மை முன் சொல்லப்பட்ட இலக்குமியைக் குறித்தது. **நல்கு உரவு** - கொடுக்கின்ற வலிமையோ எனின். **நல்குரவு உளார் நாடு செல்வத்தார்** - வறியவர்களால் விரும்பப்படுகின்ற பணக்காரர்களின். **இசை** - புகழை. **சுகம் நண்ணாது** - (ஒருவனுக்குத் தன் மனம்போல் வாழ்வதாகிய) இன்பம் கிடைக்காது.. செல்வர்களை அனுசரித்தே வாழ்ந்தாக வேண்டும் என்றபடி. **புண்** - வருத்தம். எனவே செல்வம், கல்வி இரண்டும் நிலைத்த பயன்தரா எனப்படுகிறது. **மோக்கமய**

அம்மை - முத்திவடிவமாகவே விளங்குகின்ற உமாதேவியின். முருகனின் முத்தம் வீட்டுப்பேறு தரும் என்பது கருத்து.

குறிப்பு : இச்செய்யுளில் அலைமகள், நல்குரவு என்பன இரண்டிரண்டு பொருள்களில் ஆளப்பட்டதும், அலைமகள் அரிஉரம் பெற்றாள் எனத் தொனிக்க வைத்ததும் நயம்.

## *(வண்ண விருத்தம்)*

**தத்தன தத்தன தத்தன தத்தன**
**தத்த தனத்தனனா.**

**புத்தமுதத்தினும் மெய்ச்சுவை பெற்று அவிர்**
**பொற்பு உறும் அற்புத நீர்**
**புக்க அருட் புகழ் நித்தம் உரைத்திடு**
**புத்தி அளித்து, எனது ஓர்**
**சித்தமிசைக் குடி பெற்ற நின் மெய்த்தயை**
**சிற்றறிவில் தெளி ஓர்**
**திட்டம் அளித்தும், அதைத் தெளியத் தெரி**
**சித்தி அளித்திலதே,**
**இத்தரையில் பொருளைத் துணை பெற்று இழி**
**இச்சை மிகுத்தவர்பால்**
**எய்த்து அலையச் செயல் பொற்பு அல; நத்தும் என்**
**இட்டம் முடித்தருள்வான்**
**முத்தரும் மெய்த் தவ சித்தரும் உற்ற நின்**
**முத்தம் அளித்தருளே!**
**முற்று அருள் மெய்ச் சிரவைப் பதி அப்ப! ஓர்**
**முத்தம் அளித்தருளே!** 8

**மெய்ச்சுவை** - உண்மையான உருசி; நீடித்து நிற்பது என்பது கருத்து. **பொற்பு உறும்** - சிறப்புப்பெற்ற. **அற்புத நீர் புக்க** - அதிசயத் தன்மை சேர்ந்த. **சித்தமிசை** - உள்ளத்தில். **குடிபெற்ற** - நிலைத்துள்ள. **மெய்த்தயை** - உண்மையான கருணையினை. **சிற்றறிவில்** - அடியேனுடைய குறைந்த மதியிலும் கூட, இழிவு சிறப்பும்மை விரிக்க. **தெளி ஓர் திட்டம்** - உணர்வது ஆகிய ஒரு திறமையை. **தெளிய தெரி** - ஐயமில்லாமல் தெளிவாக

அறிகின்ற. **சித்தி** - ஆற்றல். பொருளை - செல்வத்தை. **இழி இச்சை** - கீழான ஆசைகள். **எய்த்து அலைய** - அலைந்து எய்க்க என மாறுக, தேடித் திரிந்து மெலிய. **பொற்பு அல** - தேவரீரின் கருணைக்கு அழகு ஆகாது. **நத்தும்** - விரும்புகின்ற. **இட்டம்** - விருப்பங்களை. **முடித்தருள்வான்** - நிறைவேற்றுவதற்காக. **முத்தரும்** - வீடுபேறு அடைந்தவர்களும். முடித்தருள்வான் முத்தம் அளித்தருள், உற்ற முத்தம் அளித்தருள் எனத் தனித்தனி இயையும்.

**தனன தத்தன தனன தத்தன**
**தனன தத்தந் தனதனா**

**இகதலத்து உறு மனிதர் ஒத்து உடல்**
**இசைவு பெற்றும், குணம் இலாது**
**இருள் வனத்து உழல் விருகம் ஒத்திடும்**
**இயல்பும் மற்றும் கெருவர் ஆய்**
**அகம் மயக்கு இசை நினைவு முற்றவும்**
**அறம் எனக் கொண்டு, உடலினூடு**
**அமை உயிர்க்கு உறுதியை மதிக்கலர்**
**அதி பவக் கும்புகளிலே**
**மிக முயற்சி எய்தினர்கள் உச்சித**
**விதியை நத்தும்படி செய்நீள்**
**விறல் படைத்து அவிர் பலபல் சித்தியும்**
**விரி அருட் பண்பு இலகவே**
**முகமிசைப் பெறு விழிமுன் உற்றருள்**
**முருக! முத்தம் தருகவே!**
**முதன்மை பெற்று அவிர் சிரவை நற்பதி**
**முதல்வ! முத்தம் தருகவே!** 9

**இகதலத்துஉறு** - நிலஉலகத்தில் உள்ள. **உடல் இசைவு பெற்றும்** - உடலால் ஒன்றாகப் பொருந்தியிருந்தும், மானிட வடிவம் பெற்றும். **விருகம்** - விலங்கு. **கெருவர்** - செருக்குமிக்கவர். **அகம் மயக்கு இசை நினைவு முற்றும்** - உள்ளத்தை மயங்கச் செய்யும் எண்ணங்கள் அனைத்தையும், தான் செய்ய விரும்புபவை எல்லாவற்றையும் "பெரும் பான்மைப்

புண்ணியமாப் பேதையர் செய்யும் அரும்பாவம் போலி அறம்" "திண்ணியர் சொல் கேளாமல் சிந்தையினில் தோன்றியவாப் புண்ணியம் செய்தால் அவமாப்போம்" (மனுநெறித்திருநூல் 41-1,10) என்பன இங்கு சிந்திக்கதக்கன. உறுதியை - உய்வு ஆகிய வீட்டுப்பேற்றை. **மதிக்கலர்** - நினையாதவர்கள் ஆகி. **அதி** - மிகுந்த. **பவ கும்புகளிலே** - பிறவிக் கூட்டங்களில். குணம் இலாது, கெருவராய், அறம் எனக் கொண்டு, உறுதியை மதிக்கலர், பவக்கும்புகளிலே முயற்சி எய்தினர்கள் என இயையும். **உச்சித விதியை** - (அப்படி எய்தினவர்களும்) மேலான உண்மையை, மெய்ந்நூல் கூறும் அறிவுரைகளை என்றவாறு. **நத்தும்படி செய்** - விரும்பிக் கடைப்பிடிக்குமாறு மாற்றுகின்ற. **விறல் படைத்து** - ஆற்றலைப் பெற்று. **பலபல சித்தியும்** - பலவகையாகக் கூறப்படுகின்ற அருட்சித்திகளையும். **விரி** - விரிவாகப்புரிகின்ற. பல சித்தி என்பதற்கு அணிமா மகிமா முதலிய எட்டுச் சித்திகள் என்பது பெரும்பான்மை; வண்ணச்சரபர் மந்திரசித்தி, வாக்குச்சித்தி, தெய்வசித்தி, திருவருட் சித்தி என வகைப்படுத்துவார். **முகமிசைப்பெறுவிழிமுன்** - முகத்தில் உள்ள கண்களுக்கு எதிரே, ஞானக்கண்களுக்கு மட்டும் தரிசனம் தந்து அமைந்து விடாமல் ஊனக் கண்களுக்கும் சேவை சாதிக்க வேண்டும் என்னும் பொருளில் முகமிசை பெறுவிழி என வேண்டா கூறினார்.

**தனன தனன தனன தனன**
**தனன தனன தத்தனா**

**உருகி உருகி நினையும் மகிமை**
**உடைய அடியர் சித்தமீது**
**உலவு குமர! சிமய நடனம்**
**உலைவு இல் இறைவ! மிக்க சீர்**
**பெருகு குரவ! குரவ மலர் கொள்**
**பிணையல் புனையும் அப்பனே!**
**பிசிதர் உணர்வில் அறிய அரிய**
**பெருமை குலவு சித்தனே!**

குருகு கடிய, இதணின் மருவு,
குருகு குலவும் அத்தம் ஆர்
குறவர் மகளொடு, அமரர் உதவு
குமரி தழுவும் அற்புதா!
முருகும் அழகும் ஒளியும் நிறையும்
முருக! தருக முத்தமே!
முனிவர் பரவு சிரவை நகர் கொள்
முதல்வ! தருக முத்தமே!

**மகிமை உடைய** - பெருமைபெற்ற. **சிமய நடனம்** - குன்றங்களின் உச்சியில் ஆடப்படும் நாட்டியம். **உலைவு இல்** - குறையாத, இடைவிடாமல் குன்றங்கள் தோறும் கூத்தாடுகின்ற என்பது கருத்து. **குரவ** - குருநாதரே. **குரவமலர்கொள் பிணையல்** - குராமலர்மாலை. **பிசிதர்** - ஊன் உணவு உண்பவர்கள். **குருகு கடிய** - பறவைகளை ஓட்டுவதற்காக. **இதணின் மருவு** - தினைப்புனத்தின் பரணில் உள்ள. **குருகு குலவும்** - வளையல்கள் விளங்குகின்ற. **அத்தம் ஆர்** - கைகளை உடைய. **குறவர்மகள்** - வள்ளி. குருகு ஓட்டுபவளின் கைகளிலேயே குருகு குலவுகின்றது என்றது ஒரு நயம். **அமரர் உதவு குமரி** - தெய்வயானை. **முருகும்** - இளமையும். **ஒளியும்** - புகழும்.

## 6. வாரானைப் பருவம்

### *(பன்னிரு சீர் விருத்தம்)*

விண்ணம் பொலி பூரண மதிபோல்
விளங்கு முகமும், விரி கருணை
வேலை அனைய விழியும், அணி
மிளிர் புன்முறுவல் கனிவாயும்,
தண் அம்புயத் தண்டு அணி கரமும்,
தழைத்த தொடையில் சார்கரமும்,
தவள முழு நீற்று இயல்(ப்) பொலிவும்,
தயங்கும் சோதித் திரு உருவும்,

திண்ணம் புயம் தோய் வேல்(ப்) படையும்
திகழ, மயில் வாகனமீது, என்
சிந்தை கரைந்து நெக்கு நெக்குச்
சேறு ஆய் கண்ணீர் பொழிந்து ஏத்தும்
வண்ணம், திருத் தாள் மலர் சூட்ட,
வருக! வருக! வருகவே!
மகிமைச் சிரவைத் தெய்வ சிகா -
மணியே வருக வருகவே! 1

**விண்ணம்பொலி** - ஆகாயத்தில் விளங்குகின்ற, அம் சாரியை. **பூரண மதி** - முழுச் சந்திரன். கருணைவிரிவேலை என்க, தயை பெருகின்ற கடல். **அணி** - அழகு. அம்புயக் கரம், தண்டணிகரம் எனத் தனித்தனி இயையும். தாமரை போன்றதும் தண்டாயுதம் தரித்தும் ஆகியகை. **சார் கரமும்** - பொருந்தியுள்ள கையும். **தவள** - வெண்மையான. **தயங்கும்** - ஒளிரும். **திண்ணம்** - வலிமையான, அம் சாரியை. இனித் திண் அம் எனப்பிரிந்து வலிமையுடையதும் அழகியதும் ஆகிய எனினும் ஆம். **புயம்** - தோள். **சேறு ஆய்** - இனிமை மிகுந்து. இன்பக்கண்ணீர். **ஏத்தும் வண்ணம்** - போற்றும்படி. திருத்தாள் மலர் சூட்ட என்புழி அடியேனின் தலையின்மேல் என வருவித்துக்கொள்க. **மகிமை** - பெருமைமிக்க. **தெய்வசிகாமணி** - தேவர்களில் சிறந்தவன்.

குறிப்பு : ஒப்பு :

"நீறு ஆர்த்த மேனி உரோமம் சிலிர்த்து உளம் நெக்கு நெக்குச்
சேறாய்க் கசிந்தே உருகி நின்சீரடிக்கே
மாறாத்தியானம் உற்று ஆனந்தம் மேற்கொண்டு மார்பில் கண்ணீர்
ஆறாப்பெருகக் கிடப்பது என்றோ? கயிலாயத்தனே"
(பட்டினத்தார் பாடல் 80)

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தம் பழனிப் பிள்ளைத்தமிழ் வாரானைப்பருவ முதல் பாடலைத் தண்டாயுதபாணியின் திருவடிவ வருணனையாக இயற்றியுள்ளார். சிரவைக் கந்தசாமி சுவாமிகள் அதைப்போலவே தாம் இயற்றிய சிரவை, குருந்தமலை ஆகிய இரு முருகன் பிள்ளைத் தமிழ்களிலும் அதைப் பின்பற்றியுள்ளார்.

எடுத்த உடம்பு இங்கு எத்தனை என்று
எண்ண முடியாது; அனைத்தும்
இசையும் தனக்கும் பயன் இலதாய்,
என் ஆருயிர்க்கும் துணை இலதாய்,
தொடுத்த மாயை கன்மவழிச்
சுழன்று பாழாய்த் தொலைந்தது அல்லால்
சுக நித்திய வாழ்வு உற அருள் உன்
துணைத்தாள் அன்பு திளைத்திலது; ஆல்
அடுத்து இப் பிறப்பை உன் பணிக்கு ஆள்
ஆக விடுத்தேன்; புறக் கணியாது,
ஆட் கொண்டருள்; மெய்ச் சித்தி முத்தி
அடைந்த புகழ்க் கௌமாரர் இனம்
மடுத்த தகை முற்று ஈந்தருள
வருக! வருக! வருகவே!
மகிமைச் சிரவைத் தெய்வசிகா -
மணியே! வருக! வருகவே! 2

ஓர் உயிர் இதுவரை அடைந்த பிறவிகள் கணக்கற்றவை. "எழுகடல் மணலை அளவிடின் அதிகம் எனதிடர் பிறவி அவதாரம்" (திருப்புகழ் 596) என்பார் அருணகிரிநாதர். **இசையும் தனக்கும்** - (உயிரோடு) பொருந்திய உடலுக்கும். **தொடுத்த** - (மூலமலம் ஆகிய ஆணவத்தை அடக்கச் சம்பந்த அனுபந்த மலங்களாகச்) சேர்க்கப்பட்ட. **மாயை கன்ம வழி** - மாயாமலம் மற்றும் வினைகளின் காரணமாக. **சுழன்று** - (மீண்டும் மீண்டும் பிறந்தும் இறந்தும்) சுற்றிச்சுற்றி. **சுக நித்திய வாழ்வு உற** - பேரின்பமயமானதும் என்றும் அழிவு அற்றதும் ஆகிய வீட்டுப்பேறு ஆகிய பெருநிலையைப் பெற. **அருள்** - திருவருள் புரிகின்ற. **துணைத்தாள்** - இரு திருவடிகள். **அன்பு** - இங்கு பக்தியில். **திளைத்திலது** - அழுந்தவில்ல. **ஆல்** அசை. **புறக்கணியாது** - ஒதுக்கிவிடாமல். **கௌமாரர் இனம்** - முருகபக்தர் கூட்டம். **மடுத்த தகை** - துய்த்த நலங்கள், கௌமாரர்கள் அனுபவித்த எல்லாச் சிறப்புக்களும் என்றபடி.

பிறவா இடம் ஒன்று இலை; உலகப்
  பெருக்கங்களில், யான் என்னது எனப்
  பேசாப் பொருள் என்று ஒன்றும் இல்லை;
  பெற்றோன் ஆகிச் சுதன் ஆகி
இறவா இடமும் இல்லை; என்னை
  இன்னம் பிறப்பு ஆம் சுமை தாங்கி,
  இருந்தும் வாழ்ந்தும் தாழ்ந்தும் உழன் -
  றிட நீ அகற்றாது, எந்நாளும்
பிறவா இறவாத் தலம் ஆகி,
  பிறங்கும் உனது மலர்ப்பதத்தில்,
  பிரியாப்பேர் அன்புடன், ஞானப்
  பெருக்கம் உதவி, அரைக்கணமும்
மறவா வரம் தந்திட, அருளால்
  வருக! வருக! வருகவே!
  மகிமைச் சிரவைத் தெய்வசிகா -
  மணியே! வருக! வருகவே! 3

**உலக பெருக்கங்களில்** - பூமியில் உள்ள உயர்ந்த செல்வங்களுக்குள். **யான் என்னது என** - அடியேன் அப்பொருள் என்னுடையது என்று, அதாவது உலகில் உள்ள எல்லாச் செல்வங்களும் ஒரு பிறவியில் இல்லாவிட்டால் வேறு ஒன்றில் என்னால் (இந்த உயிரால்) துய்க்கப்பட்டது தான் என்பது கருத்து. **பெற்றோன்** - தந்தை. **சுதன்** - மகன். **சுமை தாங்கி** - பாரத்தைச் சுமந்துகொண்டு. **பிறங்கும்** - விளங்குகின்ற.

குறிப்பு :

"எத்தனைஊர்? எத்தனைவீடு? எத்தனைதாய்? பெற்றவர்கள்
எத்தனைபேரிட்டு அழைக்க ஏன்என்றேன்? - நித்தம்
எனக்குக் களை ஆற்றாய்; ஏகம்பா! கம்பா!"

என்னும் பட்டினத்தார் வெண்பா (161) நினைவுக்கு வருகிறது.

மூர்க்கம் மிகும் என் மனப் பகையோ,
மோக தாகம் மிகப் பொருந்தும்
மூ ஆசைகள் ஆம் பகுப்பு அமைந்த
மூவா ஆசை முதலை கவர்ந்து
ஈர்க்கத் தளர்ந்தது; இதை விடுத்து ஏ -
றிடவும் அறியேன்; எடுத்து எனைமேல்
ஏற்றும் கதியும் காண்கில்லேன்;
இனிய துணை ஆம் நிராசையொடும்,
தீர்க்க விவேகத் தெளிவை, உளம்
சேரப் புரிந்து, பசு போதத்
தியக்கம் ஒழித்து, பதி ஞானச்
சிறப்புப் புகுதக் கூட்டும் சன் -
மார்க்கத்து அமைக்கும்படி, ஒருகால்
வருக! வருக! வருகவே!
மகிமைச் சிரவைத் தெய்வ சிகா -
மணியே! வருக! வருகவே! 4

**மூர்க்கம்** - பெரும் சினம். மனப்பகை என்பதைப் பகை மனம் என மாறுக. ஒருபொருளைக் கட்டாயம் அடைந்து துய்த்துவிட வேண்டும் என்னும் பெருவேட்கை. **மூஆசைகள்** - மண், பெண், பொன் என்னும் மூன்றின் மீது கொள்ளும் இச்சை. **பகுப்பு** - பிரிவு, பொதுவான ஆசை மூன்றாகப் பிரிவுபட்டுள்ளது என்றபடி. **மூவா** - நீங்காத. மூ ஆசை, மூவா ஆசை எனப் பயின்றது சொல் முரண். ஆசை ஆகிய முதலை என உருவகம். மனம் முதலை ஈர்க்கத் தளர்ந்தது என்பது முடிபு. **கதி** - துணை. **நிராசை** - பற்றின்மை, வைராக்கியம். **தீர்க்க விவேக தெளிவு** - ஆழமான ஆராய்ச்சியால் பெற்ற ஐயமற்ற அறிவுத் தெளிவு. **பசுபோதத் தியக்கம்** - இது பாசஞானம், ஆன்ம ஞானம் எனவும் வழங்கப்படும்; சடப்பொருள் ஆகிய உடம்பு வேறு, ஆன்மா ஆகிய தான்வேறு என உணர்ந்த நிலை இது; இவ்வாறு தன்னை உணர்ந்து தானே பரம் எனக் கருதத்தொடங்கி விடுவதால் தியக்கம் எனப்பட்டது. **தியக்கம்** - மயக்கம். "நான் பிரமம் என்னும் ஞானம் கருது பசுஞானம்" என்பது சித்தியார். (293) ஒப்பு : "சிறியனேன் பசுஞானக் கூனை நீக்கி வந்து ஆண்டிட" (இளசைப் பதிற்றுப். 78) **பதிஞானச் சிறப்பு** : சிவஞானம் எனப்படுவதும் இதுவே.

இறைவனுடைய தன்மையை அவனருளால் உணர்ந்து அவனே தலைவன் எனக் கொண்டொழுகுதல் இந்த நிலை. இதுவே மிக உயர்ந்த மெய்யறிவு ஆதலின் சிறப்பு எனப்பட்டது. **புகுதக் கூட்டும்** - அடைவிக்கும். **சன்மார்க்கத்து** - சைவ நன்னெறியில். **ஒரு கால்** - ஒரு முறை.

**கந்தா வருக! பரிமளச் செங்**
**கடம்பா வருக! யான் அடையும்**
**கதியே வருக! சிவ பெருமான்**
**கண்ணில் தோன்றும் திருவருட் சம் -**
**பந்தா வருக! ஒப்பு அரு மெய்ப்**
**பரமா வருக! குறவர் மடப்**
**பாவை அமரர் பூவையர் தம்**
**பாகா வருக! குக்குடம் ஆம்**
**சிந்தா வருக! தேவர் தொழும்**
**தேவா வருக! சிமைய நடச்**
**சேந்தா வருக! இமைய அருள்(ச்)**
**செல்விக்கு உவகைப் பெருக்கு அளிக்கும்**
**மைந்தா வருக! வெற்றி மய**
**வடிவேல் அரசே! வருகவே!**
**மகிமைச் சிரவைத் தெய்வசிகா -**
**மணியே! வருக! வருகவே!** 5

**பரிமள** - மணம் மிக்க. **கதி** - வீட்டுப்பேறு, "சிவகதியே கதி; மற்றுள்ள எல்லாம் பவகதி" (திருமந்திரம் 1536) என்பது தமிழாகமம். **திரு அருள் சம்பந்தா** - இறைவனின் கருணையோடு தொடர்பு உடையவரே. **பரமா** - எல்லாவற்றையும் கடந்தவரே. **குறவர் மடப்பாவை** - வேடுவர் குலத்தில் தோன்றிய வஞ்சகம் அற்ற சிலை போன்ற வள்ளிதேவி. **அமரர்பூவை** - தெய்வலோகத்துக் கிளி போன்ற தெய்வயானை. **பாகா** - பக்கத்திற் கொண்டவனே. **குக்குடம் ஆம் சிந்தா** - கோழி ஆகிய கொடியை உடையவனே, சிந்து என்னும் சொல் பதாகைப்பொருள் தருதலை, "தீமதலை சிந்தா" என்னும் கந்தரந்தாதித் தொடருக்கு (21), வில்லிபுத்தூரார் "அக்கினியிற் பிறந்த கோழியை கொடியாகக் கொண்டவனே" என உரைகண்டதால் அறியலாம். **சிமய நட** - குன்றுதோறும்

ஆடுகின்ற. **இமைய அருள் செல்வி** - இமவானின் மகள் ஆகிய உமாதேவி. **மைந்தா** - மகனே.

## *(இரட்டையாசிரிய விருத்தம்)*

**கொலை இலக்குஆய், உற்ற புலை இலக்கு ஆய் மிக்க**
**கோது ஆன சூது ஆன நீள்**
**குணம் இலக்கு ஆகி, அழி பணம் இலக்கு ஆகி, உழல்**
**கோதை இடு கோதையினர்கண்**
**வலை இலக்கு ஆய், இலகும் முலை இலக்கு ஆகி, இனம்**
**வந்த வந்தன ஆன பல்**
**வகையான துன்பத்தின் மிகை ஆன கொடுமைபுரி**
**மாயம் அற மாய வைத்து,**
**கலை இலக்கு ஆகிய மெய் நிலை இலக்கு ஆகி அமை**
**கவுமாரர் பெற்று உவந்த**
**காட்சி பொலி பேர் இன்ப மாட்சி நிறைவு ஆக என்**
**கண்காண விண்காண் அருள்**
**மலை இலக்குஆ அடிகள் மிலை தவப் பேறு உதவ**
**வந்தருள்க! வந்தருள்கவே!**
**மணமலர்ப் பொழில் கொள் சிரவணபுரக் குருபர! முன்**
**வந்தருள்க! வந்தருள்கவே!** 6

**இலக்கு** - இலட்சியம், முயன்று அடையவிரும்புவது. **புலை** - புலால் உணவு. **கோது ஆன சூது ஆன நீள் குணம்** - குற்றமும் வஞ்சகமும் சேர்ந்த பெரும் தீய பண்பு. **அழி பணம்** - செலவாகி விடுகின்ற செல்வம், வினைத்தொகை. உழல் கோதையினர், கோதை இடு கோதையினர் எனத் தனித்தனி இயையும். **கோதை இடு** - மலர்மாலை அணிந்துள்ள. **கோதையினர்** - மகளிரின், இங்கு விலைமகளிர், "சூது கொலைகாரர் ஆசைபணமாதர் தூவையர்கள் சோகை முக நீலர்" என்பார் அருணகிரிநாதர் (திருப்புகழ் 399) **கண் வலை** - விழிகளாகிய வலை, உருவகம். **இலகும்** - நன்கு காட்சியளிக்கின்ற. **இனம்** - இன்னமும், இதற்கு மேலும். **வந்த வந்தன ஆன** - தொடர்ந்து ஏற்பட்டுக்கொண்டே இருந்த, "மாற்றுத்தேர் அவண் வந்தன வந்தன வாரா" (யுத்த. முதற்போர்.243) எனக் கம்பனும் இரட்டுவான். **மிகை** - மிகுதி. **மாயம் அற மாய வைத்து** - தீமையை முற்றிலுமாக இறக்கச்

செய்து, தீமையை முழுவதும் அகற்றி என்றபடி. **கலை** - கல்வியின். **மெய்நிலை** - அழியாத தன்மை, முத்தி. "கற்றதனால் ஆய பயன் என்கொல்? வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்" என்பது தமிழ்மாமறை (2). **காட்சி பொலி** - மெய்ஞ்ஞானம் விளங்குகின்ற, தரிசனம் என்பது இதுவே. கண்காண வந்தருள்க. தவப்பேறு உதவ வந்தருள்க எனத் தனித்தனி இயையும். **விண் அருள் மலை இலக்கா காண் அடிகள்** - தேவர்கள் தாம் தயவிற்கு மலைபோல் நம்பி நோக்குகின்ற தேவரீரின் திருவடிகளை. **விண்** - இடவாகு பெயர். **மிலை தவப்பேறு** - அடியேன் என் தலையில் சூடிக் கொள்ளுகின்ற உயர்ந்த பேற்றை. **முன்** - எதிரில்.

குறிப்பு : இச் செய்யுளில் இலக்கு, ஆதல் இரண்டும் பலமுறை பயின்று வந்தது சொல் பின்வருநிலை அணி ஆகும்.

மானமுடன் மிக்க அபிமான வலையூடு உற்ற
மன மாயை தினம் அலைப்ப,
வாழ்விலே நிறை பெருந்தாழ்விலே உரம் உற்ற
மதியினைப் பதியவைத்து,
கானகத்து உழல்கின்ற தான வல்விலங்கு எனக்
களி மிகும் மதோன்மத்தனாய்,
காப்புண்ட வஞ்சகக் கோப்புண்ட அடிமை மிசை
கருணை வைத்து, அருணை நகர் வாழ்வு
ஆன வித்தகன் மகிமை ஞான அற்புதன் உளத்து
அமையும் அநுபூதி அருளி,
அமிதம் உறும் உனது புகழ் அமுதினைப் பாக்களில்
அமைத்துத் துதித்து உருகியே,
வானகத்து அருளை எனது ஊனகத்து இலகவிட
வந்தருள்க! வந்தருள்கவே!
மண மலர்ப் பொழில் கொள் சிரவணபுரக் குருபர! முன்
வந்தருள்க! வந்தருள்கவே! 7

**மானமுடன்** - செருக்கோடு, அத்துச் சாரியை கெட்டது. **அபிமானம்** - ஒருபொருளைத் தனக்குரியதாக நினைத்து மிகவும் விரும்புதல்; மான அபிமானம் என்பது நான் எனது எனப்பொருள்படும். **மனமாயை** - உள்ளத்தின் மயக்கம்.

அலைப்ப - அலைக்கழிக்க. வாழ்விலே - உயர்ச்சியில். **உரம் உற்ற மதியினை** - ஊக்கம் மிகுந்த அறிவை. **கானகத்து** - காட்டின். **தான வல் விலங்கு என** - மதம் பொழிகின்றதும் வலிமை மிக்கதும் ஆகிய யானையைப் போல. **வல்** - வலிமை மிக்க. **களி** - மதம். **மதோன்மத்தன்** - மத+உன்மத்தன், களிப்பினால் பித்துப்பிடித்தவன். **காப்புண்ட** - இருவினைகளால் கட்டப்பட்டுள்ள. **வஞ்சகக் கோப்பு உண்ட** - வஞ்சிக்கின்ற ஆணவமலத்தின் தொடர்பைப் பெற்றுள்ள, **வஞ்சகம்** - ஆகுபெயர். அருணைநகர் வாழ்வு ஆன வித்தகன், ஞான அற்புதன் என்றது அருணகிரிநாதரை. **அநுபூதி** - இறையனுபவம். **அமிதம் உறும்** - எல்லையற்ற. **பாக்களில்** - தமிழ்ப்பாடல்களில். **வானகத்து அருளை** - தெய்வீகமான திருவருளை. **ஊனகத்து** - உடலின்கண்.

## *(வண்ண விருத்தம்)*

தனான தானன தனான தானன
தனான தானன தந்த தனனா

இலாபம் ஏதும் இல் அபாய வாழ்வு இதில்
இலேகர் ஆர் அமிழ்து உண்டும் உளமேல்
இராகமோடு இசை துவேசம் மேவினர்;
இலேசம் ஆர் சுகம் என்று அறிகிலார்;
புலால் மெய்யூடு உயிர் சிநேகம் ஓர்கிலர்;
பொறாமையால் நிறை மண்டு அலம் உளார்;
பொலாத தீமைகள் அவாவினார்; உயர்
புராரி பாலக என்று துதியார்;
குலாவு இனோர் குழு உறாது, வேல்புனை
குமார! தேசிக! கந்த! முருகா!
குகா! விசாக! சண்முகா! எனா நுவல்
குணா நுபூதி மெய் அன்பு அருளவே,
வலாரி மா மகள், கிராத நாயகி,
மணாள! நேர் உற வந்தருள்கவே!
வரோதயா! சிரவையூரின் மேவிய
மயூர வாகன! வந்தருளகவே! 8

**இலாபம்** - ஆதாயம். **அபாய** - ஆபத்தான. **இலேகர்ஆர்** - தேவர்களால் துய்க்கப்படுகின்ற. **இராகமொடு** - விருப்பத்துடன், அத்துச்சாரியை கெட்டது. **இசை** - பொருந்திய. **துவேசம்** - வெறுப்பு. விருப்பு வெறுப்பு மிக்கவர் என்றபடி. ஆர் சுகம் இலேசம் என்று அறிகிலார் எனக் கூட்டுக; துய்க்கின்ற இன்பங்கள் மிகச் சிறியவை என உணராதவர்கள் என்றவாறு. **புலால் மெய்யூடு** - மாமிசத்தால் ஆன உடம்பினோடு. **உயிர் சினேகம்** - ஆன்மா ஆகிய உயிருக்கு உள்ள தொடர்பை. **ஓர்கிலார்** - (நிலையற்றது என) உணராதவர்கள். **நிறை மண்டு**- மிகுதியான, ஒருபொருட் பன்மொழி. **அலம்** - துன்பம். **அவாவினார்** - விரும்பியவர்கள். **புராரி பாலக** - முப்புரங்களை எரித்த சிவபெருமானின் மைந்தனே. **இனோர் குலாவு குழு** - இத்தகையவர்கள் நிறைந்த கூட்டம். **குண அநுபூதி** - மேன்மையான அநுபவ உணர்வுடன் கூடிய. வலாரி மாமகள் - வல் என்னும் அசுரனின் பகைவனாகிய இந்திரனின் சிறந்த மகள் ஆகிய தேவசேனை. ***கிராதநாயகி*** - வேடர்குலப் பெண் ஆகிய வள்ளிதேவி. **மணாள** - கணவனே. **வரோதயா** - மிக உயர்ந்த பிறப்பை உடையவரே. இனி தேவர்களின் வேண்டுகோட்படி இறைவனால் வரமாகத் தோற்றுவிக்கப் பட்டவனே எனினும் ஆம். **மயூரவாகன** - மயிலை ஊர்தியாக உடையவனே.

தனன தனன தனன தனன
தனன தனன தனதனா.

ஒளியும் மணமும் அழகும் நிறையும்
உருவம் உடைய முதல்வனே!
உணர்வை உணரும் அவர்கள் மதியில்
ஒழுகும் அமுத கிரணமே!
அளிகொள் கமல மலரில் வதியும்
அயன் உள் அறிய அரியது ஆம்,
அருமை முதன்மை மறைகொள் பொருளை
அரன் முன் உணர அருள்பவா!

நளின மலர்மின் மகிழும் மகிழ்நன்
நயனம் உதவு மகளிர் நீள்
நயன மலரில் உவகை மிகைசெய்
நறவ! அருள் மெய் வடிவனே!
வளி கடவிய இரதமிசை ஒல்
மகிபன்! வருக! வருகவே!
வளமை நிலவு சிரவண புர
வரதன்! வருக! வருகவே! 9

**உருவம் உடைய** - திருமேனியைப் பெற்றுள்ள. **உணர்வை உணரும் அவர்கள்** - அறிவே இறைவனின் வடிவம் ஆகும் என்பதைப் புரிந்து கொண்டுள்ள ஞானிகளின். **மதியில்** - அறிவில். அமுத கிரணம் - அம்ருத மயமான கதிர். **அளிகொள்** - தன்பால் தேனைக்கொண்டிருக்கிற. **வதியும்** - வசிக்கும். **அயன்** - பிரமனும், உயர்வு சிறப்பும்மை விரிக்க. **உள் அறிய அரியது ஆம்** - மனத்திற்பதியும்படி உணர இயலாததாகிய. மறைகொள் முதன்மை அருமைப்பொருளை என இயையும். இது பிரணவம். **அரன்** - சிவபெருமான். **நளினமலர்மின் மகிழ்நன்** - தாமரை மலர்மகளாகிய இலக்குமியின் கணவர் ஆகிய திருமால். **நயனம் உதவு மகளிர்** - தன் விழிகளிலிருந்து தோற்றுவித்த மகளிர், இவர் வள்ளி தெய்வயானையர். முற்பிறவியில் இவர்கள் திருமாலின் குமாரிகள், பெயர் அமுதவல்லி, சுந்தரவல்லி. "செந்திரு மணந்த கேள்வன் உயிர்த்தரு தெய்வக் கற்பின் சுந்தரி அமுத வல்லி' (தணிகைப்புராணம், களவுப்.1) **நயன மலரில்** - கண்களாகிய குவளைப்பூக்களுள். **நறவ** - தேன் போன்றவரே. **வளி கடவிய** - வாயுதேவனால் செலுத்தப்பெறும். **இரதமிசை ஒல்** - தேரின்மேல் விளங்கும். முருகப்பெருமானின் தேரோட்டி காற்றுக் கடவுள்; "சில்லியந்தேர்மேல் செவ்வேள் சேர்தலும் உலவை வேந்தன் வல்லைதன் தமர்களோடும் வாம்பரி கடாவி உய்ப்ப' (கந்தபுராணம் 1,24,78). **மகிபன்** - அரசனே, அண்மை விளி. **வரதன்** - வள்ளலே.

குறிப்பு : உணர்வை உணரும் அவர்கள். ஒப்பு : "திருவான்மியூர் உறையும் அறிவே உன்னையல்லால்" (தேவாரம் 3-55-9) "அறிவே நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே" (தேவாரம் 7-24-9) "அறிவை அறிபவர் அறியும் இன்பம் (திருப்புகழ் 1006) மதியில்

*ஒழுகும் அமுத கிரணம் - ஒப்பு : "உலகு குளிர எமது மதியில் ஒழுகும் அமுத கிரணமே" (முத்துக்குமாரசாமி பிள்ளைத். வருகைப்.9)*

தய்யத் தனதன தய்யத் தனதன
தய்யத் தனதன தனன தனதனா

வையத்தினில் உயர்சையத் திரள்களில்
மல்கிப் பொலி தயை வடிவன் வருகவே!
வள்ளிக் கொடி ஒரு தெய்வப்பிடி மகள்
வள்ளல்(த்) தகை அருள் மகிழ்நன் வருகவே!
பொய் அற்று அவிர் தவர் உள்ளத் தலமிசை
புல்லிக் கமழ் பரிபுரணன் வருகவே!
புள்ளிச் சிறை ஒளிர் மெய் பெற்று, ஒயில் அமை
புள் உய்த்திடும்உயர் புனிதன் வருகவே!
மெய் அற்புதர் திரு உள்ளத்தினில் எழு
வெள்ளத் திருவுரு விமலன் வருகவே!
வெள்ளைக் கலைமகள் கொள் விற்பன மய
மெய்யைத் தருதமிழ் விரகன் வருகவே!
செய்யத் தகு தவம் மையத்து அமைநிலை
செல்லப் புரி குரு! வருக! வருகவே!
செல்வச் சிரவையின் உள்ளில்(த்) திசைபொலி
தெய்வத் திருமணி! வருக! வருகவே! 10

**வையத்தினில்** - உலகில். **சையத்திரள்களில்** - மலைக் கூட்டங்களில். **மல்கிப் பொலி** - நிறைந்து விளங்குகின்ற. **தயை** - கருணை. **தெய்வப்பிடி மகள்** - தெய்வயானையம்மை. **மகிழ்நன்** - கணவன். **தவர்** - தவசிகள். **புல்லி கமழ்** - பொருந்தி மணக்கின்ற. **பரிபுரணன்** - முழுமையானவன், பரம்பொருள். **புள்ளிச் சிறைஒளிர் மெய் பெற்று** - கண்போன்ற புள்ளிகளை உடைய தோகை விளங்கும் உடலைப்பெற்று. **ஓயில் அமைபுள் உய்த்திடு** - அழகு பொருந்திய பறவை ஆகிய மயிலைச் செலுத்துகின்ற. **மெய்அற்புதர்** - மெஞ்ஞானிகளின். **வெள்ளத்திருஉருவிமலன்** - ஒளிவெள்ளத்தைப்போன்ற அழகிய வடிவத்தை உடைய தூயனே, அண்மைவிளி. **விற்பன**

மய - அறிவின் தன்மை மிக்க. **மெய்யைத் தரு** - நிலைத்த இறைவனைக் காட்டுகின்ற. **தமிழ்விரகன்** - திருஞானசம்பந்தர், சம்பந்தப்பெருமான் முருகவேளின் அம்சாவதாரம் என்பது வெளிப்படை. **மை அத்து** - குற்றம் இல்லாமல், அத்து அற்று என்பதன் போலி. **செல்லப்புரி** - அடையச் செய்கின்ற, சித்தி அடைய வைக்கும். **உள்ளில்** - உருபுமேல் உருபு. **திசைபொலி** - எட்டுத்திசைகளிலும் விளங்குகின்ற.

## 7. அம்புலிப் பருவம்

### *(இரட்டையாசிரிய விருத்தம்)*

**சாமம்**

தவள ஒளி துவள் கயிலை இறைவன் விழி வழி வந்து
சானவிப்பால் அமைந்தாய்;
தண்பனி அடுக்கல் அம்சாரல்(த்) தடாக மெய்ச்
சரவண பவத்தன் ஆனாய்;
கவள மத கரி அன்ன ஆரலர் தனப்பால்(க்) கொள்
காதலன் எனச் சிறந்தாய்;
கமல மலர் கண்டு நாணிக் குனியும் அணிமிக்க
காட்சிமுகம் உற்று அவிர்ந்தாய்;
துவள அசுரேசன் இமையோர்களை மடிக்காது
சுதை அருள் மெய் இன்பு உதவினாய்;
துன்று தாரகை வாளிசைந்து பரிவாரமாச்
சுற்று அரசு எனப் பொலிந்தாய்;
அவள விசை பெற்ற முருகேசன் உனை அனையன்; ஆல்
அம்புலீ! ஆடவாவே!
அரவை அணி சிகியுடைய சிரவை நகர் அதிபனுடன்
அம்புலீ! ஆடவாவே! 1

### *(சந்திரன் பகுதி)*

**தவள ஒளி துவள் கயிலை இறைவன்விழிவழி வந்து,**
**சானவிப்பால் அமைந்தாய்;**
**தண் பனிஅடுக்கலம் சாரல்(த்) தடாகம் எய்ச்**
**சரவண பவத்தன் ஆனாய்;**
**கவள மத கரி அன்ன ஆரலர் தனப்பால் கொள்**
**காதலன் எனச் சிறந்தாய்;**
**கமலமலர் கண்டு நாணிக் குனியும் அணிமிக்க**
**காட்சி முகம் உற்று அவிர்ந்தாய்;**
**துவள அசுரேசன், இமையோர்களை மடிக்காது,**
**சுதை அருள் மெய் இன்பு உதவினாய்;**
**துன்று தாரகை வாள் இசைந்து, பரிவாரமாச்**
**சுற்று அரசு எனப் பொலிந்தாய்**

**தவள ஒளி துவள்** - வெண்மை ஒளிர்கின்ற. **விழிவழிவந்து** - (இடது) கண்ணாக அமைந்து. **சானவிப்பால்** - (அதனால் சிவபிரானின் சடையில் உள்ள) கங்கைக்கு அருகே. **அமைந்தாய்** - (பிறைவடிவில்) நிலைபெற்றாய். **தண்** - குளிர்ந்த. **பனி அடுக்கலம்** - இமயமலை, அம் சாரியை. **சாரல்** - மலைப்பக்கத்தில் உள்ள. **தடாகம் எய்** - குளத்தை அடைந்து. **சர** - இயங்குகின்ற. **வண** - தன்மையை உடைய, வண்ண. **பவத்தன்** - சிறப்பை உடையவன். **கவள** - பேருண்டி கொள்கின்ற. **மதகரி அன்ன** - மதத்தை உடைய யானையைப் போன்ற, இது நகிலுக்கு உவமை, **ஆரல்** - கார்த்திகைப் பெண்களின். **தனப்பால் கொள்** - முலைகளை அணைய உரிமை உடைய, ஊழ்விதியைப் பெற்ற எனினும் ஆம். **அணி மிக்க** - அழகு மிகுந்த. **காட்சி** - காணத்தகுந்த. இமையோர்களைத் துவள அசுரேசன் மடிக்காது என இயையும். தேவர்கள் சந்திரனின் அமுதகிரணங்களை உண்பர் என்பர்; "பிறைவளர் நிறைமதி உண்டி அணிமணிப் பைம்பூண் அமரர்" என்பது பரிபாடல் (3:52-53), "அடுத்த வானவர்க்கு ஆரமுது அன்புடன் அளிப்போன்" (வில்லி.குருகுலச்.2) **துன்று** - நெருங்கிய. **தாரகை** - விண்மீன்களின். **வாள்** - ஒளி. **பரிவாரமா** - உடன் உறைவோர் ஆக. ஒப்பு : "சுடரொடு சூழ்வரு தாரகை மேருப் புடைவரு சூழல்" (பரிபாடல் 19:19-20)

*(முருகன் பகுதி)*

தவள ஒளி துவள் கயிலை இறைவன் விழிவழி வந்து,
சானவிப்பால் அமைந்தாய்;
தண்பனி அடுக்கல் அம் சாரல்(த்) தடாக மெய்ச்
சரவணபவத்தன் ஆனாய்;
கவள மதகரி அன்ன ஆரவர் தனப் பால்கொள்
காதலன் எனச் சிறந்தாய்;
கமலமலர் கண்டு நாணிக் குனியும் அணிமிக்க
காட்சிமுகம் உற்று அவிர்ந்தாய்;
துவள அசுரேசன், இமையோர்களை மடிக்காது,
சுதை அருள் மெய் இன்பு உதவினாய்;
துன்று தார் அகை வாள்இசைந்து பரிவாரமாச்
சுற்று அரசு எனப் பொலிந்தாய்.

**விழிவழி வந்து** - நெற்றிக் கண்ணில் தோன்றி. **சானவிப்பால் அமைந்தாய்** - கங்கையாற்றின்கண் இருந்தாய். தடாக மெய்ச் சரவணபவன் எனப் பெயர் பெற்றாய். **தனப்பால் கொள் காதலன்** - முலைப்பாலைக் குடித்தமைந்தன். **மடிக்காது** - கொல்லாமல் பாதுகாத்து. **சுதை அருள் மெய் இன்பு** - (அதனால்) தங்கள் இளவரசியாகிய தெய்வயானையைத் திருமணம் செய்து கொடுக்குமளவு வளர்ந்த உண்மையான இன்பத்தை. **துன்று** - நெருங்கிய. **தார்** - படைவீரர்கள், நவவீரர்களைக் குறித்தது எனலாம். **அகை வாள் இசைந்து** - பகைவர்களை வருத்துகின்ற படைக்கலங்களை உடையவராய். **பரிவாரமா** - படைத்தலைவர்கள் ஆக. **அவளவு இசை பெற்ற** - அந்த அளவிற்குப் புகழ்பெற்றுள்ள. **அனையன்** - போன்றவன். ஆல் அசை. **அரவை அணி** - பாம்புகளைப் பூண்டுள்ள. ***சிகி* உடைய** - மயிலை ஊர்தியாகக் கொண்டுள்ள.

மால் இதயமேல் உதித்திடும் ஓகை நிறைவு தரும்
மங்கள உருக் குலவினாய்;
வரை எனப் பொலி திரளில் நிரை நிரை கதிகொண்ட
வண் கதிர்த் தாள் அமைந்தாய்;

மால் இசையும் மாதவர்க்கு இன்பமொடு துன்பமும்
வளர்த்து பேர் ஆடல் உடையாய்;
வாரண முகத்தன் உட்கொண்டு உவக்கும் பணியில்
மகிழ் இளமை பெற்று உயர்ந்தாய்;
மேல் இசைதரும் பன்னிரண்டு நெறி உறவு ஆன
விந்தை பொலி பொதுவன் ஆனாய்;
வியன் மதுரை ஊரினில் பாண்டியர் குலத்தினை
விளக்கும் இசை ஏற்று இலகினாய்;
ஆலி அருள் மேனி பெறு குமரப்பன் உனை ஒப்பன்;
அம்புலீ ஆடவாவே!
அரவை அணி சிகியுடைய சிரவை நகர் அதிபனுடன்
அம்புலீ ஆடவாவே! 2

## *(சந்திரன் பகுதி)*

மால் இதயமேல் உதித்திடும் ஓகை நிறைவு தரும்
மங்கள உருக்குலவினாய்;
வரை எனப் பொலி, திரளில், நிரை நிரை கதிகொண்ட,
வண் கதிர்த் தாள் அமைந்தாய்;
மால் இசையும் மாது அவர்க்கு இன்பமொடு துன்பமும்
வளர்த்து பேர் ஆடல் உடையாய்;
வாரண முகத்தன் உள்கொண்டு உவக்கும் பணியில்
மகிழ் இளமை பெற்று உயர்ந்தாய்;
மேல் இசைதரும் பன்னிரண்டு நெறி உறவு ஆன
விந்தை பொலி பொதுவன் ஆனாய்;
வியன் மதுரை ஊரினில் பாண்டியர் குலத்தினை
விளக்கும் இசை ஏற்று இலகினாய்;

மால் இதயமேல் உதித்திடும் : சந்திரன் திருமாலின் மார்பில் தோன்றியதாகவும் ஒரு புராணக் கதை உண்டு. ஓகை - மகிழ்ச்சி. **மங்கள உரு** - நன்மை நிறைந்த வடிவம். **வரை எனப் பொலி** - (ஆகாயம் ஆகிய திரையில் வரைந்த) சித்திரம் போல விளங்கும்; 'வரை முதல் நிலைத் தொழிற்பெயர். **திரளில்** - கூட்டமாக. **நிரைநிரைகதி கொண்ட** - ஒழுங்கான வரிசையில் இயங்குகின்ற. **வண் கதிர் தாள்** - வளப்பம் மிக்க கிரணங்களாகிய கால்களை, உருவகம். **மால் இசையும்** - விருப்பத்தை உண்டாக்கும்,

இசைவிக்கும் என்ற பொருளில் ஆட்சி. **மாது அவர்க்கு** - மகளிருக்கு, மாது சாதி ஒருமை, அவர் என்பது பகுதிப்பொருள் விகுதி. பெண்களுக்கு நிலவு எப்பொழுதுமே வருத்தத்தை அளிக்கிறது; **ஆடல்** - இங்குபோர். **வாரண முகத்தன்** - முகவாரணன் என மாறுக, இடமகன்ற கடல். **உட்கொண்டு** - விழுங்கி. மேலைக்கடலில் மூழ்குவதைக் குறித்தது. **உவக்கும் பணியில்** - மகிழ்கின்ற செயலால். **மகிழ் இளமை பெற்று** - சந்தோஷிக்கின்ற இளமை என்றது அடுத்த நாள் மீண்டும் அழகோடு உதித்தலை. **மேல் இசைதரும்** - வானத்தில் உள்ள. **நெறி** - என்றது வழி ஆகிய இராசிகளை. **பொதுவன்** - அனைவருக்கும் பொதுவானவன். **வியன்** - பெரிய. **இசை** - புகழ். பாண்டியர்களைச் சந்திர குலத்தார் எனல் இலக்கிய மரபு. காண்க : "செருமாண் தென்னர் குலமுதல் ஆதலின் அந்தி வானத்து வெண்பிறை தோன்றி" (சிலம்பு.4:22,23). **ஆவிஅருள் மேனி பெறு** - அமுதமயமாகிய உடலை உடைய.

## *முருகன் பகுதி*

**மால் இதயமேல் உதித்திடும் ஓகை நிறைவு தரும்**
**மங்கள உருக் குலவினாய்;**
**வரை எனப் பொலி திரளில் நிரைநிரை கதி கொண்ட**
**வண் கதிர்த் தாள் அமைந்தாய்;**
**மால் இசையும் மாதவர்க்கு இன்பமொடு துன்பமும்**
**வளர்த்து பேர் ஆடல் உடையாய்;**
**வாரணம் உகத் தன் உள்(க்) கொண்டு, உவக்கும் பணியில்**
**மகிழ், இளமை பெற்று உயர்ந்தாய்;**
**மேல் இசை தரும் பன்னிரண்டு நெறி உறவு ஆன**
**விந்தை பொலி பொதுவன் ஆனாய்;**
**வியன் மதுரை ஊரினில் பாண்டியர் குலத்தினை**
**விளக்கும் இசை ஏற்று இலகினாய்;**

**மால் இதயமேல் உதித்திடும் ஓகை நிறைவு தரும்** - திருமாலின் உள்ளத்தில் ஏற்படும் மகிழ்ச்சியை மிகுதியாக்குகின்ற. "ஜெயதுங்க முகுந்தன் மகிழ்ந்தருள் மருகோனே" (11) என்பார் அருணகிரிநாதர். **வரை எனப் பொலி திரளில்** - வரை எனப்படும் மலைக்கூட்டங்களில். **நிரைநிரை** - ஓர் ஒழுங்குடன், தாள

இலயத்தொடு என்றபடி. **கதிகொண்ட** - அசைகின்ற, கூத்தாடுகின்ற. **வண்கதிர் தாள்** - வளப்பம் மிகுந்த ஒளியை உடைய திருவடிகள். "குன்றுதோறாடல்மேவு பெருமாளே" (திருப்புகழ் 437) என்றபடி. **மால் இசையும் மாதவர்** - இரட்டுற மொழிதல், "பெருமை பொருந்திய நல்ல தவசிகள். இவர்களுக்கு இன்பம்; 2. ஆசை கொண்ட குற்றத்தினர், இவர்களுக்குத் துன்பம்; மாதவர் என்பது மா தவர் எனவும் மாது அவர் எனவும் கொள்ளப்படும்; **நிரனிறை. பேர் ஆடல்** - அருளாற்பெரிய திருவிளையாடல். **வாரணம் உக** - யானைத்தலையை உடைய தாரகாசுரன் அழியும்படி. தன் உள் கொண்டு - தன்னுடைய மனத்தில் நினைத்து. இளமை ஆகுபெயராக இளமைக்குரிய வீரத்தை உணர்த்தி நின்றது. **மேல் இசை தரும்** - (சமயத்துறையில்) மேன்மை பொருந்திய. **பன்னிரண்டு நெறி** - (அகச்சமயம் ஆறு புறச்சமயம் ஆறு ஆகிய) பன்னிரு சமயங்களுக்கும். "பன்னிரு சமயத்தினர்களும் வழுத்தும் பழனி மாமலைக்குருபரனே" என்பார் வண்ணச்சரபர் (பழனித் திருவாயிரம் 4-3).

**இசை ஏற்று** - புகழ் பெற்று, உக்கிர குமார பாண்டியன் பற்றிய குறிப்பு. **அரவை அணி** - பாம்புகளைப் பூண்டுள்ள. **சிகி உடைய** - மயில் வாகனத்தை உடைய.

**குழவியாம் மெய்யொடு கலாநிதி என் நாமம் மேல்(க்)**
**கொண்டு அரன் புனைய நின்றாய்;**
**கோலம் விழி காணத் துவக்கின் உலகோர் எலாம்**
**கும்பிட்டு உவக்க அருள்வாய்;**
**விழவு அணிகள் பருவங்கள் தோறும் தலத்திரளின்**
**மீது இயற்றப் புரிகுவாய்;**
**வெங்கதிர்ப் பரிதியின் சங்கமம் பெற்றுமிசை**
**மெய்யில் குளிர்ச்சி குறையாய்;**
**பழகு உருவம் அருவம் ஆம் பண்பு இசைந்து என்றும் அம் -**
**பரம் மீது இயங்குதல் விடாய்;**
**பச்சை மானாகத்தி னிச்சையுடனே உருப்**
**பால்(த்) தழுவும் ஏற்றம் உடையாய்;**

அழகிய குணத்தின் வேல்க் குழகன் உனை ஒக்குமால்;
அம்புலீ! ஆடவாவே!
அரவை அணி சிகியுடைய சிரவை நகர் அதிபனுடன்
அம்புலீ! ஆலவாவே! 3

*(சந்திரன் பகுதி)*

குழவி ஆம் மெய்யொடு கலாநிதி என் நாமம் மேற் -
கொண்டு அரன் புனைய நின்றாய்;
கோலம் விழி காணத் துவக்கின் உலகோர் எலாம்
கும்புஇட்டு உவக்க அருள்வாய்;
விழவு அணிகள் பருவங்கள் தோறும் தலத்திரளின்
மீது இயற்றப் புரிகுவாய்;
வெங்கதிர்ப் பரிதியின் சங்கமம் பெற்றும் இசை
மெய்யில் குளிர்ச்சி குறையாய்;
பழகு உருவம் அருவம் ஆம் பண்பு இசைந்து என்றும் அம் -
பரம் மீது இயங்குதல் விடாய்;
பச்சை மான் ஆகத்தின் இச்சையுடனே உருப்
பால்(த்) தழுவும் ஏற்றம் உடையாய்;

**குழவி ஆம் மெய்** - இளமையான உடல். **கலாநிதி** - பதினாறு கலைகளை உடையவன் என்ற பொருளில் சந்திரனின் பெயர்களுள் ஒன்று. **அரன்புனைய** - சிவபிரான் தன் சடையில் பிறையாகச் சூடிக்கொள்ள. **கோலம்** - (உன்னுடைய) அழகை. **துவக்கின்** - தொடங்கினால், காண முன்வந்தால் என்றபடி. **கும்பு இட்டு** - கூட்டமாகக் கூடி. தலத்திரளின் மீது பருவங்கள் தோறும் விழவு அணிகள் இயற்றப் புரிகுவாய் என இயையும்; திருத்தலங்கள் எல்லாவற்றிலும் ஒவ்வொரு பவுர்ணமி நாளிலும் அழகிய திருவிழாக்கள் நடக்கச் செய்வாய் என்றபடி; அணிவிழவு என மாறுக, இனி அப்படியே கொண்டு விழாக்களின் வரிசை எனினும் ஆம். ஆலய விழாக்கள் யாவும் முழு நிலா நாட்களை ஒட்டியே நடைபெறுகின்றன. **வெம் கதிர் பரிதியின்** - வெப்பமான கிரணங்களை உடைய சூரியனின். **சங்கமம்** - கூட்டம். மெய்யில் இசை குளிர்ச்சி என்க, **இசை** - பொருந்தியுள்ள. **பழகு உருவம்** - (உனக்கு இயல்பாகப்) பொருந்திய முழு நிலாவடிவம். **அருவம் ஆம் பண்பு** - (நாளொரு

கலையாகக் குறைந்து அமாவாசையன்று) காணப்படாதவன் ஆகின்ற இயல்பு. **இசைந்து** - பொருந்தி. **அம்பரமீது** - வானில். **பச்சை மான் ஆகத்தின் இச்சையுடனே** - பசிய மானின் உடம்பின்மீது கொண்ட விருப்பத்தால். **உருப்பால்** - தன் உடம்பில், மான் அல்லது முயல் போன்ற மறுவைக் குறித்தது.

## *(முருகன் பகுதி)*

குழவி ஆம் மெய்யொடு கலாநிதி என் நாமம் மேற்
கொண்டு, அரன் புனைய நின்றாய்;
கோலம் விழிகாணத் துவக்கின், உலகோர் எலாம்
கும்பிட்டு உவக்க அருள்வாய்;
விழவு அணிகள் பருவங்கள் தோறும்
மீது இயற்றப் புரிகுவாய்;
வெங்கதிர்ப் பரிதியின் சங்கமம் பெற்றும் இசை
மெய்யில் குளிர்ச்சி குறையாய்;
பழகு உருவம் அருவம் ஆம் பண்பு இசைந்து என்றும் அம் -
பரம் மீது இயங்குதல் விடாய்;
பச்சை மான் ஆகத்தின் இச்சையுடனே உருப் -
பால் தழுவும் ஏற்றம் உடையாய்;

**குழவி ஆம் மெய்யொடு** - என்றும் இளையாய் எனக் கூறத்தக்க உடலுடன். **கலாநிதி என் நாமம்** - எல்லாக் கலைகளுக்கும் இருப்பிடம் ஆனவன் என்னும் புகழ். "ஒண் கலாநிதி எனத் தெரிந்தோர்" என்பது மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ் (அம்புலிப்.1). **புனைய** - சிறப்பித்துப் புகழும்படி, இப்பொருள் தருதலை "புனையினும் புல் என்னும் நட்பு" (குறள் 790) என்புழிக் காண்க. "சம்பு புகழ் செந்தில் மகிழ் தம்பிரானே" என்பது திருப்புகழ் (38). **விழி கோலம் காணத் துவக்கின்** - அழகைக் கண்கள் தரிசிக்கத் தொடங்கினால். **பருவங்கள் தோறும் விழவு அணிகள் மீது இயற்றப் புரிகுவாய்** - ஒவ்வொரு கால மாற்றங்களிலும் (இருதுக்களிலும்) திருவிழாக்களின் வரிசையை மிகுதியாகக் கொண்டாட வைப்பாய். **வெம் கதிர் பரிதியின் சங்கமம் பெற்றும்** - சுடுகின்ற கிரணங்களை உடைய சூரியனுடைய தொடர்பினை உற்றும், ஒரு கண்ணாக ஏற்றும் என்றபடி. **இசைமெய்யில்** - உனக்குப் பொருந்தியுள்ள

**திருமேனியில் உருவம்** - உருவத்திருமேனி. **அருவம்** - அருவத்திருமேனி. **அம்பரம்மீது** - ஆகாயத்தின்மேல். **பச்சைமான் ஆகத்தின் இச்சையுடனே** - பசிய மான் போன்றவளாகிய வள்ளி நாயகியின் அழகிய திருமேனியை விரும்பும் ஆசையோடு. **உருப்பால்** - தன் உடலோடு. **ஏற்றம்** - புகழ். குறமின்பதசேகரன் (கந்தரநுபூதி) குறமகள் அடி முடிவைத்தனை (முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் - சப்பாணிப்.10) என்பன போன்றன முருகப்பெருமானின் புகழ்மொழிகளாகவே மிளிர்கின்றன.

### *பேதம்*

**காம வெறி உள்பெருகு பாமரர் வெறுக்க நீ**
**காணும் இழிவினை; இவன்தான்**
**காதல்பொலி தொண்டர் புரி மாதவப் பயன் ஆன**
**காட்சி அருள் மாட்சி நிறைவோன்;**
**மாமன் என உறு தக்க நாமன் இட்டுள சூளின்**
**மதியிழந்தனை; இவன் வான்**
**மா பதிய வைத்த சேனாபதி எனத் தேவர்**
**மன்னன் மிக வாழ்த்தும் மருகோன்;**
**சேமம் உற வைத்த கலையின் கும்பல் உன் சுதந் -**
**திரம் அற்றுளாய் நீ; இவன்**
**தெம்பு இடும் கலைவாணி கும்ப முனிவற்கும் உப**
**தேச கலை வீசு அருள் உளான்;**
**ஆம் மகிமை அற்புதன் உனைக் கூவல் கருணையால்;**
**அம்புலி! ஆடவாவே!**
**அரவை நுகர் பறவை இவர் சிரவை நகர் அதிபனுடன்**
**அம்புலீ ஆடவாவே! 4**

**உள்பெருகு** - மனத்தில் மிகுகின்ற. **வெறுத்தல்** : பிரிவுத்துயரால் காதலர்கள் நிலவை வெறுப்பர். இது காமம் மிக்க கழிபடர் நிலை ஆகிய துறை. இது சந்திரோபாலம்பனம் எனவும் மதியைப் பழித்தல் எனவும் சிறப்புப்பெயர் பெறும். **காதல்** - இறையன்பு. இலக்கியத்தில் காமம், காதல் என்பன ஒரே பொருள் தரும் பரியாயச் சொற்களாக இருக்கவும் இங்கே உயர்வு தாழ்வுபட ஆளப்பட்டுள்ளன. **காட்சி அருள்** - இரட்டுற மொழிதல். 1.

தரிசனம் கொடுத்தல். 2. ஞானம் வழங்குதல். **மாமன் என உறு** - இருபத்தேழு உடுக்களை மணம் முடித்துக் கொடுத்ததால் மாமனார் ஆகிய. **தக்க நாமன்** - தட்சன். **சூளின்** - சாபத்தால். சந்திரனுக்குக் கயரோகம் வரத் தட்சன் சாபம் இட்டது வெளிப்படை. **வான் மா பதியவைத்த** - வானுலகின் செல்வத்தை (பெருமையை எனினும் ஆம்) நிலை நிறுத்திய. **தேவர் மன்னன்** - இந்திரன். **மருகோன்** - மாப்பிள்ளை. சந்திரன் தன் மாமனாரால் சபிக்கப்பட, முருகப்பெருமான் வாழ்த்தப்பட்டது வேறுபாடு. **சேமம் உற** - பத்திரமாக. **கலையின் கும்பல்** - கதிர்களின் தொகுதி. **சுதந்தரம் அற்றுளாய்** - (உன் விருப்பம் போல் முழுமையாக இருக்காமல்) தேயவும் வளரவும் ஆகிச் சுய உரிமையை இழந்துள்ளாய். **தெம்பு இடும்** - கல்விச் செருக்கை உண்டாக்குகின்ற. **கலைவாணி** - சரசுவதி. **கும்பமுனி** - அகத்தியர். **உபதேச கலை வீசு** - தெய்வீகத் தன்மையை அருள்கின்ற. "வியாத்தி வியாபகத்துடனே அதுவதன் சொரூபங்களை அறிவிக்கிறது உபதேசகலை என்றவாறு" என்பார் சிவாக்ர யோகிகள் (சிவஞான சித்தியார், அளவை. 13 உரை). **மகிமை** - பெருமை. **கூவல்** - அழைத்தல்.

**விடம் உற்ற பல்கொண்ட படம் உற்ற வெம் பணி**
**விழுங்கு கவளம் நீ; இவன்**
**மேவு கொடியாம் சேவல் கூவும் ஒலி கேட்கில் உயிர்**
**விடும்இழிவு படும் இயல்பதுஆம்;**
**இடம் உற்ற ராசிகளின் இடம் முற்றும் முத்தினம்**
**இருக்க முடியாய் நீ; இவன்**
**ஈராறு சமயத்தின் இப்பாலும் அப்பாலும்**
**என்றும் நிலை ஒன்றும் நிறைவோன்;**
**நடம் உற்ற மேகம் முற்படர்வுற்று மறைவு அமைய,**
**நாணிடாய் நீ; இங்கு இவன்**
**நாடும் ஏழ்திரை வெளிக்கு ஊடு பிரபுட தேவன்**
**நயனம் கவர்ந்த ஒளியான்;**
**அடம் உற்றிடேல்; இவன் உனைக் கூவல் பாக்கியம்; மெய்;**
**அம்புலீ! ஆடவாவே!**
**அரவை நுகர் பறவை இவர் சிரவை நகர் அதிபனுடன்**
**அம்புலீ! ஆடவாவே!** 5

**விடம் உற்ற பல் கொண்ட** - நச்சுப்பல்லை உடையதும். **படம்** - பாம்பின்படம். **வெம்பணி** - கொடிய பாம்பு, இங்கு இராகு கேதுக்கள். **கவளம்** - ஒருவாய் உணவு. **மேவு** - விரும்புகின்ற. உயிர்விடும் இழிவுபடும் என்னும் பயனிலைக்கு எழுவாய் பணி. பாம்புகள் சேவல் கூவ அஞ்சுதல்; "மிகு பணிகள் வலிமையொடு கடினமுறவரில் அவைகளைக் கண்ணைப் பிடுங்கி உடல்தன்னைப் பிளந்து சிறகைக் கொட்டி நின்று ஆடுமாம்". (சேவல் விருத்தம் 1). **இடம் உற்ற இராசிகள்** - ஆகாயத்தில் உள்ள மேடம் முதலிய பன்னிரண்டு இராசிகள். முத்தினம் இருக்க முடியாய்: சந்திரன் ஒரு ராசியில் இரண்டே கால் நாள் தான் இருப்பான், அதாவது ஒன்பது நட்சத்திர பாதங்கள். அதையே மூன்று நாள்கள் கூட நிலையாகத் தங்க முடியாதவன் என இழிவு தொனிக்கக் கூறுகிறார். ஈராறு சமயம் அகச்சமயம் ஆறு புறச்சமயம் ஆறு ஆகப் பன்னிரண்டு மதங்கள். **நடம் உற்ற மேகம்** - அசைந்து இடம்பெயர்தலை உடைய கார்க்குலங்கள். **முற்படர்வுற்று** - எதிரே படர்ந்து. சம்பந்தாண்டானின் போட்டியால் திருவருணைத் தூணில் அருணகிரியார் வரவழைத்த முருகப் பெருமானைக் கண்ட பிரபுடதேவ ராயன் தன் பார்வையை இழந்தது வெளிப்படை. ஒப்பு : "கற்றையாம் கிரணங்கள் ஏழ்திரையும் துளைத்து ஒளிரக் கண்டான் அன்றே" (புலவர் புராணம் 1117) **அடம் உற்றிடேல்** - பிடிவாதம் பிடிக்காதே. **பாக்கியம்** - நல்ஊழ்.

## *(பன்னிரு சீர் விருத்தம்)*

**தானம்**

மழைக் கும்பு அணை சந்தனப் பொதியை
  மலைக் கோமானை ஒத்த அருள்
  மகிமை படைத்த தவப்பெரியோர்
  மனத்தை அனல் சார் மெழுகு என்னக்
குழைக்கும் சிலம்பு ஆர் திருவடிதோய்
  குமரப் பெருமான், கருணை உருக்
  கொண்ட குழகன், கூவிடல் முன்
  குயிற்று தவமோ? அலது அவன்உள்

தழைக்கும் தயவின் பெருக்கமதோ?
சாற்றும் இரு சம்பந்தம் ஒத்த
தன்மை நிறைவோ? ஏது எனினும்
தக்க பயனைத் தர வலிதில்
அழைக்கும்படி எய்தியது; விரைந்து
ஆடவாராய் அம்புலியே!
அணிதோய் சிரவை அப்பனுடன்
ஆட வாராய் அம்புலியே! 6

**மழைக்கும்பு அணை** - மேகக் கூட்டங்கள் பொருந்தியதும். **சந்தன** - சந்தன மரங்கள் நிறைந்ததும் ஆகிய. கோமான் என்றது அகத்தியரை. **அனல் சார்** - நெருப்பை அடைந்த. குழைக்கும் திருவடி, சிலம்பு ஆர்திருவடி எனத் தனித்தனி இயையும். **குழகன்** - இளம்பருவத்தன். **கூவிடல்** - அழைத்தல். **குயிற்று** - செய்துள்ள. **உள் தழைக்கும்** - (முருகப்பெருமானின்) மனத்தில் ஊற்றெடுக்கும். **தயவு** - கருணை. **சாற்றும்** - சொல்லப்பட்ட. **இரு** - (சந்திரனின் தவம், முருகனின் கருணை ஆகிய) இரண்டின். **சம்பந்தம்** - இணக்கம். **ஏது எனினும்** - எதுவாக இருந்தாலும். **அணிதோய்** - அழகு நிறைந்த. **அப்பன்** - எந்தையாகிய தண்டபாணிக் கடவுள்.

அனந்தன் உன்பேர் புகலில் நடுங்கு
ஆற்றல் பெறலாம்; அயன் உளத்தில்
அறியாக் குடிலைப் பொருள்(ச்) சிறப்பை
அறியும் உபதேசம் பெறலாம்:
கனம் தங்கிய மெய்ச் சித்தி எட்டும்
கண்டோர் எட்டும்படி தரலாம்;
கதிர்க் கோடீரத்து உன்னை உறக்
கட்டும் சிவன் ஒத்து அவிர்ந்திடலாம்;
புனம் தங்கு இயல் சீர்க் குறக்கொடியைப்
போன்ற பெரும் பாக்கியம் உற்றாய்;
புகன்றது அன்றி, உறு சொல்லும்
பொருளும் கடந்த பெருநலங்கள்

அனந்தம் உறலாம்; வல்விரைவாய்
ஆட வாராய் அம்புலியே!
அணிதோய் சிரவை அப்பனுடன்
ஆட வாராய் அம்புலியே! 7

**அனந்தன்** - ஆதிசேடன். **புகலில்** - சொன்ன மாத்திரத்தில். **அயன்** - பிரமன். **குடிலைப்பொருள்** - பிரணவ மந்திரத்தின். அருத்தம். **கனம்** - பெருமை. **சித்தி எட்டும்** - அணிமா முதலான அட்ட சித்திகளையும். **கண்டோர் எட்டும்படி** - உன்னைப் பார்ப்பவர்களும் அடையுமாறு, நீ பெறுவது மட்டுமல்லாமல் பிறருக்கு வழங்கும் வல்லமையும் பெறலாம் என்றவாறு. **கதிர் கோடீரத்து** - ஒளியை உடைய சடையின்கண், முருகப்பெருமான்பால் உபதேசமும் சித்து வல்லமையும் பெற்றால் சிவபிரானுக்கு நிகர் ஆகிவிடுவாய் என்றவாறு. **புனம்தங்கு** - தினைப்புனத்தில் இருக்கும். **குறக்கொடி** - வள்ளி. முருகப்பெருமான் வள்ளியை விரும்பி அழைத்து விளையாடியது போல் உன்னையும் அழைக்கிறார் என்றபடி. **புகன்றது அன்றி** - இதுவரை கூறப்பட்டது மட்டும் அல்லாமல். **அனந்தம்** - எல்லையற்று, மிகப்பலவாக. **வல்விரைவாய்** - மிக சீக்கிரமாக, ஒருபொருட் பன்மொழி.

## *(வண்ண விருத்தம்)*

### தண்டம்

தானன தாந்தன தனதன தந்தன
தானா தந்ததனா

வாரணம் ஊர்ந்திடு மகபதியும் திசை
வாய்தோய் உம்பருமே
மாசினம் மூண்டு பொன் மலையின் முயன்றிடு
மா போர் கண்டிலையோ?
நாரதர் தாம் புரி மகமிசை வந்து தென்
நாடு ஆள் அந்தகனார்
நாண் உற வீம்பு செய் தகரில் இவர்ந்து அதை
நானா வென்றியில் நீள்

பேர் அடல் ஓய்ந்திட, முனம் விடுகின்றது ஓர்
பீடு ஓர்கின்றிலையோ?
பேசும் இனோன்புடை இகல் என வந்திடு
பேர் ஆர் உய்ந்தனரே?
மாரணம் ஆம் கதி அமைகிலை; கந்தன்முன்
வாவா அம்புலியே!
வான் அணை கான்பொலி சிரவையின் எந்தைமுன்
வாவா அம்புலியே! 8

**வாரணம் ஊர்ந்திடு மகபதி** - ஐராவதம் என்னும் யானையைச் செலுத்துகின்ற இந்திரன். **திசைவாய் தோய் உம்பருமே** - எட்டுத்திக்குகளிலும் உள்ள திக்குப் பாலகர்களும். இந்திரன் முதலிய தேவர்கள் மேருமலையில் முருகப்பெருமானோடு போர் செய்து தோற்றது கந்தபுராண உற்பத்திக் காண்டத்தின் திருவிளையாட்டுப் படலச் செய்தி. **மகமிசை** - யாகத்தின்கண். **தென்நாடு ஆள் அந்தகனார்** - தென்திசைக் காவலன் ஆகிய இயமனும், உயர்வு சிறப்பும்மை விரிக்க. **நாண் உற** - வெட்கப்படும்படி. **வீம்பு செய்** - அடாவடித்தனம் புரிந்த. **தகரில் இவர்ந்து** - ஆட்டுக்கடாவின் மேல் ஏறிச் செலுத்தி. **நானா வென்றியில்** - (தான்பெற்ற) பலவகையான வெற்றிகளாலும். **பேர் அடல்** - பெரிய வலிமை. **முனம்** - முற்காலத்தில். **பீடு** - பெருமை. **ஓர்கின்றிலையோ** - அறிய மாட்டாயா. **பேசும்** - பலராலும் புகழப்படுகின்ற. **இனோன்புடை** - இந்த முருகப்பெருமான்பால். **இகல் என** - பகைவன் என்று. **மாரணம் ஆம் கதி** - சாகின்ற நிலை. **வான் அணை கான்பொலி** - ஆகாயத்தை அளாவுகின்ற சோலைகள் விளங்குகின்ற, அணை கான் வினைத்தொகை.

தத்தத் தனதன தத்தத் தனதன
தானா தந்ததனா

கொற்றக் கருவம் மிகப் பெற்றிடும் விதி,
கூகா என்று கண்ணீர்
கொட்டக் கறை நனி சொட்டச் சிறையிடு
கோள் ஆய்கின்றிலையோ?

சுற்றப் பரிவொடு சுற்றித் திரிதரு
தோள் நேர் தம்பியர் சீர்
துப்பு உற்றிட உணரப் பெற்றிலை மதி
சோரா நின்றனையே!
பற்று அற்புத அருள் மிக்கு(த்) தனம்இசை
பால் ஈயும் தகையார்
பட்சத்தினை உள் மதித்துத் தயைஎதிர்
பாரா நின்றனன்; ஆல்
மற்று அப்படி உள் நினைத்துக் கடிதில்முன்
வாவா அம்புலியே!
வைப்புச் சிரவை நகர்க்குத் தலைவன் முன்
வாவா அம்புலியே! 9

**கொற்றக் கருவம்** - (முதல்தேவர் மூவரில் முதல்வன் என்னும்) தலைமை பற்றி வந்த செருக்கு. **விதி** - பிரமன். **கறை** - இரத்தம். **கோள்** - துன்பம். **தோள் நேர் தம்பியர்** - சொந்தக் கைகள் உதவுவதைப் போல உதவும் சகோதரர்கள், இங்கு நவவீரர். **சீர்** - பெருமை, இங்கு வீரம். **துப்பு உற்றிட** - அறிவில் பதியும்படி. பெற்றிலை என்றது பெறாதவன் ஆகி என எச்சமாக நின்றது, முற்றெச்சம். **மதிசோரா** - அறிவு இழந்து. **தனம் இசை பால்** - முலைப்பால். **ஈயும் தகையார்** - கொடுத்த தன்மையர், இவர்கள் கார்த்திகை மாதர், சந்திரனின் மனைவியர். **பட்சத்தினை** - அன்பினை. **உள் மதித்து** - மனத்தில் கருதி. **தயை எதிர்பாரா நின்றனன்** - நீ கருணையோடு வருவாய் என எதிர்நோக்கி இருக்கிறான். ஆல் அசை. மற்று மொழிமாற்றத்தின்கண் வந்தது. **அப்படி** - முருகனைப் போலவே. **கடிதில்** - விரைவில். **வைப்பு** - அடியார்களுக்குக் கருவூலம் போன்ற. "வைத்தநிதிபோல் நாடி நித்தம் அடியார் வாழ வைத்தபடி மாறாத பெருமாளே" *(1220)* என்பார் அருணகிரிநாதர்.

தானன தந்தன தனதன தந்தன
தானா தந்ததனா

தானவன் என்று இசை பெயரை அமைந்தவர்
தான், வீண் வம்பு செய்தே
சாதல் பொருந்தினும், அமரர் இனம் பெறு
சார்பாய், அன்றியும் நீள்

**வானம் இசைந்திடு கதிர்களில் ஒன்று என**
**வாழ்வாய்! நின் சதிஆம்**
**மாதர் அமங்கலம் உறுவர்; களங்கம் உள்**
**மாறா உன்தகை போல்**
**மேல் நவில் விண் புவி மருவினர் விண்டு இரை**
**மீளா நிந்தையது ஆம்;**
**வீர அகந்தையின் மகிமை இழந்திடல்**
**வீறோ? விந்தையதோ?**
**மானம் இவர்ந்தனை எனில், இவண் எந்தைமுன்**
**வாவா அம்புலியே!**
**மாதவர் அன்புசெய் சிரவை கொள் கந்தன்முன்**
**வாவா அம்புலியே!** 10

சந்திரனைத் தானவர்களோடு தொடர்புபடுத்திக் கூறிய செய்தி விளங்கவில்லை. இவ்வாசிரியர் தம் பத்திராசல இராமச்சந்திரன் பிள்ளைத்தமிழிலும், "இராக்கதர் தமக்கு உறவனா நின்று தானவன் எனும் பெயர் படைத்து" (அம்புலிப்.5) என்கிறார். **இசை** - தமக்குப் பொருந்திய. **சாதல் பொருந்தினும்** - (அசுரர்கள்) மாண்டாலும். வானம் இசைந்திடு கதிர்கள் என்றது சூரிய சந்திரர்களை. **சதி ஆம் மாதர்** - மனைவிகள் ஆகிய மகளிர், சந்திரனுக்கு இருபத்தேழு மனைவியர். **அமங்கலம் உறுவர்** - மங்கல நாண் இல்லாதவர் ஆவர். **களங்கம்** - கறை. **விண் புவி மருவினர்** - ஆகாயத்தில் வாழ்கின்ற தேவர்களும் நிலத்தில் வாழும் மனிதர்களும். **விண்டு இரை** - சொல்லி எழுப்பும் ஒலி. **மீளா** - தீராத. **நிந்தையது** - இகழ்ச்சி, அது பகுதிப்பொருள் விகுதி. தன் அழைப்பை ஏற்றுச் சந்திரன் வராததற்காக முருகப்பெருமான் அவனைத் தண்டித்து விட்டால் நீங்காத பெரும் அவமானம் ஏற்படும் என்பது கருத்து. **வீர அகந்தையின்** - வீம்பின் காரணமாக. **மகிமை** - இயல்பாக இருக்கின்ற பெருமையை. **வீறோ** - பெருமை ஆகுமோ, வினா எதிர்மறை. **விந்தையதோ** - அறிவுடைமையா, அல்ல என்றவாறு; **மானம் இவர்ந்தனை எனில்** - உன்னுடைய மரியாதையை விரும்புவாயாகில். ஆகாயத்தை வாகனமாகச் செலுத்தும் பெருமை உடையவன் என்றால் என்பது தொனி. **இவண்** - இப்போதே.

## 8. சிற்றில்(ப்) பருவம்

### *(பன்னிரு சீர் விருத்தம்)*

பெற்ற பொருள் மிக்கு உயர் அருமை
பெருமை உடையது ஆனாலும்,
பேணி அமையாது, இழிவு ஆகும்
பெறாத பொருளே விழைந்து உவக்கும்
குற்றம் உயிர்கட்கு உற்று அமையும்
குணம் என்று இசைப்பார் மெய்ஞ்ஞான
குரு என்று எவரும் போற்றும் உன்பால்க்கு
ஊடல் முறையோ? பற்று அமைந்த
சுற்றம் விடுத்து உன் பதத் துணையே
துணையாக் கருதித் தவம் முயலும்
தூய அடியார்தமை இன்பத்
துறை தோய்த்து, உற்ற வல்வினைகள்
செற்ற கமலத் திருவடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
செல்வச் சிரவைப் பதிமருவும்
சேந்தா! சிற்றில் சிதையேலே! 1

**பேணி அமையாது** - பெற்ற ஒருபொருளைப் பாதுகாத்துக் கொண்டு மன அமைதி பெறாமல். **விழைந்து** - விரும்பி. **உவக்கும்** - அதனால் மகிழ்ச்சி கொள்ளும், அம்மகிழ்ச்சி பெறாததைப் பெறத் தூண்டும். **இசைப்பார்** - கூறுபவர்களின். இங்கு சுவாமிகள் சாந்தலிங்கரின்,

"அரிதுபெற்றிடினும் பெற்ற தன் விருப்பம்
அற, பெறாதன விரும்பு உயிர்கள்
தெரியகிற்கிலம்" (14)

என்னும் வைராக்கிய தீபச் செய்யுளை நினைவு கூர்கிறார். இக்கருத்தைப் புலவர்புராணம் உடையாரும்,

"பெற்றதனைக் கீழாக்கிப் பெறாததனை மேலாக்கும்
குற்றம்உயிரின் குணம் என்று ஓர் பாசுரத்தில்
சொற்றனன்" (1486)

எனக் குறிப்பிடுகிறார். முருகப்பெருமான் ஞானிகளின் குருநாதன் என்றபடி. **உன் பாற்கு** - தேவரீரின் இயல்பிற்கு. **ஊடல்** - பகைமை காட்டுதல். **முறையோ** - நியாயம் ஆகுமா. பகைத்து எம் சிற்றிலைச் சிதைக்கலாமா என்றவாறு. **பற்று** - நீங்காத ஆசை. **பதத்துணையே** - துணைப்பதமே என மாறுக, இரு திருவடிகளையே. **செற்ற** - அழித்த. **சிற்றில்** - பெண் குழந்தைகள் விளையாட்டாக மணலில் கட்டும் சிறிய வீடு.

**அம்பொன் சபையில் பேர் அருளால்**
**ஆக்கல் முதலாம் ஐந்தொழிலும்**
**ஆற்றும் ஆடல் புரிபரமன்**
**அங்கி நுதல்(க்) கண் அருள் மதலாய்!**
**கொம்பு ஒற்றை உளான் உவக்கும் இளம்**
**குமரா! அமராவதி புரந்த**
**கோவே! கதிர் வேல் படை புனை எண்**
**குணனே! அணிதோய் மணநாடா!**
**வம்பு ஒற்றாது உன் சந்நிதிக்கே**
**வாழை அடிதோய் வாழை என**
**மாறா அடியேம் பெற்ற பெரு**
**வாழ்வுஆய் இன்ப வைப்பு ஆகும்**
**செம்பொன் கமலச் சீரடியால்**
**சிறியேம் சிற்றில் சிதையேலே!**
**செல்வச் சிரவைப் பதிமருவும்**
**சேந்தா! சிற்றில் சிதையேலே!** 2

**அம்பொன்சபை** - கனகசபை, பொன்னம்பலம். ஐந்தொழிலும் ஆற்றும் ஆடல்:

"தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம் முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு" (உண்மை விளக்கம் 36)

என்பது சாத்திரம். **அங்கி நுதல்கண்** - நெருப்பு ஆகிய நெற்றிக் கண். **மதலாய்** - மைந்தனே. ஒற்றைக் கொம்பு என மாறுக. **அமராவதி** - தேவர்களின் தலைநகரம். **புனை** - அணிந்துள்ள. **எண்குணனே** - போற்றப்படுகின்ற சகல கல்யாண குணங்களையும் பெற்றுள்ள பரம்பொருளே, இனிப் பரிமேலழகர் சொல்லும்படி, "தன்வயத்தன் ஆதல், தூய உடம்பினன் ஆதல், இயற்கை உணர்வினன் ஆதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேர் அருள் உடைமை, முடிவு இல் ஆற்றல் உடைமை, வரம்பு இல் இன்பம் உடைமை" ஆகிய எட்டுக் குணங்கள் எனினும் ஆம். (திருக்குறள் 9 உரை). **அணிதோய்** - அழகு பொருந்திய. **மண நாடா** - கொங்கு நாட்டின் தலைவனே. **வம்பு ஒற்றாது** - தீய செயல்களில் ஈடுபடாமல். **மாறா** - மாற்றம் இல்லாத. **இன்ப வைப்பு** - உவகையைத் தரும் பொக்கிஷம். **கமலச் சீரடியால்** - தாமரையின் சிறப்பைப்பெற்ற பாதங்களால்.

கூடி உவக்கும் குஞ்சரி, உள்
குன்றி வருந்த, குன்றிடம் தோய்
குறவர் வளர்த்த மடப்பாவை
கோலம் கண்டு கண்டு உருகி,
நாடி உவக்கும் கள்வன் என
நவின்று பழித்து உள் இகழ்ந்தேமா?
ஞான மணியே! பரமகுரு
நாதா! என்று நயந்து, அன்பால்
பாடி, உவக்கும் கௌமாரப்
பத்தர் தநு ஆதிகளை உப்புப்
பதுமை போலக் கரைத்து ஒடுக்கும்
பரமானந்தப் பழங்கடலே!
தேடி உவக்கும் திருத்தாளால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
செல்வச் சிரவைப் பதிமருவும்
சேந்தா! சிற்றில் சிதையேலே! 3

**கூடி உவக்கும்** - கலந்து மகிழும். **குஞ்சரி** - தெய்வயானை. **உள்குன்றி** - மனம் நொந்து. **மடப்பாவை** - மடப்பத்தை உடையவளும் சிலைபோன்றவளுமாகிய வள்ளியின். **கோலம்** -

அழகு. **நாடிஉவக்கும்** - தேடிச் சென்று மகிழும். **கள்வன்** - அகப்பொருளின் களவியலில் ஈடுபட்டவன், திருடன். இதே கருத்தை இவ்வாசிரியர் தம் குருந்தமலை குழந்தை வேலாயுதசுவாமி பிள்ளைத்தமிழிலும் (சிற்றில்.4) கூறியுள்ளார். **நவின்று** - சொல்லி. **நயந்து** - மனதார விரும்பி. **தநு ஆதிகளை** - உடம்பு முதலியனவற்றை. அதாவது மனம், மொழி, மெய்களை. **உப்புப்பதுமை** - உப்பினால் செய்யப்பட்ட பொம்மை. **தேடி உவக்கும்** - அடியார்கள் முயன்று நாடி மகிழ்கின்ற.

**கெட்டி மணியே! வான் அளக்கும்**
**கிரியில் பெருகும் எல்லை இல்லாக்**
**கிருபைக் கடலே! கேகயமேல்**
**கிளரும் பவள ஒளித்திரளே!**
**மட்டுஇல் அருள் மெய்த் திருமேனி**
**வயங்கும் உமை நல் நீராட்டி,**
**மணிப் பொன் சிலம்பு ஆதிய பூட்டி,**
**மணம் ஆர் களபம் பரிமளங்கள்**
**கொட்டி, கண்டு, உள் உவகை மிகக்**
**குளிர்ந்த வடிவம் எங்கள் மனம்**
**கொள்ளை கொள்ளக் கொடுத்து, அடியேம்**
**குற்றப் புழுதி பெறில் இறைவி**
**திட்டி உறவும்படும்; அதனால்**
**சிறியேம் சிற்றில் சிதையேலே!**
**செல்வச் சிரவைப் பதிமருவும்**
**சேந்தா! சிற்றில் சிதையேலே!** 4

**கெட்டி மணியே** - ஓர் இரத்தினத்திற்குரிய நலங்கள் யாவும் செவ்வையாக அமைந்துள்ள இரத்தினம் போன்றவரே. **வான் அளக்கும் கிரியில்** - ஆகாயமளாவிய மலைகளின்கண். **கிருபை** - கருணை. **கேகயமேல் கிளரும்** - மயில்வாகனத்தின்மேல் ஒளிர்கின்ற. **மட்டுஇல்** - எல்லையற்ற. **வயங்கும்** - விளங்குகின்ற. **உமை** - பார்வதி. **மணிபொன் சிலம்பு ஆதிய** - இரத்தினங்கள் இழைத்த தங்கத்தால் ஆகிய கால்சிலம்பு முதலிய அணிகலன்களை. **பூட்டி** - அணிவித்து. **மணம் ஆர்** - வாசனை பொருந்திய. **களபம்** - சந்தனக் கலவை. **பரிமளங்கள்** - மணப்பொருள்கள். **கொடுத்து** - (முருகப்பெருமானாகிய நீ

எங்களுக்கு) வழங்கி. **குற்றப் புழுதி** - இழிந்த மண் ஆகிய தூசி. நறுமணத்தைக் கொடுத்துப் புழுதியைப் பெற்றுக் கொள்வதாகக் கூறும் இது பரிவர்த்தனை அணி எனப்படும். **இறைவி** - உமை. **திட்டியுறவும் படும்** - வசுவுச்சொல்லைச் சொல்லவும் கூடும், பார்வதி கந்தனைத் திட்டமாட்டாள் ஆதலால் உம்மை கொடுத்துக் கூடும் என்றார்.

குறிப்பு : குளிர்ந்த வடிவம் (தேவரீரின் திருஉருவத்தை) எங்கள் மனம் கொள்ளக் கொடுத்து (தியானம் செய்ய வைத்து) அடியேம் குற்றப் புழுதி பெறில் (எங்களுடைய தீயவினை, அறியாமை போன்ற தீயவைகளை - சீவபோதத்தை - ஏற்றுக் கொண்டால்) இறைவி திட்டி உறவும் படும் (சத்தியின் பார்வை எங்கள் மீது பதிந்தாலும் பதியும் - சந்திநிபாதம் ஏற்படும்) என்னும் அரிய சித்தாந்த உண்மை தொனியாக அமைந்துள்ளது.

"தந்தது உன்றன்னைக் கொண்டது என்றன்னை" (திருவாசகம்), "என்னை எடுத்து விழுங்கி எனக்கே தன்னை அளித்தருள் தத்துவ நாதன்" (இளசைப்பதிற்றுப்பத்தந்தாதி 42) என்பன இங்கே சிந்திக்கத்தக்கன.

தேவர்க்கு இடையூறு, இயற்றியதைத்
தீர்க்கும் பொருட்டால் நீ அணைய,
செந்நீர்ப் புலத்தில் உன்னது அருள்
சேவை தரிசித்து, உள் உருகி,
ஆவல் பொருந்தும் மாதவத்தால்
அவிர் வாகனம் கேதனம் ஆகும்
ஆண்மைச் சூரன் பாக்கியத்தை
அடியேம் பொருந்தத் திருவருளால்,
மூவர்க்கு அரிய நீ எளியேம்
முன் வந்து அருளும் உன் மகிமை
முதிர்ச்சி அறியேம்; உன் உபய
முளரித் தாள் வெம்பிடச் சகியேம்
சேவல்(க்) கொடியாய்! கொடி இடையேம்
சிற்றில் சிதையேல் சிதையேலே!
செல்வச் சிரவைப் பதி மருவும்
சேந்தா! சிற்றில் சிதையேலே! 5

**அணைய** - அவதாரம் புரிய. **செந்நீர்ப்புலத்தில்** - இரத்தம்ஓடும் போர்க்களத்தின்கண். **அருள்சேவை** - திருவருள் மயமாகிய காட்சியை. **தரிசித்து** - பார்த்து. **வாகனம் கேதனம்** - ஊர்தியாகிய மயிலும் கொடியாகிய சேவலும், உம்மைத்தொகை. ஆண்மைச்சூரன் என்னும் சொல்லாட்சி மிகுந்த பொருட் செறிவை உடையது. அசுரன் தன்பெருவலிமையால் செருக்குற்று முருகன்பால் பகைமை பாராட்டிய மானவீரத்தைவிட, இறைவனின் பரத்துவத்தை உணர்ந்து கீழ்ப்படிந்த ஞானவீரம் மிக மேம்பட்டது என்பது கருத்து. **மூவர்க்கு அரிய** - பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மூன்று முதன்மைத் தேவர்களாலும் எட்ட முடியாத தேவரீர். **மகிமை** - எளிவந்த தன்மை ஆகிய பெருமையின். **உபய முளரித்தாள்** - இரண்டு ஆகிய தாமரைத் திருவடிகள். **வெம்பிட** - (புழுதி அளைந்து) வாடுவதை. **கொடி இடையேம்** - பூங்கொடியைப் போன்ற மெலிந்த இடுப்பினை உடைய இளம் பெண்களாகிய நாங்கள்.

### *(இரட்டையாசிரிய விருத்தம்)*

கொன்று அருந்தும் கொடியர் நன்று அருந்தும் குணம்
கூடவும், கொடு நாத்திகக்
கூற்ற முடைவாய் உடையர் கூற்றம் எனவே கண்டு
குமையவும், சுமைகொள் பாவக்
குன்று அருந்தும் போதம் முன் தரும் துன்ப வாய்க்
கோளர் இழிவாளர், "உயர்வு ஆம்
கோயில்இலை; புகும் முத்தி வாயில் இலை" என்றே பொய்
கொட்டு ஒலித் துட்டர் ஆனோர்,
மின் தரும் தரணி இயல்பு என்று அருந்தவம் முயலும்
வித்தகர்கள் பத்தர் ஆகி
விரவவும், பத்திநெறி பரவவும், புரிய உனை
வேண்டி மிக ஏத்தெடுப்பேம்;
சின்தரும் படிவினுடன் ஒன்று முன் தந்தது ஒரு
சிற்றில் சிதைத்திடேலே!
திரவைப்பு அதில்குலவு சிரவைப் பதிக்குமர!
சிற்றில் சிதைத்திடேலே! 6

**கொன்று அருந்தும்** - விலங்குகளைக் கொன்று அவற்றின் ஊனைச் சாப்பிடுகின்ற. **நன்று** - (இறைச்சி அல்லாத) நல்ல தாவரப்பொருள்களை. **நாத்திக கூற்ற முடைவாய் உடையர்** - கடவுள் மறுப்புச் சொற்களை உடைய நாற்றம் மிக்க வாயை உடையவர்களை. **கூற்றம்** - இயமன். **குமையவும்** - குமைக்கவும் என்ற பொருளில் ஆட்சி, அழிக்கவும் என்றபடி. **சுமைகொள்** - மிகுந்த பாரம் ஆகிய. **பாவக்குன்று** - தீவினை ஆகிய மலையை. **போதம் முன் தரும்** - (தீய) அறிவைக் கற்பிக்கின்ற. **துன்ப வாய்க்கோளர்** - கேட்பவர்களுக்கு கெடுதியைச் செய்யும் சொற்களைப் பேசுகின்ற தீயவர். **இழிவாளர்** - கீழ்மை உடையோர். **இலை** - இல்லை. **கொட்டு** - பொய்யான வார்த்தைகளை மிகுதியாகக் கொட்டுகின்ற. **ஒலி** - முழக்கத்தை உடைய. **மின்தரும் தரணி இயல்பு** - மின்னலைப் போன்று நிலையாமையை உடைய உலகத்தின் இயற்கைக்குணம். **வித்தகர்கள்** - ஞானிகளின். கோளர், இழிவாளர், துட்டர் ஆனோர் ஆகிய இவர்கள் எல்லாம் ஞானிகளுக்குப் பத்தர்கள் ஆகி விரவ என்க. **புரிய** - இந்நிகழ்வுகளை எல்லாம் உண்டாக்கித்தர. **சின்தரும் படிவினுடன்** - ஞானத்தை உண்டாக்கும் கீழ்ப்படிதலுடன். **முன் தந்தது ஒரு சிற்றில்** - ஏற்கெனவே கொடுக்கப்பட்டுள்ளதாகிய ஒரு சிறிய வீடு, மனித உடலை.

குறிப்பு : இந்தப் பிறவியில் நன்னெறியில் ஒழுகி, ஞானம் பெற முயன்று, இறைவனை இறைஞ்சி நிற்கும் நிலையில் இந்த உடலை அழித்துவிட வேண்டாம் என வேண்டிக் கொள்ளுதலே சிற்றிற் சிதையேலே என்பதன் குறிப்புப்பொருள் எனக் கூறப்படும். இவ்வாசிரியரின் பத்திராசல இராமச்சந்திரன் பிள்ளைத்தமிழ் சிற்றில் பருவத்தின் எட்டாம் செய்யுளைக் காண்க.

மரு அலர்க் கும்பு செறி பருவதத்து உம்பர் மிசை
மாட்சி பொலி காட்சி நிறைவாய்
வாய்ந்த நின் கோயிலிடை தோய்ந்த சிங்கார அருள்
மங்களச் சகுண சேவை
உரு அலர்க் கண்களினுள் மருவிடக் கண்டு, மொண்டு,
உள்ளம் அனல் மெழுகில் உருக,
ஊற்றில் எழும் அன்பை வெளி ஊற்றிடுதல் போல விழி
உந்து நீர் அருவி மூழ்க,

சரு வருக்கத்தினையும் அருவருக்கச் செய்திடு
சாரம்ஆய், ஆரம்ஆய் நீ
தரித்திடு புகழ்த்திரள் விரித்திடும் படி அருள் செய்
சருவ சற்குரு ஆகும் உன்
திருவருள் சீர்த்தி நிறை உரு வகித்து ஆடும்முன்
சிற்றில் சிதைத்திடேலே!
திர வைப்பதில் குலவு சிரவைப் பதிக்குமர!
சிற்றில் சிதைத்திடேலே! 7

**மரு அலர் கும்பு செறி** - நறுமணம் மிக்க மலர்களின் கூட்டம் அடர்த்தியாக உள்ள. **பருவதத்து உம்பர் மிசை** - மலைகளின் மேல், உருபுமேல் உருபு. குறிஞ்சி நிலத்தில் என்றபடி. **மாட்சி** - மேன்மை. **சிங்கார** - நன்கு அலங்கரிக்கப்பட்ட. **மங்கள** - நன்மை பயக்கும்படியான. **சகுண சேவை** - திருவுருவக்காட்சி. **உரு அலர் கண்களினுள்** - அழகிய மலர்போன்ற எம் விழிகளில். "தொண்டர் கண்டு அண்டி மொண்டு உண்டிருக்கும்" (92) என்பது கந்தரலங்காரம். **ஊற்றில்** - நீர் ஊற்றைப்போல. **விழிஉந்து நீர்** - கண்ணீர். **சரு வருக்கத்தினையும்** - உணவு வகைகளையும். **அருவருக்கச் செய்திடு** - வெறுக்கும்படி புரிகின்ற. **சாரம் ஆய்** - இனிமை மிக்கது ஆகி. **ஆரம் ஆய்** - பூமாலையைப் போல். **தரித்திடு** - அணிகின்ற. **சருவ சற்குரு** - அனைத்து அடியார்களுக்கும் நல்வழி காட்டுகின்ற ஞானதேசிகன். **சீர்த்தி நிறைஉறு** - பெரும் புகழ்மிக்க தோற்றத்தை. **வகித்து** - தாங்கி. **ஆடும் முன்** - அருட்சித்து ஆடல்களைச் செய்வதற்கு முன்பே.

குறிப்பு : முன் பாடலின் குறிப்பைக் காண்க.

***(வண்ண விருத்தம்)***

தத்தத் தனதன தத்தத் தனதன
தத்தத் தனதானா

வித்தக் குவியலை இச்சித்து உயிர்நிகர்
வெட்கத் தகை தீர்வார்
வெற்புக் கனதனம் நச்சி, தனது உரம்
விட்டுத் தளர்வால் நீள்

பித்தப் பொலிவுஇசை சித்தத்து எழு நசை
பிய்த்து, புவி மீது ஆர்
பிக்கு அற்றிடு சுக மெய்த் தத்துவ நிலை
பெற்று, உத்தமசீர்சால்
சித்தக் கணமொடு பத்திப் பொலிவினர்
செப்பு அற்புத நீர் தோய்
சித்திப் பொலிவுடன், முத்தித் தகை அருள்
சித்தப் பெருமானே!
தித்தக்குரவு கடப்புப் புனைபுய!
சிற்றில் சிதையேலே!
தெற்றிச் சிரவை நகர்ச் சற்குருபர!
சிற்றில் சிதையேலே! 8

**வித்தக் குவியலை இச்சித்து** - செல்வத்தின் மிகுதியை விரும்பி. **வெட்கத் தகை** - நாணம் ஆகிய பண்பினை. **தீர்வார்** - விட்டுவிடுபவர்களாகிய பொது மகளிரின். **வெற்பு கனதனம் நச்சி** - குன்றுகளைப் போன்ற பெரிய நகில்களின்மேல் ஆசை கொண்டு, **உரம் விட்டு** - கவுரவத்தை இழந்து. **பித்தப் பொலிவு இசை** - அறிவு மயக்கத்தின் அழகு பொருந்திய, பொலிவு என்றது இகழ்ச்சிக் குறிப்பு. **சித்தத்து எழு நசை** - உள்ளத்தில் ஏற்படுகின்ற காதலை. **பிய்த்து** - கிழித்து, அழித்து என்றபடி. **புவிமீது ஆர் பிக்கு அற்றிடு** - உலகியல் சிக்கல்கள் நீங்கிய. சுகமெய் என்பதை மெய்ச்சுகம் என மாறுக, நிலையான இன்பம் என்றபடி. **தத்துவ நிலை** - மெய்ஞானம். **சித்தக்கணமொடு** - சித்தர்களின் கூட்டத்துடன், அத்துச்சாரியை கெட்டது. **செப்பு** - சொல்லுகின்ற. **அற்புத நீர்தோய்** - அதிசயத் தன்மை பொருந்திய. **அருள்** - அருள்பவராகிய. சித்தப்பெருமான் என்பதை வண்ணச்சரபர் கூறும், "திருவருள்க் குகேசன் ஆம் சிவோக ஞான சித்தனே" (பழனித்திருவாயிரம், கலம்பகம் 21) என்னும் பொருளில் கொள்க. தித்தக் குரவு - நறுமணம் மிக்க குராமலர்கள். **கடப்பு** - கடம்பு என்பதன் வண்ணம் நோக்கிய வலித்தல் விகாரம். **தெற்றி** - உயரமான அலங்கார மண்டபத்தை உடைய.

தனதன தானன தனதன தானன
தத்தத் தனதானா

பரவு அணி மாதவம் நிறை கவுமார மெய்
பற்று உத்தம மேலோர்
பத துகளே கதி தருவது எனா, அணி
பத்தித் துறை ஆழ்வார்
குரவு அணி ஆர் புயமிசை மலர் மாலை
குயிற்றிக் கனிவோடே,
குளிர் திருநாம மறை சொலி நாண்மலர்
கொட்டு அற்புத நீரார்,
அரவு அணியோன் மலர் அயன் நெடுமாலின் அ -
கத்து உய்த்துணர் சீர்சால்
அளவுஅறு மேன்மைகள் துதிசெய்து, நீர் பெருகு
அக்கத்துடன் வீழ்வார்
திர அணி நீள் சிரவணபுர நாயக!
சிற்றில் சிதையேலே!
செய வடிவேலவ! எழில் மயில் வாகன!
சிற்றில் சிதையேலே! 9

**பரவு அணி மாதவம் நிறை கவுமார மெய்பற்று** - இறைவனைப் புகழ்வது ஆகிய அழகிய பெரிய தவம் செய்வதில் முழுமை பெற்றுள்ள கவுமாரம் ஆகிய மெய்யியல் கோட்பாட்டை ஏற்றுக்கொண்டுள்ள. **பத துகளே** - திருவடித் தூசியே. **அணி** - நன்மையைத் தருகின்ற. **ஆழ்வார்** - முழுமையாக ஈடுபடுபவர். **குரவு அணி ஆர்** - குராமலர்களின் வரிசை பொருந்திய. **குயிற்றி** - அணிவித்து. **திருநாம மறைசொலி** - இறைவனின் திருப்பெயர்களாகிய மந்திரங்களை உச்சரித்து, "முருகன் அறுமுகன் என வருவன பெயர் முழுதும் இயல்கொடு பழுது அற மொழிவதும் ஒருநாளே" (திருப்புகழ் 1243) என்பார் அருணகிரிநாதர். **கொட்டு** - சொரிகின்ற. **நீரார்** - குணத்தை உடையவர்கள். **அரவு அணியோன்** - பாம்பு ஆபரணன் ஆகிய சிவபெருமான். **அயன்** - பிரமன். **அகத்து உய்த்து உணர்சீர்சால்** - உள்ளத்தில் ஊகித்துப் புரிந்து கொள்ளும் சிறப்புப்பொருந்திய.

**நீர்பெருகு அக்கத்துடன்** - கண்ணீர் நிறைந்த விழிகளுடன். **வீழ்வார்** - கீழே விழுந்து வணங்குபவர்கள், இனி மனதார விரும்புபவர்கள் எனினும் ஆம். **திர அணி நீள்** - நிலையான கூட்டம் நீண்டுகொண்டே இருக்கின்ற.

தத்ததன தத்ததன தத்ததன தானா

நித்தமும் நினைத்து மிக நெக்குருகும் மேலோர்
நிச்சய மனத்தினில் நிலைத்த முருகோனே!
சத்தம் இசை அத்தம் உறு தத்துவம் உள் ஓர்வார்
தத்தம் உடல் முற்றும் நுகர் சத்திய சொரூபா!
புத்தர் அமணர்க்கு இனிய பொக்கம் இசை நீரோர்
பொற்பு உறு சைவத்தில் அமை புத்தி அருள்வோனே!
சித்த! சிரவைக் குரவ! சிற்றில் அழியேலே!
சித்திர மயில்(க்) குமர! சிற்றில் அழியேலே!

**நித்தமும்** - நாள்தோறும். **நிச்சயமனம்** - பத்தியில் உறுதி படைத்த உள்ளம். **சத்தம் இசை அத்தம் உறு தத்துவம்** - வேதத்தில் பொருந்தியுள்ள அர்த்தத்தால் உணரப்படும் உண்மை, சந்தம் எனற்பாலது வண்ணம் நோக்கிச் சத்தம் என வலித்தது. "நால் அந்த வேதத்தின் பொருளோனே" (திருப்புகழ் 1096) என்பார் அருணகிரிநாதர். உடல் முற்றும் நுகர் என்றது சீவபோதத்தை விழுங்கி (நீக்கி) சிவபோதத்தை (பரஞானம்) அருளுகின்ற பெருங்கருணையை. "சிவபோதத்து அடங்கி உயிர் செயல் ஒன்று இன்றி அகத்து ஆய நம் போதப்பற்று நீங்கி அசைவு அற நிற்பது பேரானந்தம் ஆமே" என்னும் சிவஞான தீபமும் (உண்மை இயல்பு 97), "என்னை எடுத்து விழுங்கி எனக்கே தன்னை அளித்தருள் தத்துவநாதன்" என்னும் மாதவச் சிவஞான முனிவர் திருவாக்கும் (இளசைப் பதிற்றுப் பத்தந்தாதி 42) இங்கு சிந்திக்கத்தக்கன. **அமணர்** - சமணர்கள். **பொக்கம்** - பொய், இங்கு உண்மையல்லாத ஞானம். **நீரோர்** - தன்மை உடையவர்கள். சமணர்களைச் சைவத்திற்கு மாற்றியவர் திருநாவுக்கரசர். புத்தர்களை வென்றவர் மாணிக்கவாசகர். **சித்திர** - அழகான.

## 9. சிறுபறைப் பருவம்

### (இரட்டையாசிரிய விருத்தம்)

முக்குடையன் ஆன பெருமைக்கு உடையன் எம் அருக
மூர்த்தி என விண்டு, "கண்ட
முட்டு உடையம்; அது கேட்ட முட்டு உடையம் யாம்;" என்றும்
"முந்நாளை ஒரு நாளை ஊண்
மொக்கு உடையம் அன்று" என்றும் மிக்கு உடைய பசியினில்
முதிர்ந்து எழும் அகங்கரத்தின்
முறிதலை அகம் கொண்ட பறிதலைச் சமணர்சினம்
மூண்டிட்ட தீமுழக்கும்
இக்கு உடைய வில்லின் மதனுக்கு உடைய கொடியவ -
னிடத்து அடைக என்று அருளவே,
ஏந்தல் சகியாது இடும் முழக்கும், இழி சைனரிடை
ஏய்ந்துள முழக்கும் அறவே,
திக்குடைய சைவர்கள் முழக்கம் மிக ஆற்றும் நின்
சிறுபறை முழக்கியருளே!
சிரவைத் தலத்து இறைவ! பரவைத் தயைக் குமர!
சிறுபறை முழக்கியருளே! 1

**முக்குடையன்** - மூன்று குடைகளை உடையவன், சமணர்களால் போற்றப்படும் அருகனுக்கு மூன்று குடைகள் இருப்பதாகக் கூறப்படும்; அவை சந்திராதித்தியம், நித்தியவிநோதம், சகலபாசனம் என்பன. திங்கள் முக்குடையான் என்பார் இளங்கோவடிகள் (சிலம்பு *11:1*). **விண்டு** - சொல்லி. **கண்ட முட்டு** - (சமணர் அல்லாத) பிற சமயிகளைப் பார்த்தால் தீமை என்னும் சமணர் கோட்பாடு. **கேட்டு முட்டு** - பிற சமயத் தொடர்பான செய்திகளைக் கேட்பதால் வரும் தீமை என்னும் சமணக் கொள்கை. "மதுரையில் சைவ வேதியர்தாம் மேவலால் இன்று கண்டு முட்டுயாம்" என்றும், "என்று கூறலும் கேட்டு முட்டு யானும் என்று இயம்பி" என்றும் இவை பெரியபுராணத்தில் சுட்டப்பட்டுள்ளன. (*2581,2582*). முந்நாளை ஊண் ஒரு நாளில் மொக்கு உடையம் அன்று என்று கொண்டு கூட்டிக் கொள்க, மூன்று தினங்கள் உண்ணவேண்டிய உணவை ஒரே நாளில்

தின்கின்ற பெருந்தீனிக்காரர்கள் யாம் அல்லேம் என்றவாறு. **மொக்குதல்** - மிகுதியாக உண்ணுதல், மொக்கு - முதல்நிலைத்தொழிற்பெயர்; இங்கு சைவ அடியார்களைப் பற்றிய இகழ்ச்சிக் குறிப்பாக ஆட்சி. சமணர்கள் மிகக்குறைவாக உண்ணும் நோன்பிகள் என்பது கருத்து. **முதிர்ந்து எழும்** - மிகுதியாக வளர்கின்ற. **அகங்கரத்தின் முறிதலை அகம் கொண்ட** - (நாங்கள் நோன்பிகள் என்னும்) அகந்தையால் பின்னப்பட்டுள்ள மனத்தை உடைய. **பறிதலைச் சமணர்** - கைகளால் பிடுங்கித் தலைமுடியை நீக்கிக் கொள்ளும் சமணர்கள், சைவ நூல்களில் இச்சொல்லாட்சியைப் பரவலாகக் காணலாம். **தீமுழக்கு** - (மதுரையில் திருஞானசம்பந்தர் தங்கியிருந்த மடத்தில் சமணர்கள் வைத்த) நெருப்பின் ஆரவாரம். **இக்கு உடைய வில்லின் மதனுக்கு உடைய கொடியவனிடத்து** - கரும்பு ஆகிய வில்லினை உடைய காமனுக்கு உரிய பதாகை ஆகிய மீனைத் தன் கொடியாகப் பெற்ற பாண்டியனின்பால், கொடியவன் என்புழிக் கொடுமை வாய்ந்தவன் என்னும் ஒரு பொருளும் தொனிக்கிறது. அடைக என்று அருளியது, "பொய்யர் ஆம் அமணர் கொளுவும் சுடர் பையவே சென்று பாண்டியற்காகவே" என்னும் தேவார மொழி. *(3339)* ஏந்தல் - மன்னன், இங்கு பாண்டியன். **சகியாது** - (வெப்பத்தைப்) பொறுத்துக் கொள்ள முடியாமல். **இழி** - கீழான. **முழக்கும்** - கூச்சலும். **திக்கு உடைய** - (தமக்கு ஆதரவாகச் சிவபெருமானைப்) பெற்றுள்ள, இனி நான்கு திசைகளிலும் உள்ள எனினும் அமையும். சைவர்கள் முழக்கம் என்றது தோத்திர இசையை. **பரவைத்தயை** - தயைப் பரவை என மாறுக, கருணைக் கடலாகிய குமரனே என்றவாறு.

கா என்று உயர்ந்ததில் சோ என்று அணைந்திடும்
காற்று இசை முழக்கமுடனே,
கா என்று கூ என்று இசைத்திடும் பற்பல் புள் -
ளின் முழக்கும், கழிசின
மா என்று வந்த நாநா என்றிடும் பலபல்
வகை முழக்கும் கழியவே,
வாய்கொண்ட ஆலோல மாமுழக்கம் புரியும்
வள்ளியைக் கொண்டு, வேடர்

கோ என்று அயர்ந்து அம்மை ஓ என்ன இகல் கொண்டு
கொல் என்று மேவு பொழுதில்,
கூவு என்று உரைத்திடக் கூகூ முழக்கினில்
கொன்று, எழச்செய் கொடியுடைத்
தே என்று நின்ற இறை! நீ வென்றி மேவ, நின்
சிறுபறை முழக்கியருளே!
சிரவைத் தலத்து இறைவ! பரவைத் தயைக் குமர
சிறுபறை முழக்கியருளே! 2

**கா என்று** - சோலை என்னும் பெயரைப் பெற்று. சோ என்றது ஒலிக் குறிப்பு. முழக்கமுடனே என்புழி அத்துச் சாரியை கெட்டது. கா, கூ - பறவையொலிக்குறிப்பு. **புட்(ள்)களின்** - பறவைகளின். **கழிசின** - மிகுந்த கோபத்தை உடைய. **மா என்று** - (தினைப்புனத்தில்) விலங்குகளாக. **நாநா** - பற்பலவிதமான. **கழியவே** - அடங்கி விடும்படி. **ஆலோலம்** - குறத்தியர் பறவைகளை விரட்டும் ஓசை. **வேடர்** - (வள்ளியின் உறவினர்களாகிய) குறவர்கள். **கோ என்று அயர்ந்து** - (முருகனை) வேடர் தலைவருள் ஒருவன் என மயங்கி. **அம்மை ஓ என்ன** - வள்ளி நாச்சியார் அச்சத்தால் கூவும்படி. **இகல் கொண்டு** - (வேடர்கள் முருகன்மேல்) பகைமை கொண்டு. **கொல் என்றுமேவு பொழுதில்** - கொன்றுவிடு என எதிர்க்குங்காலை, இனி உரக்க ஒலி எழுப்பிக் கொண்டு என உரைப்பினும் அமையும். **உரைத்திட** - (முருகன் சேவலைப் பார்த்து) சொல்ல. **கொன்று** - குறவர்களைச் சாகடித்து. கொடி என்றது பதாகையின் சேவலை. **தே என்று** - தெய்வமாக. முருகன் வள்ளியின் களவியல் ஒழுக்க வரலாறு வெளிப்படை.

குறிப்பு : இச்செய்யுளில் ஒலிக்குறிப்புச் சொற்கள் பலவாகப் பயின்றுள்ளன.

வைது அலங்குஓலம் மிக எய்து அம்புமாரி மிக
வருடித்து, அணைந்த அசுரர்
மட்டுஅன்றி, அவர் கரக் கட்டு ஒன்றும் மங்கலம் அ -
மங்கலம் உற, துதித்தல்

செய்து, அலங்காரத் திருச் சேவை கண்டு, உருகு
தேவர் அணி கொண்ட மடவார்
சீர் ஒன்று மங்கலம் பேர் ஒன்று தகையில்
சிறந்து கதிர் வீசி நிற்ப,
நெய்தலம் பறை இசை மணப் பறையின் ஒலி என்று
நிகழ் பல்லிய ஓதை பொங்க
நின்றிடும் ஓர் ஓதையே அவரவர் வினைக்கு ஏற்கும்
நிலை காட்டும் அற்புதச் சீர்
செய் தலைவ! நீ மறம் அறுத்து அறம் நிறுத்து நின்
சிறுபறை முழக்கியருளே!
சிரவைத் தலத்து இறைவ! பரவைத் தயைக் குமர!
சிறுபறை முழக்கியருளே! 3

**வைது** - திட்டி. **அலங்கு ஓலம் மிக எய்து அம்பு மாரி** - வேகமாக அசைவதால் ஏற்படும் ஓசையை மிகுதியாகப் பெற்றுள்ள கணைகள் ஆகிய மழை. மாரி என்றதற்கு ஏற்ப அலங்கு ஓலம் என்றார். காண்க : அலங்கு மழைபொழிந்த அகன்கண் அருவி (ஐங்குறுநூறு 220). **வருடித்து** - பெய்யவைத்து. மட்டும் அன்றி என உம்மை விரிக்க. **அவர்கரக்கட்டு ஒன்றும் மங்கலம்** - அந்த அசுரர்களின் கைகளால் கட்டப்பெற்ற தாலி. உற என்புழி எண்ணும்மை விரிக்க. **தேவர்அணி கொண்ட மடவார்** - தெய்வக்கூட்டம் ஏற்ற மகளிர், மனைவியர்; இனி தேவர்களின் அழகிய மனைவியர் எனினும் ஆம், இப்பொருளில் அருத்தாபத்தியாக அசுரர் மனைவியர் அழகற்றவர் என்றவாறாயிற்று. **பேர் ஒன்று தகையில்** - மங்கலம் என்னும் தன் பெயருக்கு ஏற்றவாறு. **கதிர் வீசி நிற்ப** - ஒளிவிட்டு நிலைத்திருக்கும்படி. **நெய்தல் அம்பறை** - சாவு நிகழ்ந்த வீட்டில் கொட்டப்படும் சாப்பறை, அம் சாரியை. அசுரர் சாப்பறை, தேவர் மணப்பறை என நிரல் நிறை. **பல்லிய ஓதை** - இசைக்கருவியின் ஓசை. இங்கு, "ஓர் இல்நெய்தல் கறங்க ஓர் இல் ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப" (194) என்னும் புறப்பாட்டு வரிகள் நினைவிற்கு வருகின்றன. **மறம் அறுத்து** - தீமைகளை அழித்து.

புவியிடத்து என் மனக் கவி இடர்ப் பந்தம் ஆர்
புலன்வழிக் கொண்ட மாந்தர்
போதை ஆர் சொற்கள் இடும் வாதையால் வெம்பிப்
புலர்ந்து மருள் அடையாமலே,
குவி மனத்திடை உன் அருள் அவிர் உருக் கண்டு உள்
குளிர்ந்த பெரியோர்கள் மலர்வாய்
கொண்ட தண் தேன் நிறைய உண்ட வண்டே அனைய
கொற்றம் உற்று, கனிவினால்
கவின் இசை துதித்திரள் கலித்து, விழிஇன்ப நீர்
கான்று, சிரசின் மீதினில்
கை கூப்பி நிற்கும் இயல் மெய் கூட்டும் வண்ணமே
கருணை உளமேல் கணித்துஎன்
செவி உற்ற மாசு எலாம் அவியப்படுத்தும் உன்
சிறுபறை முழக்கியருளே!
சிரவைத் தலத்து இறைவ! பரவைத் தயைக்குரவ!
சிறுபறை முழக்கியருளே! 4

**மனக்கவி** - மனம் ஆகிய குரங்கு. **இடர்ப்பந்தம் ஆர் புலன்வழிக் கொண்ட மாந்தர்** - துன்பமாகிய கட்டுக்களைப் பொருந்துகின்ற ஐம்புலன்களின்வழியே ஒழுகுகின்ற பாமரர்கள். **போதை ஆர்** - மயக்கம் பொருந்திய. **வாதையால்** - துயரத்தால். **மருள்** - அறியாமை நிலை. **குவி மனத்திடை** - ஒடுங்கிய உள்ளத்தில். மலர்வாய் கொண்ட தண்தேன் என்றது உபதேசத்தை. கொற்றம் என்பது மருளின்மீது கொண்ட ஞானவெற்றி. **கலித்து** - ஒலித்து, தோத்திரம் செய்து. **கான்று** - வெளிப்பட்டு, பொழிந்து. **இயல்** - தன்மை. **கணித்து** - தீர்மானித்து. செவி உற்ற மாசு என்றது புலன்வழிக் கொண்ட மாந்தர் போதை ஆர் சொற்களைக் கேட்டதால் விளைந்த குற்றத்தை. **அவியப்படுத்தும்** - அழிக்கும்.

மால் அமைதரக் கூட்டு தூலம், இசை சூக்கும
வகைப்படு தொகைப்படும் உடல்
வசப்பட்டு நின்று, பொய் நிசப்பட்ட வாழ்வினை
மதித்து, திதித்து, மைந்தர் -

பால் அமையும் அபிமான சால மகமாயையுள்(ப்)
பட்டு உளம் தட்டழிந்தேன்;
பாகம் மிக உற்ற தெய்வீக மயமாய் நின்ற
பரஞான மோன இன்பம்
மேல் அமைதரச் செய் அநுகூலம் உறுகௌமார
வித்தகச் சித்தர் குழுவில்
விலங்காமல் என்றும் கலங்காமல் நின்று இலகு
வீர தீரம் பொருந்தும்
சீல அநுபூதி நிலை சால நிறைவு ஆக, நின்
சிறுபறை முழக்கியருளே!
சிரவைத் தலத்து இறைவ! பரவைத் தயைக் குமர!
சிறுபறை முழக்கியருளே! 5

இச்செய்யுளைத் தெளிவாகப் புரிந்து கொள்ளச் சைவ சித்தாந்தக் கோட்பாடு ஒன்றை அறியவேண்டும். உடல் தூலம், சூக்குமம், அதிசூக்குமம் என மூவகைப்படும். தூலம் என்பது பருவுடல். ஐந்து தன்மாத்திரைகள், மனம் அகங்காரம், புத்தி ஆகிய மூன்று அந்தக் கரணங்களாலாகிய சூக்கும சரீரம்; இது நுண்ணுடல் எனவும் புரியட்டகம் எனவும் வழங்கும். வித்தியா தத்துவங்கள் ஏழோடு குணதத்துவம் ஒன்றும் இணைந்தது அதிசூக்கும சரீரம். இது பரசரீரம், குண சரீரம், கஞ்சுக சரீரம், காரண சரீரம் என்றும் பெயர் பெறும். இவற்றின் தெளிவான விளக்கத்தை விரிந்த நூல்களிற் காண்க. இதுதான் வகைப்படு தொகைப்படு உடல் எனக் குறிக்கப்படுகிறது.

**மால் அமைதரக் கூட்டு தூலம்** - விஷயங்களில் ஆசை உண்டாகும் வண்ணம் செய்கின்ற பருவுடல். **இசை** - சொல்லப்படுகின்ற, இனி ஓர் ஆன்மாவுடன் பொருந்துகின்ற எனினும் ஆம். **உடல் வசப்பட்டு நின்று** - உடம்பையே ஆன்மா ஆகிய தான் என மயங்கி. பொய் நிசப்பட்ட வாழ்வினை மதித்து - நிலையாமை என்பதனையே நிலையானதாகக் கொண்ட உலக வாழ்க்கையை இன்பம் எனக் கருதி; "நில்லாதவற்றை நிலையின என்று உணரும் புல்லறிவாண்மை கடை" *(331)* என்பது பொதுமறை. **திதித்து** - (அந்தப் பருஉடலை) பாதுகாத்து. **அபிமானம்** - ஒன்றைத் தன்னுடையதாகக் கருதி நேசித்தல். **சால** - பிணிக்கின்ற வலை ஆகிய. **மகமாயை** - பெரிய மாயை. மக

என்பது மகா என்பதன் குறுக்கல் விகாரம். "மகமாயை கடந்திட வல்லபிரான்" என்பார் அருணகிரிநாதர் (அநுபூதி 5); **பாகம் மிக உற்ற** - பக்குவம் அடைந்த. பரஞான மோன இன்பம்; "மோனம் என்பது ஞானவரம்பு" (கொன்றை வேந்தன் 80). **அமைதரச் செய்** - திளைக்கும்படிச் செய்யவல்ல. **அநுகூலம்உறு** - இறையருள் சித்திக்கப்பெற்ற, உதவி புரிகின்ற என்பது மேலோட்டமான பொருள். **வித்தக** - மெய்யறிவு வாய்த்த. **இலகு** - புகழுடன் விளங்குகின்ற. ***சீல அநுபூதி*** - இயல்பாக வரும் சொந்த அநுபவம். ***சால*** - மிகவும்.

## *(பன்னிரு சீர் விருத்தம்)*

**மயங்கும் விகற்ப சத்தியது,**
**மாக்கள் அனையாருடன் கூட்டி,**
**வஞ்சப் புவிப் பாக்கியத்து அழுத்த,**
**மனது தடித்து, கற்பம் நிலை**
**துயங்கும் போக போக்கியத்தில்**
**சுழற்ற, மதி கெட்டு அலைவேனை,**
**சுகம் ஆம் சங்கற்பத்து அமைத்து,**
**துணை ஆம் சவிகற்பம் கூட்டி,**
**இயங்கும் தவஞானம் பெருக்கி,**
**இணை தீர் நிருவிகற்பம் அளித்து,**
**இன்பச் சகச நிட்டை நிலை**
**என்னுள் விளங்க வைத்து, அதனுள்**
**முயங்கும்படி, நின் கரமலரால்**
**முழக்கி யருளாய் சிறுபறையே!**
**முதிர் சீர்ச் சிரவைப் பதிமுதல்வா!**
**முழக்கி யருளாய் சிறுபறையே!** 6

**மயங்கும்** - மயக்க வைக்கும் என்னும் பொருளில் ஆட்சி. **விகற்ப சத்தி** - பொருள்களைப் பெயர், சாதி, குணம், கன்மம், பொருள் என்னும் ஐந்து வேறுபாடுகளைக் கொண்டு பலவாறாகப் பிரித்து அறியும் ஆற்றல் (சித்தியார்.அளவை.3). **மாக்கள் அனையோருடன்** - விலங்குகளைப் போன்ற கீழோருடன். **வஞ்ச** - ஏமாற்றுகின்ற. **புவிப் பாக்கியத்து** - உலகியற் செல்வ வளத்தில். **தடித்து** - செயல்கள் மிகுந்து, பலவற்றை எண்ணி

எண்ணி. **கற்பம்** - மிக நீண்ட காலம். **நிலை துயங்கும்** - நிலைகுலையச் செய்யும். **போக போக்கியத்தில் சுழற்ற** - ஐம்புலன்களுக்கு இன்பத்தைத் தரும் நுகர்வுப்பொருள்களுள் சிக்கிச் சுழல வைக்க. **சுகம் ஆம் சங்கற்பத்து** - பேரின்பத்தை அடைய வேண்டும் என்னும் மனோதிடத்தில். **சவிகற்பம்** - "பெயர் முதலிய ஐந்தும் பொருள்தோறும் உண்மையின், அவ்வைந்தும் அப்பொருட்கண் உள்ளவாறு இனிது விளங்க உணரும் ஞானசத்தி சவிகற்பம் எனப்படும் என்பதாம்" (சித்தியார். அளவை.3- சிவஞான முனிவர் பொழிப்புரை). **நிர்விகற்பம்** - "பெயர் முதலியவற்றால் பகுத்தறிதல் இன்றி இஃது ஒன்று தோன்றா நின்றது எனப் பொருள் உண்மை மாத்திரையே அறியப்படும் ஞானசத்தி நிருவிகற்பம் எனப்படும்" (மேலது). **சகசநிட்டை நிலை** - "சகச நல்நிட்டை இயல்பு தம் முயற்சி சற்று ஒன்றும் இன்றியே, அருளால்" எனத் தொடங்கும் சுத்த சாதகத்தின் 57ஆம் விருத்தத்தில் காண்க.

குறிப்பு : இச் செய்யுளிலும் தொடர்ந்து வரும் சிலவற்றிலும் இடம்பெற்றுள்ள மெய்யியற் கலைச் சொற்களும், கோட்பாடுகளும் விரித்துரைக்கில் மிகப் பெருகிவிடும். ஆதலால் விரிந்த சாத்திர நூல்களில் தெளிவாகக் காண்க.

தூலம் பெறு வைகரியதனில்
  தோன்றும் நிவிர்த்தியுடன், அதன்மேல்
  சூக்கம் உறு வைகரியினிடை
  துலங்கும் பிரதிட்டா கலையும்,
கோலம் பெறு மத்திமையினில் அங் -
  குரிக்கும் வித்தியா கலையும்,
  குலவும் பைசந்தியில் உதித்து உள்
  குளிரப் புரி சாந்தியும், அதன்மேல்
சீலம்பெறு சூக்குமைச் சோதி
  சேரும் சாந்தியாதீதச்
  சிறப்பு ஆர் உண்மை அநுபூதிச்
  செல்வம் அடியேன் பெற்று உவக்க,

மூலம் பெறு கைத் தாமரையால்
முழக்கியருளாய் சிறுபறையே!
முதிர் சீர்ச் சிரவைப் பதி முதல்வா!
முழக்கியருளாய் சிறுபறையே! 7

இச்செய்யுளைத் தெளிவாக உணர்ந்து கொள்ள, முதலில் சுத்த மாயையில் இருந்து (தூய மாயை) தோன்றும் சொல் உலகம் (சப்தப்ரபஞ்சம்) பற்றிச் சுருக்கமாக அறிவோம்.

சொல் என்பது கருத்து உணர்த்தும் ஒலிக்கு அடிப்படை ஆகிய சுத்த மாயையின் பகுதி; இது நாம் காதினால் கேட்கும் ஓசை அன்று. அவ்வோசையின் வழியே தோன்றிக் கேட்பவர்களுக்குப் பொருள் உணர்வை உண்டாக்கும் ஆற்றல்தான் சொல் (சப்தம்) எனப்படும். சொல் எழப் பொருள்களே பற்றுக்கோடு ஆகும். இங்கு சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என நால்வகை வாக்குகள் எழும். இவை தமிழில் முறையே நுட்பம், தொகை, வகை, விரி எனப்படுகிறது. இவை நான்கும் ஒன்றில் ஒன்று தூலமாய் வளரும்.

சூக்குமையைப் பரை என்றும் நாதம் என்றும் வழங்குவர். இதற்கும் இதன் காரணம் ஆகிய சுத்த மாயைக்கும் பெருத்த வேறுபாடு இல்லை. சூக்குமையின் அடுத்த நிலை பைசந்தி ஆகும். சொல்வடிவம் சிறப்பு முறையில் இதுதான் என விளங்காமல் பொதுவகையில் விளங்கி நிற்கும் நிலை இது. பைசந்தியை விளங்கியும் விளங்காமலும் உள்ள நிலை எனலாம். சூக்குமை, பைசந்தி ஆகிய இந்த இருவகை வாக்குகளும் அனைத்து மொழிகளுக்கும் பொதுவானவை.

பைசந்தி தொடர்ந்து சொல்வடிவில் தோன்றி, எழுத்து வடிவமும் (ஒலிவடிவம்) பெற்று, உதானன் என்னும் காற்றால் உந்தப்பட்டு கழுத்துக்குள் ஓரளவு ஒலித்து நிற்பது மத்திமை எனப்படும். மத்திமை நிலையில் உள்ள சொற்கள் பிராணன் என்னும் காற்றால் நன்கு வெளிப்படுத்தப்பட்டுச் சொல்பவன் கேட்பவன் ஆகிய இருவருடைய காதுகளுக்கும் புலனாவது வைகரி எனப்படும். கண்டத்தில் இருந்த ஒலி பல், இதழ், நா, அண்ணம், மூக்கு என்னும் உறுப்புக்களின் தொடர்பினால் வேறுபாடுகளைப் பெறுவதால் வைகரி (விகாரத்தைப் பெற்றது) எனப்படுகிறது. இந்த வைகரி

என்னும் வாக்கு சொல்லுவோர் செவிக்கு மட்டுமே புலனாகில் சூக்கும வைகரி என்னும், சொல்பவர் கேட்பவர் ஆகிய இருவரின் செவிக்கும் புலனாகில் தூல வைகரி என்றும் இருவகைப்படும். மத்திமை, வைகரி ஆகிய இரண்டும் மொழிக்கு மொழி வேறுபட்டு நிற்கும். இந்த நால்வகை வாக்குகளுக்கும் சுத்த மாயையே காரணம் ஆகும். இந்த வாக்குகளால்தான் ஒருவனுக்கு ஒருபொருளைப் பற்றி முழுமையாக உணரும் சவிகற்ப ஞானம் உண்டாகும். அதாவது வார்த்தைகளைக் கொண்டுதான் பொருளை அறிய முடியும்.

சுத்த மாயையின் கலைகள் நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதம் என ஐந்தாம். இவை தமிழில் முறையே நீத்தல், பதிவு, புலமை, அமைதி, அமைதிமேல் எனப்படும்.

இவற்றுள் நிவிர்த்தி கலையைப்பற்றிச் சூக்கும வைகரியும் பிரதிட்டைக் கலையைப் பற்றித் தூல வைகரியும், வித்தியா கலையைப் பற்றி மத்திமையும், சாந்தி கலையைப்பற்றிப் பைசந்தியும், சாந்தியாதீதக் கலையைப் பற்றிச் சூக்குமையும் நிற்கும். சொல்லைத் தனக்கு வேறானதாக அநுபவத்தால் உணரப் பெற்றுச் சிவபெருமானின் நல்லருளால் பேரறிவைப் பெறக் கூடுமாயின் உயிர்கள் வீடுபேறு அடையலாம்.

இத் தத்துவக் கருத்துக்களின் விரிவைச் சிவஞான சித்தியாரின் முதற்நூற்பாப்பகுதிக்கு எழுந்துள்ள உரைகளில் காணலாம். இனிச் செய்யுளின் அருஞ்சொற்பொருள் :

**தூலம்பெறு வைகரி** - தூல வைகரி வாக்கு. **சூக்கம் உறு வைகரி** - சூக்கும வைகரி. **அங்குரிக்கும்** - உண்டாகும். **சீலம் பெறு** - உயர்ந்த. **மூலம் பெறு** - ஒலிதோன்றுவதற்குக் காரணமாக அமைந்த.

## (வண்ணவிருத்தம்)

தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதனனா

வதிர்ச்சி உதவி, உள் உணர்ச்சி கவர்தரு
மலத்துள் அமிழ் சிறியேன் -
வயின் பெருகு திருவருட் செய்கையின் உறும்
அருட்சி நிலை பெறவே,
அதிர்ச்சி தரு புல நுகர்ச்சி பெறு சுக -
மதைக் கைபெற உதவா
அநித்தம் எனும் உணர்வு அளித்து, உன் அடிமலர்
அகத்தில் நினைதரும் ஓர்
விதிர்ச்சி அருளினை; வளர்ச்சி அமைதரு
விதுத் தகையில் அடியேன்
விளக்கம் மிகும் உனது அருள்(க்) கைகொடு சுரர்
வியக்கும் அதிசய நீர்
முதிர்ச்சியுடன் இகபரத்து நலம் உற
முழக்கு சிறுபறையே!
முயக்கு சிரவண புரத்தில் உறைகுக
முழக்கு சிறுபறையே! 8

**வதிர்ச்சி** - மனத்தடுமாற்றத்தை, அசைவைக் கருதுகிறார் போலும்; இவ்வுரையாசிரியன் அறிந்தவரை இப்படியொரு சொல்லைக் கண்டதில்லை. **உள் உணர்ச்சி** - அறிவு. **மலத்துள்** - ஆணவத்தில். **சிறியேன்வயின்** - எளியவனின்பால். **அருட்சி** - அருளுதல். **சுகமதை** - இன்பத்தை, அது பகுதிப்பொருள் விகுதி. **உதவா** - அளித்து, உதவி, செய்யா என்னும் வாய்பாடு. **அநித்தம் எனும் உணர்வு** - நிலையாமை பற்றிய உணர்வு. **அகத்தில்** - உள்ளத்தில். **விதிர்ச்சி** - தொழிற்பெயர், நடுங்குதலை, மன அசைவைக் குறித்து நின்றது. **விதுத்தகையில்** - சந்திரனைப்போல. **சுரர்** - தேவர்களும், உயர்வு சிறப்பும்மை விரிக்க. **அதிசயநீர் முதிர்ச்சியுடன்** - வியப்புத் தன்மை மேலோங்கிய நிலையில்.

குறிப்பு : இச்செய்யுளில் ஆளப்பட்டுள்ள வதிர்ச்சி, விதிர்ச்சி, ஆகிய இரு சொற்களின் ஆட்சியும் அரியவை. மேலும் ஆராய வேண்டியவை.

தனந்த தனதனத் தனன
தனத்த தனதனனா

தழங்கும் முறிதிரைக் கடல்கொள்
சலத்தை நுகர்தரு கார்
தழைந்த பொழில் மிசைக் குலவு
தயக்க இடியுடன் நீர்
வழங்கும் ஒலி நடிப்பு அணிகொள்
மயில்த் தொனி பல்விதமாம்
வளம் குலவு ககத்திரள் உள்
மகிழ்ச்சி இசையுடனே
பழங்கண் அறு தமிழ்ப்புலவர்
பழிச்சும் ஒலி அகமே
பதிந்து இலகு திருப்புகழ்கள்
படிக்கும் ஒலிமிகவே
முழங்கு சிரவணக்குமர!
முழக்கு சிறுபறையே;
முதிர்ந்த அழகுடைச் சிறுவ!
முழக்கு சிறு பறையே. 9

**தழங்கும்** - ஒலிக்கின்ற. **முறிதிரை** - மடங்கி மடங்கி விழுகின்ற அலைகளை உடைய. **சலத்தை** - நீரை. **கார்** - மேகம். **தயக்க** - வீற்றிருத்தலை உடைய. **நடிப்பு அணிகொள்** - நாட்டியத்தின் அழகினை உடைய. **தொனி** - குரல். **சுகத்திரள்** - கிளிக்கூட்டம். **பழங்கண் அறு** - துன்பம் இல்லாத. **பழிச்சும்** - புகழ்ந்து பாடும். **அகமே பதிந்து** - உள்ளம் ஒருமித்து. திருப்புகழ்கள் என்பது ஆகுபெயராக இறைவன் அருள்சேர் புகழ்விரிக்கின்ற நூல்கள் அத்தனையையும் குறித்து நின்றது. **முதிர்ந்த** - நன்கு விளைந்த.

குறிப்பு : நீர்வழங்கு ஒலி, மயில்த்தொனி, சுகத்திரள் இசை, தமிழ்ப்புலவர் பழிச்சும் ஒலி, திருப்புகழ்கள் படிக்கும் ஒலி ஆகியவை எல்லாம் மிகுதியாக ஒலிக்கின்ற சிரவணபுரத்தில் எழுந்தருளியுள்ள குமரக்கடவுளே, அழகு நிறைந்த சிறுவனே சிறுபறை முழக்கு என்றவாறு.

தனதன தனத்ததன தனதன தனத்ததன
தனதன தனத்ததனனா

உனது அடிதுதித்து உருகும் அடியவர் உளத்தில் உறும்
உறுகண் முழுது அற்று அகலவே,
உயர்சரியை முற்குலவு சதுர் வித நெறிப் பெருமை
உலகம்முழு துற்றுஅமையவே,
வனமிசை சரித்திடு புள் விருகம் நிகருற்று உழலும்
மனிதர்கள் மிகக் குறையவே,
மதுவுடன் அரக்கு உயிரின் நிணம் அயில் குணக் கொடியர்
வமிசம் முதல் அற்று ஒழியவே,
கனம் இசை முடிக்கிரிகள் தொறும் உனை வழுத்து அடியர்
கருதிய விருப்பம் உடனே
கடிதில் இசைவுற்று இருமை நலமும் எளிதிற் கொடு, உயர்
களி உததியில்(ப்) படியவே,
தினகரன் நிகர்த்து அடியர் அகமலர் அலர்த்து உனது
சிறுபறை முழக்கியருளே!
சிரவண புரத்தில் உறை சரவணபவக் குமர!
சிறுபறை முழக்கியருளே! 10

**உறுகண்** - துன்பம். **சரியை முதல் குலவு சதுர்வித நெறி** - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு மார்க்கங்கள். **வனமிசைசரித்திடு** - காட்டில் இயங்குகின்ற, வாழ்கின்ற என்றபடி. **புள்** - பறவை. **விருகம்** - விலங்கு. **நிகருற்று** - போன்று. **மது** - கள். **அரக்கு** - சாராயம். **நிணம்** - ஊன். **குணக்கொடியர்** - கொடியகுணர் எனமாறுக, தீயவர். **கனம் இசை** - பெருமை பொருந்திய. **முடிக்கிரிகள் தொறும்** - சிகரங்களை உடைய மலைகள் அனைத்திலும். **வழுத்து** - போற்றுகின்ற. **கடிதில் இசைவுற்று** - விரைவில் நிறைவேறி. **இருமை நலம்** - இம்மை மறுமைப் பயன்கள். **களி உததியில்** - இன்பக்கடலில். **தினகரன்** - சூரியன். **அகமலர் அலர்த்து** - உள்ளத்தாமரையை மலர்த்துகின்ற.

உறுகண் அகலவும், பெருமை அமையவும், மனிதர்கள் குறையவும், வமிசம் அற்று ஒழியவும், களி உததியில் படியவும் சிறுபறை முழக்கியருள் என்பது பொருள் முடிவு.

குறிப்பு : சிறுபறை முழுக்குவதாகிய ஒரு காரணத்தால் உறுகண் அகல்தல் முதலிய ஐந்து செயல்கள் நிகழ்வதாகக் கூறியதால் இது புற்புத அணி எனப்படும். "காரணம் ஒன்றாக் காரியம் பலபல தோன்றப் பெறுவது புற்புதம் ஆகும்" (51) என்பது நூற்பா. இவ்வணி மாணிக்கவாசகரின் குவலயானந்தம் ஒன்றில் மட்டுமே கூறப்பட்டுள்ளது.

## 10. சிறுதேர்ப் பருவம்

### *(இரட்டையாசிரிய விருத்தம்)*

"சீர்ஏறு இயல்(க்) கொடு பகைப் புலத்து உற்றவர்
திகைப்பு உளத்தில் குலாவ,
சேனையுடன் மற்றுஅவரை வானை உடன் எய்திடச்
செய்யும் மொய்ம்பு உடையோம்" எனா,
நேர் ஏறினவர் படைக்கு ஊறுஏறி, உந்திடு கண்
நீர் ஏறி, மெய்த் துளைச் செந் -
நீர் ஏறி, யாக்கை இந்நிலம் ஏறி, ஆருயிர்தென்
நிலம் ஏறிட, "பொருந்தும்
ஊர் ஏறினவர்களிடை, ஊரு ஏறி உறுவது அவம்;
உடல் ஏறி நின்ற வாழ்க்கை
ஒழிவதே? நமது நாண் அழிவதே?" என அசுரர்
ஒண் தொடியர் விண்டு அழிதர,
தேர் ஏறி ஒப்பு இல் அருள் வீறு ஏறி நின்ற குக!
சிறுதேர் உருட்டியருளே!
செய்ப்பதி வளம் கொள் சிரவைப் பதிவிளங்கும் இறை!
சிறுதேர் உருட்டியருளே! 1

*சீர்ஏறு இயல் கொடு* - சிறந்த காளையைப் போலப் போர்க்குணம் கொண்டு. *பகைப்புலத்து உற்றவர்* - எதிரி

நாட்டினர். **சேனையுடன்** - பகை அரசரை அவருடைய படைகளுடன். **வானை** - வீர சுவர்க்கத்தை. **உடன்** - விரைவாக. மொய்ம்பு - (கொல்லுகின்ற) வலிமை. **எனா நேர் ஏறினவர்** - என நினைத்துக்கொண்டு போருக்கு வந்த அசுரர்களின். **ஊறு** - தீமை. **மெய்த்துளை** - உடம்பின் தொளைகளில். **செந்நீர் ஏறி** - இரத்தம் ஒழுகி. **யாக்கை** - உடல். **இந்நிலம் ஏறி** - (பிணமாகத்) தரையில் விழுந்து. **தென்நிலம் ஏறிட** - தெற்கில் உள்ள இயமனின் **ஊரை** அடைய; இறந்து பட என்பது கருத்து. **ஊரேறினவர்களிடை ஊருஏறி** உறுவது அவம் என்னும் தொடர் ஐயமின்றி விளங்கவில்லை. அதன் பொருளும் பொருள் தொடர்ச்சியும் ஏதாவது அச்சுப்பிழை நேர்ந்திருக்குமோ என்பதும் ஆழமான மேலாய்வுக்கு உரியது. **உடல் ஏறி நின்ற வாழ்க்கை ஒழிவதே** - இறந்துவிடலாமா. **நாண் அழிவதே** - தாலியை இழக்கலாமா. **அசுரர் ஒண்டொடியர்** - அரக்க மகளிர். **விண்டு அழிதர** - புலம்பி மனம் உடையுமாறு.

இனி அசுரர் ஒண்தொடியர் என்பதனை உம்மைத் தொகையாக்கி அசுரர்களும் அவர்தம் மனைவியரும் எனக்கொண்டு, நாண் அழிவதே என்பதனை இரட்டுற மொழிதலாக்கி நிரனிறை ஆக மானம் கெடுவதா, மங்கலியத்தை இழப்பதா எனப் புலம்புவதாகக் கூறினும் அமையும்.

முருகப்பெருமான் தேர் ஏறிப் பகைவர்களான அசுரர்கள் அனைவரையும் கொன்று அவர் மனைவியர்களைப் புலம்ப வைத்தார் என்பது கருத்து.

குறிப்பு : இச்செய்யுளில் இடம்பெற்றுள்ள ருகரறுகர (இடையினவல்லின) போலியும் ஏறு என்பதன் பின்வருநிலையும் தெளிவாகப் பொருள்காண இடையூறாக உள்ளன.

**காரினை நடத்தும் இறை அறுமதிச் சிறுவிதி செய்**
**கனல் மகத்து அவி உண்டதால்,**
**கதித்திடு பவக்கடல் சுவற்று அடல்கொள் வடவை வெங்**
**கனல் அன்ன சினம் மிகுந்து,**
**சூரினை நடத்திடச் சூரினை விடுத்து மிகு**
**சோப தாபத்தில் உய்த்துத்**
**தூய்மை உற வைத்துஅவருள் வாய்மை மாதவ உருத்**
**தோய்ந்து, அசுரர் சுரர் உய்யவான்**

போரினை நடத்தி, அவிர் தெய்வ குஞ்சரி மணம்
பொலி அருட்காட்சி தரல்போல்
புன்மையேன் அருவினைகள் இன்மை ஆகிட அணிப்
புள்ளி மயில் வாகனம் எனும்
தேரினை நடத்தி மெய்ச் சீரினை அளிப்பவா!
சிறுதேர் உருட்டியருளே!
செய்ப்பதி வளம்கொள் சிரவைப்பதி விளங்கு மிறை
சிறுதேர் உருட்டியருளே! 2

**காரினை நடத்தும் இறை** - மேகத்தை வாகனமாகச் செலுத்தும் இந்திரன். **அறுமதி** - இல்லாமற்போன அறிவை உடையவன் ஆகிய, புத்தி கெட்ட, அறுமதி : வினைத்தொகை. **சிறுவிதி** - பிரமனின் மைந்தனாகிய தக்கன். **கனல் மகத்து** - நெருப்பைக் கொண்டு செய்யப்படுகின்ற வேள்வியில். **அவி** - யாகத்தில் பெய்யப்படும் பொருள். **கதித்திடு** - மிகுந்து விட்ட. **பவக்கடல்** - பாவமாகிய சமுத்திரத்தை. **சுவற்று** - வற்றச் செய்கின்ற. **அடல்** - வலிமை. **வடவைவெம் கனல் அன்ன** - வடவைத் தீயைப்போன்ற. **சூரினை நடத்திட** - தன் வெற்றியைக் காட்ட. **சூரினை விடுத்து** - அசுரனாகிய சூரனை ஏவி. **மிகு சோபதாபத்தில் உய்த்து** - (இந்திரன் முதலிய தேவர்களை). **சோபதாபம்** - துன்பம், ஒருபொருட்பன்மொழி, இனி துன்பத்தால் விளைந்த வெப்பம் எனினும் ஆம். **தூய்மை உறவைத்த** - (இந்திராதி தேவர்கள் தக்கன் வேள்வியில் பங்கேற்ற பாவத்தினின்று நீங்கி) பாவம் அற்ற தன்மையைப் பெறுமாறு செய்த. தக்கன் வேள்வியில் கலந்துகொண்டதால்தான் தேவர்களுக்குச் சூரன்வழி இடுக்கண் வந்தது என்ற வரலாறு வெளிப்படை. **அவருள்** - அந்தத் தேவாசுரர்களுக்கு நடுவே, தேவர்களின் படைகளுக்குத் தலைவன் ஆகியதைப் பற்றிய குறிப்பு. அசுரர் சுரர் ஆகிய இருசாராரும் நன்மை அடையும்படி என்க. சூரன் மயிலும் சேவலுமாம் நிலைபெற்றதும் வானவர் ஆட்சி பெற்றதும் உய்தி ஆயின. **வான்** - பெரிய. **தெய்வகுஞ்சரி** - தேவயானை நாச்சியார். தேர் என்றது பொதுவாக ஊர்தி என்னும் அளவில் நின்றது.

அள்ளிப் பிடிக்கும் அணி துள்ளிக் குதிக்கும் நலம்
ஆர் அலங்காரம் மிகவே
ஆவல் புரி ஏனலின் காவல் புரி வேடுவர்
அரும் தவ இரும்துருவம் ஆம்
வள்ளிக் கொடிச்சி இணை தள்ளிப் பணைத்து அவிர்
வடத் தனம் மடத்தனம் என் நுண்
மருங்குலை வரும்கலை ஒருங்கு உலைய வைத்து, உலவு
மை விழியை எய்வில் என வேள்
கொள் இக்கை ஒன்று என்ன எள்ளி, களங்கம் உறு
குடை ஒஞ்ச, மிடை நுதல் முகக்
கோலத்தை அற்புதச் சீலத்தை மெச்சி, விழி
கொண்டு உண்டு, தண்தேன் அளாய்த்
தெள்ளிக் கொடுத்த மா உண்ண வாய் வைத்தவன்!
சிறுதேர் உருட்டியருளே!
செய்ப்பதி வளம் கொள் சிரவைப்பதி விளங்கும் இறை!
சிறுதேர் உருட்டியருளே! 3

**அள்ளிப்பிடிக்கும் அணி** - (கண்களால் கண்டு துய்ப்பதனோடு அமையாமல்) கைகளில் முகந்து எடுத்துக் கொள்ளலாம்படி மிகுந்த மேனியழகும். **துள்ளிக் குதிக்கும் நலம்** - ஆட்டம் போடுகின்ற இளமையின் சிறப்பும். **ஆர்** - பொருந்தியுள்ள. **அலங்காரம்** - கட்டழகு. **ஆவல் புரி ஏனலின்** - வளைந்த தினைக்கதிர்களை, ஆவல் என்னும் சொல் வளைவுப் பொருள் தருதலை, "ஆவல்தானே ஆசையும் வளைவும்" என்னும் அகராதி நிகண்டினால் அறியலாம் (ஆமுதல் 61). அரும் தவ இரும் துருவம் ஆம் - (குறவர்கள் செய்த) அரிய தவத்தினால் கிடைத்த பெரியதும் நிலைத்ததுமாகிய இன்பத்தைப் போன்ற, ஆம் உவமப்பொருள். காவல்புரி வள்ளிக் கொடிச்சி, துருவம் ஆம் வள்ளிக் கொடிச்சி எனத் தனித்தனி இயையும், கொடிச்சி - குறிஞ்சி நிலமகள், "ஏனல் படுகிளி கடியும் கொடிச்சி கைக்குளிரே" (குறுந்தொகை 291) என்பது சங்கப் பாட்டு; வாளா கொடியைப் போன்றவள் எனல் சிறப்பன்று. **இணை தள்ளி** - ஜோடியாக நெருங்கியமைந்து. **பணைத்து** - பருத்து. **வடத் தனம்** - மணிமாலையை அணிந்துள்ள கொங்கை. **மடத்தனம் என்** - மென்மைத் தன்மையையே ஒத்த, மிருதுவான என்றவாறு. **நுண்**

**மருங்குலை** - மெலிந்த இடுப்பை. **வரும் கலை** - (இடுப்பில் ஆடையாக) வந்து அடையும் உடையை. **ஒருங்கு உலைய வைத்து** - முற்றிலுமாக வருந்தச் செய்து. உடுத்தும் உடையால் கூட வருந்துமளவு மென்மையும் மெலிவும் கொண்ட இடை என்றவாறு; "நூல் பொர அரிய நுண்மை நுசுப்பு" (சிந்தாமணி 459) வரும் கலையால் ஒருங்கு உலைதலில் வியப்பேதும் இல்லை. **மை விழியை எய்வில் என வேள் கொள் இக்கை** - அஞ்சனம் தீட்டப்பெற்ற கண் ஆகிய அம்பினைச் செலுத்தும் வில்லாக மன்மதன் கொண்டுள்ள கரும்புவில்லை. **ஒன்று என்ன எள்ளி** - எண்ணிக்கையில் ஒன்றுதான் எனப்பரிகசித்து. **களங்கம் உறு குடை ஒஞ்ச** - (முயற்கறை ஆகிய) மாசினை உடைய சந்திரன் ஆகிய காமனின் குடை நாணம் அடைய. **மிடை நுதல்** - ஒன்றையொன்று நெருங்கியுள்ள புருவங்களும். புருவங்கள் வில்லைப் பரிகசிக்கின்றன, முகம் சந்திரனை நாணமடையச் செய்கிறது; நிரல்நிறை. **கோலத்தை** - அழகை. **விழிகொண்டு உண்டு** - கண்களாற் பருகி. **தண்தேன் அளாய்த்** - குளிர்ந்த தேனைக் கலந்து. **வாய் வைத்தவன்** - வாயால் வாய்த்த பயனை முழுமையாகப் பெற்றவனே, அண்மைவிளி இயல்பாயிற்று.

குறிப்பு : இச்செய்யுள் நுட்பமான பொருட்கோளையும் சொல்லணி பொருளணிச் சிறப்பினையும் கொண்டுள்ளது. வளைவு என்னும் பொருளில் ஆவல் என்பது மிக அருகிய ஆட்சி. "வேடுவர் அரும் தவ விருந்து உருவம் ஆம் வள்ளி" எனவும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். இங்கு விருந்து என்றது புதுமையை. நுதல் என்னும் சொல் பெரும்பான்மையும் நெற்றியைக் குறிக்குமேனும் புருவத்தையும் சுட்டும் என்பதனைப் பிங்கலம், "புருவமும் நெற்றியும் நுதல் ஆகும்மே" (3736) என உணர்த்துகிறது. "வில் ஒக்கும் நுதல் என்றாலும்" (கம்பர். ஆரணிய.625) என்பது பொருத்தமான இலக்கிய ஆட்சி ஆகும். "விழி கொண்டு உண்டு" என்றது இலக்கணை.

அள்ளிப்பிடிக்கும் துள்ளிக்குதிக்கும், ஆவல்புரி காவல்புரி, வடத்தனம் மடத்தனம், மருங்குலை வருங்கலை ஒருங்குலை, கோலத்தை சீலத்தை ஆகியன மடக்கணியின்பாற்பட்ட வழியெதுகைகள் ஆகும். இக்கை ஒன்று என்ன நுதல் எள்ளி, குடை ஒஞ்ச முகக் கோலம் என்றது நிரல்நிறை.

மருங்குலை கலை உலையப வைத்து என்றது உயர்வு நவிற்சியணி. மன்மதனுக்கு வில் ஒன்றுதான், ஆனால் வள்ளிக்குப் புருவங்கள் இரண்டு எனக்கூறி எள்ளுவது வேற்றுமை அணியின் ஒருவகை ஆகிய குணவேற்றுமையின்பாற்படும். முகத்திற்கு உவமானம் ஆகிய திங்களைக் களங்கம் உறு எனப் பழித்துக் கூறியதால் நிந்தையுவமையணி. இவ்வாறு இரண்டிற்கு மேற்பட்ட பொருளணிகள் ஒரே செய்யுளில் பயின்றது சங்கீரணஅணி. (விரவியல் அணி) மேலும் இவற்றுடன் சொல்லணியும் கலந்ததால் இதனைச் சொல்பொருள் அணிச் சேர்வை என்பர் அணி நூலார்.

**கின்னம் பொருந்த வரும் மீன் ஆன சாபம்**
**கிடைத்திட்ட ஓர் அறுவரும்,**
**கிருத்திகைப் பேர் பொலிவிண் மீன்ஆன அறுவரும்**
**கேடுஇல் பதம் எய்திமகிழ,**
**"குன்னம் பொலிந்து அவிர் கடாட்ச வீட்சண்ணியக்**
**கோலால! இன்ப வாழ்வைக்**
**கொடுத்தருள் குமார! குருதேசிக! நமோ முருக!**
**குழக! அழகா நம" எனக்**
**கன்னம் குளிர்ந்து, உறு கருத்தும் குளிர்ந்து, எதிர்கொள்**
**கண்களும் மிகக் குளிர்ந்தே,**
**கடவுளர்கள் ஏத்திட, தீர நவவீரக்**
**கணங்கள் ஆனந்தம் அமைய,**
**சின்னம் பணிக்க, அமர் முன்னம் பணித்த குக!**
**சிறுதேர் உருட்டியருளே!**
**செய்ப்பதி வளங்கொள் சிரவைப் பதி விளங்கும் இறை!**
**சிறுதேர் உருட்டியருளே!** 4

**கின்னம் பொருந்த** - வருத்தம் அடையும்படி. ஓர் அறுவர் என்றது பராசர முனிவரின் மக்கள் ஆகிய தத்தன் அநந்தன், நந்தி, சதுமுகன், பருதிபாணி, மாலி ஆகியோரை. இவர்கள் சரவணப் பொய்கையில் விளையாட்டாக முதலை வடிவு கொண்டு நீரைக் கலக்கினர். மேலும் அதிலிருந்த மீன்களை வருத்தினர். அதனைக் கண்ட பராசரர் அம்மக்களை மீன்கள் ஆகும்படி சாபமிட்டார். முருகன் தோன்றும்போது உமையம்மையின் திருமுலையமுது சரவணப் பொய்கையில் சிதற, அதனை உண்டால் சாப நீக்கம்

உண்டாகும் எனப்பட்டனர். இதன் விரிவைக் கந்தபுராணம் சரவணப் படலத்துள் காணலாம். **விண்மீன்** - நட்சத்திரம். கார்த்திகை மாதர் பற்றிய செய்தி வெளிப்படை. **பதம்** - பதவி. **குன்னம்** - குன்றம் என்பதன் மெலித்தல் விகாரம், எதுகை நோக்கியது, மலை. **கடாட்ச வீட்சண்ணிய** - கடைக்கண் பார்வை ஆகிய. **கோலால** - சிறப்பை உடையவரே. **கன்னம்** - காது. **நவவீரக்கணங்கள்** - வீரவாகு முதலிய ஒன்பது துணைவர்களும், அவர்களுடைய படைகளும். **சின்னம் பணிக்க** - காகளம் முதலிய திருச்சின்னங்கள் முழங்க. **அமர்** - போர். **பணித்த** - இயற்றிய, செய்த.

**காரோடு நிகர் குழல் சசி கேள்வன் ஆயிரம்**
**கண் சுவைத்து உண் விருந்தாய்,**
**கற்பகத்து அலர் அணி கற்பு அகக் குஞ்சரி கொள்**
**கடிமணவிழா உலாவில்,**
**சீரோடு தரிசித்த புவனி மங்கையர் எலாம்**
**செய் தவப் பேறு எய்தவே,**
**செங்கை, இரு கொங்கை, அமை தோள், கண்டம், நாசி, நா,**
**செவி, மெய் எலாம் மணப்ப,**
**நீர்ஓடு விழியோடு, கனல் இட்ட மெழுகு ஒத்து**
**நெக்கு நெக்கு இன்ப மயமாய்**
**நீங்காது பொங்கி வழியும் காதல் மிக்கு அமையும்**
**நெஞ்சகத்து அஞ்சல்மின் எனத்**
**தேரோடு கந்த மெய்ப் பேரோடு நின்றவன்!**
**சிறுதேர் உருட்டியருளே!**
**செய்ப்பதி வளம் கொள் சிரவைப் பதி விளங்கும் இறை!**
**சிறுதேர் உருட்டியருளே!** 5

**காரோடு நிகர் குழல்** - மேகத்தைப் போன்ற கூந்தலை உடைய. **சசி கேள்வன்** - இந்திராணியின் கணவன் ஆகிய இந்திரனின். **கற்பகத்து அலர்** - கற்பக மரத்தின் பூ. **கற்பு அகக் குஞ்சரி** - தெய்வயானை அம்மையார். **கடிமணவிழா** - திருமணம். **புவனி மங்கையர் எலாம்** - இந்நில உலக மகளிர் அனைவரும், தெய்வயானை திருமணம் திருப்பரங்குன்றத்தில் நடைபெற்றதால் புவனி மங்கையர் என்றார். **செங்கை** - சிவந்த

கரங்கள். **அமை தோள்** - மூங்கிலைப் போன்ற புயங்கள், உவமைத் தொகை. **கண்டம்** - கழுத்து. **நாசி** - மூக்கு. **மணப்ப** - புலனின்பத்தை நுகர என்பது கருத்து. **தேரோடு** - நிச்சயமாக, தேர் - முதனிலைத் தொழிற்பெயர். **உகந்த** - மகிழ்ந்து ஏற்றுக்கொண்ட. **பேரோடு** - திருப்பெயருடன். **நின்றவன்** - நிலைத்தவரே, அண்மைவிளி இயல்பு ஆயிற்று.

## *(பன்னிரு சீர் விருத்தம்)*

**வாசம் பொலி செங்கமலமிசை**
**வாசம் புரியும் எண் கரத்தோன்**
**வரையும் விதியின் விதியை அற**
**மாற்றும் கவன தாரை என,**
**வீசு அம்பு அலர் ஐந்து இடும் மோக**
**வெறிசால் சால வித்தை எலாம்**
**வெய்யோன் எதிர் சார் இருள் என்ன**
**விழுங்கும் ஞானப்படை என்ன,**
**பாசம் பொலி கை ஏமன் எனும்**
**பகைவற் செகுத்த நின் தாதை**
**பத வாரிசமே என்ன, இயல்**
**படியில் பதித்த பட்டயம் போல்**
**தேசம் பொலியும் மகிமைபெற**
**சிறுதேர் உருட்டியருள்வாயே!**
**சிரவைப்பதிச் சற்குரு மணியே!**
**சிறுதேர் உருட்டியருள்வாயே!** 6

**வாசம் பொலி** - நறுமணம் மிக்க. **வாசம் புரியும்** - வீற்றிருக்கும். **எண்கரத்தோன்** - எட்டுக்கைகளை உடைய பிரமன். **வரையும் விதியின் விதியை** - தலையில் எழுதுகின்ற ஊழ்வினைப் பயனாகிய நியமனத்தை. **கவன தாரை** - வேகமாகப் பாயும் வெள்ளம். **வீசு** - செலுத்துகின்ற. அலர் அம்பு என மாறுக, பூங்கணை. **சால்** - மிகுந்த. **சால வித்தை** - மாயைகள். **வெய்யோன் எதிர்சார் இருள் என்ன** - சூரியனின் எதிரில் வந்த இருட்டினைப் போன்று. **விழுங்கும்** - அழிந்துவிடும். **ஞானப்படை** - மெய்யறிவாகிய ஆயுதம். ஒப்பு: நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன் (திருமந்திரம் 2968), "அவிரோத

ஞானச் சுடர் வடிவாள்" (கந்தர் அலங்காரம் 25). **பாசம் பொலி** - பாசக்கயிறு விளங்குகின்ற. ஏமன் - இயமன். **செகுத்த** - கொன்ற. **தாதை** - தந்தை ஆகிய சிவபெருமான். **பதவாரிசம்** - திருவடித்தாமரை. **இயல் படியில்** - (இரதம்) செல்லுகின்ற நிலத்தில். **பட்டயம்** - சாசனம். **தேம் பொலியும் மகிமை** - நாட்டுமக்களால் விரும்பப்படும் பெருமை.

குறிப்பு : முருகப்பெருமான் உருட்டும் சிறுதேரின் சக்கரச் சுவடு விதியை அழிக்கும் நீர்ப்பெருக்கைப் போலவும், காமத்தை அழிக்கின்ற மெய்யறிவாகிய படைக்கலத்தைப் போலவும். சிவபெருமானின் திருவடித் தாமரைகளைப் போலவும், நிலத்தில் பொறித்து வைத்த சாசனம் போலவும் மக்களால் உணரப்பட்டுப் போற்றப்பெறல் வேண்டும் என்பது கருத்து.

தேர்ச்சுவடு ஆகிய ஒருபொருளுக்குக் கவனதாரை, ஞானப்படை, திருவடிகள், பட்டயம் எனப் பல உவமைகளைக் கூறியதால் இது பலபொருளுவமையணி ஆகும். உல்லேக அணி எனினும் ஆம். மேலும் ஞானப்படையை இருளை விழுங்குகின்ற எனப் புகழ்ந்துரைத்தது புகழுவமை அணி.

**நவை மிக்கு இசையும் அசுரர் என**
**நல்லோர் வெறுக்கும் செயல் புரியும்**
**நரராய் உள்ளார் தம் தலையை**
**நரிநாய் கொடும் போர்க் களத்துஉருட்ட,**
**குவை மிக்கு இயலும் தவம் தானக்**
**கொற்றத்துடனே மநு நீதிக்**
**கோயில் பணிசெய் மன்னவர் கைக்**
**குலவு ஆழியை எண் திசை உருட்ட,**
**சுவை மிக்கு இசையும் துதி புகன்று**
**தொண்டர் விழி நீர் உரத்து உருட்டச்**
**சுக மாதவர் உன் ஆறெழுத்தைச்**
**சொல்லிச் செபமாலையை உருட்ட,**
**சிவை மிக்கு உவக்கும் தவ மதலாய்!**
**சிறுதேர் உருட்டியருள்வாயே!**
**சிரவைப் பதிச் சற்குரு மணியே!**
**சிறுதேர் உருட்டி யருள்வாயே!** 7

**நவைமிக்கு இசையும்** - குற்றங்கள் மிகுதியாகப் பொருந்தியுள்ள. **நரராய் உள்ளார்** - மனிதர்களைப் போல இருப்பவர்கள், அசுரர் எனச் செயல்புரியும் நரர் என இயையும், அவர்கள் மனிதப் பண்பு இல்லாதவர் ஆதலின் நரராய் உள்ளார் என்றார். **குவை மிக்கு இயலும்** - அதிகமாகக் குவிந்துள்ள. **கொற்றத்துடனே** - வெற்றியோடு, சிறப்பினோடு என்றவாறு. **கைக்குலவு ஆழி** - அரசாட்சி ஆகிய திகிரி, ஆக்ஞாசக்கரம். **சுவை** - இலக்கிய இன்பம். **உரத்து** - மார்பில். **சுக மாதவர்** - இன்பமயமான தவத்தைச் செய்யும் முனிவர்கள். **சிவை** - உமையம்மையார். **மதலாய்** - மைந்தனே.

குறிப்பு : முருகப்பெருமான் சிறுதேர் உருட்டும் காரணம் ஒன்றால் பல செயல்கள் நிகழ்வதாக இச்செய்யுள் கூறுகிறது. இவ்வாறு ஒரு காரணத்தால் பல செயல்கள் நிகழ்வதாகச் சொல்லுவதை மாணிக்கவாசகர் என்னும் அணி இலக்கண ஆசிரியரால் இயற்றப்பட்ட குவலயானந்தம் என்னும் அணி இலக்கணம் புற்புத அணி எனச் சுட்டுகிறது.

## *(வண்ண விருத்தம்)*

**தன தான தத்த .................தனதானா**

அலகு ஓதி முற்றல் அரிதாய் மிகுத்த
அதி கோரம் உற்ற உலகூடே
அமை ஏழ் இலக்க வகை யோனி முற்றும்
அமை நீள் பிறப்பில், அடிநாயேன்,
மல வேதனைக்குள் வினை மாயை புக்கு,
மலரோன் எழுத்தின் வழியே போய்,
மயல் ஆன துக்க அலையூடு பட்ட
வகை தீர் தரச்செய்து, அருளாலே
நலம் நீடு பத்தி அடியார் பதத்தின்
நய தூளி உச்சிமிசை சூடா
நனி ஆர்வம் மிக்க வழிபாடு இயற்றும்
நரன் ஆக வைத்து, என் உளமீதே

திலம் மேவு நெய்த் தகையில் நீடும் அப்ப!
சிறுதேர் உருட்டியருள்வாயே!
சிரவாபுரிக் கண் அமைதேவ! ஒப்புஇல்
சிறுதேர் உருட்டியருள்வாயே! 8

**அலகு ஓதி முற்றல் அரிது ஆய்மிகுந்த** - அளவு இவ்வளவு எனக் கூறி முடியாதபடி அதிகமாக உள்ள. **அதி கோரம் உற்ற** - மிகுந்த கொடுமை வாய்ந்துள்ள. **ஏழ் இலக்க வகை யோனி முற்றும்** - ஏழு என்னும் எண்ணிக்கை பெற்ற பிறப்புகள் அனைத்தும், அவை தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் என்பன. மல வேதனைக்குள் - வேதனை மலத்துள் என மாறுக, **துன்பத்தைத் தரும் ஆணவத்தில். வினைமாயை** - கருமமலம், மாயாமலம். **மலரோன் எழுத்து** - பிரமன் எழுதும் தலையெழுத்து. **மயல் ஆன** - ஆசை ஆகிய. **துக்க அலை** - ஒன்றன்பின் ஒன்றாக வந்து கொண்டிருப்பதாகிய கவலை என்னும் அலை, உருவகம். துக்கமாகிய வலை என உருவகப்படுத்தினும் அமையும். **பட்ட வகை** - சிக்கிக்கொண்ட நிலைமை. **பதத்தின்** - திருவடிகளின். **தூளி** - தூசி, துகள். **சூடா** - அணிந்து. **நரன் ஆக** - மனிதனாக. **திலம் மேவு நெய்த்தகையில் நீடு** - எள்ளினுள் எண்ணெய் போல் நிறைந்து விளங்கும். **அப்ப** - தந்தையைப் போன்றவரே.

தான தத்ததன தான தத்ததன
தான தத்ததன தானா

தேமலர்க் கமல வாசனுக்கு இனிமை
சேர் மறைப் பொருளை, மானார்
சேகரத்தில் அமைவான் மனத்தில் உப -
தேசம் இட்டு அருள்மெய் வாழ்வே!
மா மகத்துவ தயாளம் உற்றருளி,
வாய்மலர்க்கண் எழு பாஆம்
வாசம் மிக்க சுவை ஞான மெய்த் தொடையல்
வாகு முற்று அணி விநோதா!

சோம வத்திர தெய்வானை, மெய்க் குறவர்
தோகை மத்தியினில் வீறு ஆர்
சோதி அற்புத வைபோகம் உற்று அவிர் ச -
தோதயக் குமரவேளே!
சேமம் உற்று அடியர் வாழ ஒப்பு இல் சிறு
தேர் உருட்டியருள்வாயே!
தேசுஇயல் சிரவையூர் கொள் அப்ப! சிறு
தேர் உருட்டியருள்வாயே! 9

**தேம்** - தேன் நிறைந்த. தேம் கமல மலர் வாசன் என இயையும், பிரமன். **மறைப்பொருளை** - வேதங்களின் முடிந்த முடிவான உண்மையை. **மானார் சேகரத்தில் அமைவான்** - விலைமகளிரின் கூட்டத்தில் பொருந்தியிருந்தவராகிய அருணகிரிநாதரின், "பரத்தை அவா உடையார்க்குக் கைக்கிள்ளைப் பதம் அளித்த பரத்து ஐய" (பழனித் திருவாயிரம், யமக அந்தாதி 19) என்பார் வண்ணச்சரபர். அருணகிரிநாதர் வரலாறு வெளிப்படை. இனி மான் ஆர் சேகரத்தில் அமைவான் என்பதற்குக் கங்கை ஆகிய மங்கை பொருந்திய தலையோடு கூடிய சிவபிரான் எனினும் அமையும். இது சற்று வலிதிற்பொருள்கோள் ஆயினும் பொருட்சிறப்பு மிக்கதுதான். பொருள் வெளிப்படை. **மாமகத்துவ தயாளம்** - மிகுந்த பெருமையை உடைய கருணை மலர்வாய்க்கண் என மாறுக. **எழு பா** - தோன்றுகின்ற செய்யுள்கள். மலரில் தோன்றிய பாக்கள் ஆகிய மணம் மிக்க மாலை என்றது நயம். **தொடையல்** - மாலை. **வாகு** - தோள். தொடையல் முற்று வாகு அணி என இயையும். **விநோதா** - விருப்பம் உடையவரே. **சோம வத்திர** - சந்திரனைப் போன்ற முகத்தினை உடைய. **வீறு ஆர்** - பெருமை பொருந்திய. **வைபோகம்** - மகிழ்ச்சி. **சத உதய** - (அழிவற்ற) நிலையான பொருளாகத் தோன்றியவரே, **சதோதயம்** - வடமொழிக்குண சந்தி. **சேமம் உற்று** - இரட்டுற மொழிதலாகப் பாதுகாப்பு, இன்பம் என்னும் இருபொருள்களையும் கொள்க. **தேசு இயல்** - புகழ்மிக்க.

தன தானனத் தன தானனத்
தன தானனத் தனனா

துணி பூரணத் திரு ஆர் அருள்(ச்)
சுக போக மெய்த் தவமே
சுபம் மேவ, முத்தமிழால் உனைத்
துதி பாடும் அற்புதம் ஆர்
பணியூடு அமைத்து, அடியார் நடுப்
பதிவாக வைத்து, முன்நேர்
பகை ஆர் வினைத் திரளால் இடர்ப்
படுவேன் உடல்(ப்) புடை தோய்
பிணியான பற்று அறவே, அருள்(ப்)
பிரகாசம் உற்றிடவே,
பெருவாழ்வு அளித்து, இனி ஓர் உடல்
பெறுதீமை கெட்டு, அறவே
திணிஞான சித்தியிலேபுகச்
சிறுதேர் உருட்டுகவே!
சிரவாபுரத் திறைவா! சுகச்
சிறுதேர் உருட்டுகவே! 10

**துணி** - (இதுவே சரியான நெறி என) நிச்சயக்கப்பட்டதும். **பூரண** - முழுமையான பயனை அளிக்கக் கூடியதும். **திரு ஆர் அருள் சுக போக** - தெய்வீகத்தன்மை பொருந்திய இறைவன் திருவருளாகிய இன்பத் துய்ப்பைத் தருவதும். **மெய்** - பொய்த்தன்மை அற்றதும் ஆகிய, இந்த நான்கும் தவத்திற்கு அடைமொழிகள். **சுபம் மேவ** - தீமை கலவாத நன்மைகள் உண்டாக. **பணியூடு அமைத்து** - தொண்டில் ஈடுபடுத்தி. **பதிவாக** - நிலையாக. **பகை ஆர்** - விரோதம் மிக்க. **இடர்ப் படுவேன்** - வருந்துபவனாகிய என்னுடைய, வினையால் அணையும்பெயர். **உடற்புடை தோய்** - சரீரத்தின்மீது கொள்ளும், **பிணிஆன பற்று** - பந்தம் ஆகிய அபிமானம், உடலைத்தான் எனக் கருதும் அகப்பற்று. **உடல் பெறு தீமை** - பிறப்பு ஆகிய கெடுதி. **திணிஞான சித்தி** - செறிவான மெய்யறிவுப் பேறு, இங்கு ஞான நெறியைக் குறித்து நின்றது.

தனனதனத் தந்த தான - தய்யத் தனனா

பிரமன் எழுத்து என்று கூடி அல்லல்(த்) தரும் ஏழ்
    பிறவியிடத்து என்றும் மாழ்கு பொய் அற்றிடவே,
வர வைபவத் துங்க ஞான மெய்பெற்று, அடியார்
    மனதில் அழுத்து இன்பம் நீடு தெய்வத் துதி தோய்
சரசுவதித் தங்கை ஆர்வம் உள் உற்று, இசை நீள்
    சரதநிலைப் பொங்கம் மேவு செல்வத்தினதே
சிரசின் மறைக் கும்பல் சூடு மெய் அற்புதம் ஆர்
    சிரவை நகர்த் தண்டபாணி பிள்ளைத்தமிழே.

**பிரமன் எழுத்து** - ஊழ்வினை ஆகிய தலையெழுத்து. **கூடி** - ஓர் உயிரை அடைந்து. **அல்லல்** - துன்பம். மாழ்கு - இறப்புக்கு நிகரான வருத்தம் அடைகின்ற. **பொய்** - நிலையற்ற உடல், ஆகுபெயர். வர, வைபவ, **துங்க** - ஒருபொருட் பன்மொழி, மிக மிக உயர்ந்த என்பது பொருள். **இசை நீள்** - புகழ் மிக்க. **சரத நிலைப் பொங்கம்** - உண்மையான சிறப்பு. செல்வத்தினதே என்புழி ஏகாரம் அசை. மறைக்கும்பல் சிரசில் சூடு என இயையும்.

பிள்ளைத்தமிழ் செல்வத்தினது என்பது முடிவு.

## *வாழி வெண்பா*

வாழி சிரவை நகர்! வாழி தண்டபாணி அருள்!
வாழிய கௌமார மடாலயச் சீர்! - வாழி இசை!
ஆரணங்கள் சொல்லும் நலம் அத்தனையும் எத்தலத்தும்
பூரணமாய் வாழி பொலிந்து!

**இசை** - புகழ், இனி புகழைக் கூறும் தோத்திர நூல்கள் என ஆகுபெயர் ஆக்கினும் சிறப்பு. **ஆரணங்கள்** - வேதங்கள். **எத்தலத்தும்** - உலகம் முழுவதிலும் என்பது கருத்து.

சிரவையாதீன வெளியீடுகள்

# பிள்ளைத்தமிழ் வரிசை

## தவத்திரு கந்தசாமி சுவாமிகள் அவர்களின் நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | திருப்பேரூர்ப்பச்சைநாயகி பிள்ளைத்தமிழ் | 50.00 |
| 2. | பத்திராசலம் இராமச்சந்திரன் பிள்ளைத்தமிழ் | 50.00 |
| 3. | சிரவைத் தண்டபாணிக்கடவுள் பிள்ளைத்தமிழ் | 70.00 |

## கவியரசு கு. நடேசகவுண்டர் அவர்களின் நூல்கள்

| | | |
|---|---|---|
| 4. | எட்டிகுடி முருகன் பிள்ளைத்தமிழ் | 40.00 |
| 5. | தவத்திரு. சிரவை கந்தசாமி சுவாமிகள் பிள்ளைத்தமிழ் | 30.00 |
| 6. | திருச்சுழியல் துணைமாலையம்மன் பிள்ளைத்தமிழ் | 30.00 |
| 7. | சீகாழி திருநிலைநாயகி பிள்ளைத்தமிழ் | 30.00 |
| 8. | திருவேரகம் சுவாமிநாதன் பிள்ளைத்தமிழ் | 30.00 |
| 9. | மங்கையர்க்கரசியார் பிள்ளைத்தமிழ் | 30.00 |

## வெளிவர உள்ளவை

1. குருந்தமலை குழந்தை வேலாயுதசாமி பிள்ளைத்தமிழ்
2. சிரவை தவத்திரு இராமானந்த சுவாமிகள் பிள்ளைத்தமிழ்
3. பேரூர் தவத்திரு சாந்தலிங்க சுவாமிகள் பிள்ளைத்தமிழ்

## சிறப்பு வெளியீடு

## தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பனுவல் திரட்டு

33 நூல்கள் எளிய உரையுடன்

(மொத்தம் 2000 செய்யுள்கள்)

**ரூபாய் 250 மட்டும்.**

சில படிகளே விற்பனைக்கு உள்ளன